THE CASKET OF GEMS.



# அருங்கலச்செப்பு

இரத்தினத்திரயம்

பதவுரை, விரிவுரை, மேற்கோள்கள், உதாரணக்கதைகள், படங்கள் உள்பட.

இஃது

விழுப்புரம் தாலூகா, வீடூர்,

ஸ்ரீ. A. தர்மஸாம்ராஜ்ய சாஸ்திரியார் அவர்களால்

திருத்தி எழுதி அமைக்கப்பட்டு,

கும்பகோணம்,

டவுன் ஹை ஸ்கூல், உபாத்தியாயர்,

ஸ்ரீ. S. ஜயராமையா அவர்களால்

பதிப்பிக்கப்பட்டது.



1941

ஸ்ரீ கோமளாம்பா பிரஸ், கும்பகோணம்.

விலை ரு. 1—4—0] [தபால் செலவு வேறு.

" நற்றவர்க் குச்சித்தி நல்கவல் லாற்கிரு நால்வினையுஞ்
செற்றவற் குச்செய்ய தாமரை யேறிச்செவ் வேநடக்கக்
கற்றவற் குக்குரு டொத்துழல் வேற்குநற் காட்சிதந்த
மற்றவர்க் குச்செய்வ தாளல்ல தேதுங்கை மாறிலையே"
(திருநூற்றந்தாதி—46).

ஸர்வாந் ஜிநேந்த்ரசந்த்ராந்
ஸித்தாநாசார்யபாடகாந் ஸாதூந் ।
ரத்நத்ரயஞ்ச வந்தே ரத்நத்ரயஸித்தயே ஸதா ॥

ஸம்பூஜகாநாம் ப்ரதிபாலகாநாம்
யதீந்த்ரஸாமாந்யதபோதநாநாம் ।
தேசஸ்ய ராஷ்ட்ரஸ்ய புரஸ்ய ராஜ்ஞ꞉
கரோது சாந்திம் பகவாந் ஜிநேந்த்ர꞉ ॥

க்ஷேமம் ஸர்வப்ரஜாநாம் ப்ரபவது பலவாந்
தார்மிகோ பூமிபால꞉
காலே காலே ச ஸம்யக் வர்ஷது மகவாந்
வ்யாதயோ யாந்து நாசம் ।
துர்பிக்ஷம் சௌரமாரீ க்ஷணமபி ஜகதாம்
மாஸ்ம பூஜ்ஜீவலோகே
ஜைநேந்த்ரம் தர்மசக்ரம் ப்ரபவது ஸததம்
ஸர்வஸௌக்யப்ரதாயி ॥

ஸ்ரீமத்பரமகம்பீரம் ஸ்யாத்வாதாமோகலாஞ்சநம் ।
ஜீயாத் த்ரைலோக்யநாதஸ்ய சாஸநம் ஜிநசாஸநம் ॥
(க்ரியாகலாபம்)

ஸர்வமங்கலமாங்கல்யம் ஸர்வகல்யாணகாரகம் ।
ப்ரதாநம் ஸர்வதர்மாணாம் ஜைநம் ஜயது சாஸநம் ॥

ஸ்ரீ வீதராகாய நம:

# பதிப்பாளர்க் குறிப்பு.

**வாசகர்களே !**

"அருங்கலச் செப்பு" என்னும் இந்நூலுக்கு மிக விரிவான முகவுரை வீடூர் ஸ்ரீ A. தர்மஸாம்ராஜ்யநயினார் அவர்களால் எழுதப்பட்டிருப்பதால், பதிப்பாளன் என்ற முறைமையில் யான் சொல்லக் கடமைப்பட்டிருக்கிற சில விஷயங்களைமட்டும் இங்குக் குறிப்பிட விரும்புகிறேன்.

என் மாதாவழிப் பாட்டனார் இராஜமன்னார்குடி சி. அய்ய முதலியார் அவர்களால் எழுதப்பட்ட இந்நூலின் கையெழுத்துப் பிரதி ஒன்று எனக்குக் கிடைத்தது. அதனைப் படித்தபோது "பறையன் மகனெனினும்" என்ற தொடக்கமுள்ள 37-வது செய்யுள் தற்கால நிகழ்ச்சிகளுக்கு அனுகுணமாகவிருந்ததால் என் மனத்தைக் கவர்ந்தது. இதனை யாரேனும் அச்சிட்டிருப்பரோவென்று ஆராய்ச்சி செய்ததில் திருக்கலம்பகம், திருநூற்றந்தாதி, அறநெறிச்சாரம் முதலிய அச்சிடப்பட்ட நூல்களில் இதனின்றும் சிற்சில பாக்களை மேற்கோளாகமட்டும் கொள்ளப்பட்டிருந்ததைக் கண்டேன். "இதை நாம் ஏன் அச்சிட்டுக் காப்பாற்றலாகாது?" என்ற ஓர் அவாக்கொண்டு அதனைப் பிரதி செய்து எனது நண்பரான இந்நகர் ஸ்ரீ வேங்கடேஸ்வர் பிரஸ் சொந்தக்காரர் V. ஸ்ரீநிவாஸ ராவ் அவர்களைக் கலந்து யோசித்ததில் அவர் மிகக் குறுகிய செலவில் அச்சிட்டுக்கொடுப்பதாகக் கூறினர். அதனால் தைரியமுற்ற நான் வீடூர் ஸ்ரீ A. தர்மஸாம்ராஜ்ய நயினாரைத் தெரிந்து கேட்டதில் அவர் ஏற்கனவே அச்சிடப்பட்ட ஒரு மூலப்பிரதியை எனக்கு அனுப்பிவைத்தார். அதனை ஒத்துப்பார்க்க மிகப்பிழைபாடுகளுள்ளதாய் என்னால் திருத்தக்கூடாததாய்த் தோன்றவே அன்னாரையே அதனைத் திருத்திக், குறிப்புகளுடன் அனுப்பும்படி வேண்டினேன். அன்னாரும் அப்பணியை ஏற்று முழுவதையுமே மாற்றி எழுதியும், சீரிட்டும், ஒழுங்குபெறவமைத்தும், பதவுரை, விரிவுரை, குறிப்புரை, மேற்கோள்கள், உதாரணக்கதைகள் முதலியன சேர்த்தும் எழுதிக்கொடுத்தருளினர். அதனைப் பதிப்பிக்க முன்வந்த என் நண்பர் ஷை ஸ்ரீநிவாஸராவ் இன்று சரியாய் ஒரு வருஷம்முன் காலஞ்சென்றனர். இது ஒரு துர்ப்பாக்கியமே.

பேப்பர் முதலியன ஒன்றுக்கு மூன்றாய் விலை ஏறியிருக்கும் இக் காலத்தில் இதனை அச்சிடுவது மிக ஶ்ரமமாகுமேயென்று யோஜிக்குங்கால் ஸ்ரீ தர்மஸாம்ராஜ்ய நயினாரவர்களே தம் உறவினர் ஒருவர் தானத்துக்கென்று அளித்ததாகக் கூறி ஒரு நூறு ரூபாய் வாங்கி எனக்கு உதவியருளினார். அதற்கு நான் என்ன கைம்மாறு செய்வது என்பது எனக்குத் தோன்றவில்லை. இந்நூல் சகலருக்கும் புரியும்படி பொருள் பதம் பதமாக விளக்கப்பட்டும், பின்னை அது அழிந்துபோவதினின்றும் காப்பாற்றப்பட்டதுமான பெருமை அன்னாருக்கே உரியது என்பதை நான் பிரஸம்ஸிப்பதைத் தவிற வேறொன்றும் செய்வதற் கியலவில்லை. அன்னாருடைய ஆழ்ந்த படிப்பும், புத்திநுட்பமும், ஊக்கமும், உதார குணமும், தர்மவாத்ஸல்லியமும் என்றவற்றை இப்புத்தகத்தைப் படிப்போர் அனைவரும் அறியாமற் போகமுடியாது. இன்னும் இதைப்போன்று படிப்பாரற்றும், கேட்பாரற்றும் மங்கி மறைவுற்றுக்கிடக்கும் அரிய ஜைனமத நூல்களை உலகினுக்கு உயிர்ப்பித்துக்கொடுத்துச் சேவைசெய்ய ஊக்கங்குன்றாது அன்னார் சரீர சௌக்கியத்துடன் நீடூழிகாலம் வாழ்ந்திருக்கக் கடவுளைப் பிரார்த்திக்கிறேன். இப்புத்தகத்தால் கிடைக்கும் ஊதியத்தையும் அன்னார் செய்யும் அப்பணிக்கே அர்ப்பணஞ்செய்யத் தீர்மானித்துளேன். எனது எண்ணம் நிறைவேறக் கடவுள் அருள்புரிவாராக.

இப்புத்தகத்தின் பொருள்களை விவரிக்கக்கூடிய 23-உதாரணக் கதைகள், ஸ்ரீ சகலகீர்த்தி ஆசாரியார் என்பவரால் இயற்றப்பட்ட ப்ரஶ்நோத்தர ஶ்ராவகாசாரம் என்னும் வடமொழி நூலிலிருந்து ஷை ஸ்ரீ A. தர்மஸாம்ராஜ்ய நயினார் அவர்களால் தமிழில் மொழி பெயர்த்தனுப்பப்பட்டன. அவை மிக விரிவாயும், அப்படியே பதிப்பிக்கப்பட இயலாதவையாயும் தோன்றியதால் அன்னார் உத்தரவின்மேல் அவற்றை நான் விஷயங்களை விடாமல் கூடுமான அளவு சுருக்கி எழுதி “ஶ்ராவகாசார நீதிக்கதைகள்” எனப் பெயரிட்டு இந்நூலுக்கு 2-வது பாகமாகச்சேர்த்துளேன். இக்கதைகளை விளக்கத்தக்க நான்கு அழகிய படங்களையும் கல்கத்தாவிலிருந்து அச்சடித்து வரப்பெற்றும், இந்நூலுக்கு வேண்டிய மற்றைச் செய்யுள் அகராதி, அரும்பொருள் விளக்கம் முதலியவைகளும் சேர்த்தும் பதிப்பித்துளேன்.

இதனை அச்சிடும்போது ஜைனமத நூல்களைப் பதிப்பிப்பதில் மிக ஈடுபட்ட மகாமகோபாத்யாய, ஸ்ரீ உ.வே. சாமிநாதையர் அவர்களை இந்நூலைப்பற்றின விஷயங்களைத் தெரிவித்து உதவுமாறு வேண்டிக்கொண்டேன். அவர்கள் தாம் அறுபது வருஷங்களுக்குமுன் ஒரு சிநேகிதருடைய ஏட்டுப்பிரதியிலிருந்து எழுதி வைத்திருந்த மூலமட்டும் உள்ள கையெழுத்துப்பிரதி ஒன்றை எனக்கு அனுப்பிவைத்தனர். அது மிகவும் மை ஊறி, கடிதம் மக்கி, மிக ஜீர்ணமான ஸ்திதியிலிருந்தது என்றாலும், ஒத்துப் பார்த்துப் பாடபேதங்களைக் கண்டுகொள்ள மிக்க உதவியாயிற்று. அவர்கள்செய்த உதவிக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

தமக்குப் பல வேலைகளிருந்தும் அச்சிடும் ப்ரூப்களைச் சலிப்பின்றி, மன உற்சாகத்துடன் "ஜைனமதத்திற்கும் தொண்டு செய்யும் பாக்கியம் பெற்றேன்" என்று கூறி அவ்வப்போது பிழையறத் திருத்திக்கொடுத்துதவிய எனது நண்பரும், உடன் உபாத்தியாயருமான இந்நகர் டவுன் ஹைஸ்கூல் தலைமைத்தமிழ்ப் பண்டிதர், ஸ்ரீ ஊ. சா. வேங்கடராமையர் அவர்களும், இப்புத்தகத்தை மிகஅழகாக அச்சிடுவித்துதவிய ஸ்ரீ கோமளாம்பா பிரஸ், நீதிக்கதைகளை அச்சிடுத்துதவிய ஸ்ரீ வேங்கடேஸ்வர் பிரஸ் என்ற இரு அச்சாபீஸ் சொந்தக்காரர்களும், வேலைக்காரர்களும் செய்திருக்கும் உதவிகள் நானும், இதனைப் படிப்போரும் ஒருபோதும் மறக்கற்பாலனவல்ல,

கடைசியில் முக்கியமாக, இந்நூலைப் பதிப்பிக்க மிகப் பேருதவியான பொருள்உதவியைச் செய்த திண்டிவனம் தாலூகா, பேராவூர், பஞ்சாயத்துக் கோர்ட் பிரஸிடெண்ட் ஸ்ரீமான் வ. சக்கரவர்த்தி நயினார் அவர்கள் பாரியை ஸ்ரீமதி தனமதி அம்மாளுடைய தர்மம் இந்த ஜன்மத்திலும் மறு ஜன்மத்திலும் அவர்களுக்குப் பெருமையையும், புகழையும், பேரின்பத்தையும் கொடுத்துதவுவதாக வேண்டுகிறேன்.

குற்றங் களைந்து குணத்தைக் கொள்வது கற்றறிந்த மாந்தர்களின் கடனாகும்.

கும்பகோணம், }
12—10—1941 }

S. ஜயராமையா,
டீச்சர், டவுன் ஹைஸ்கூல்.

உ

சிவமயம்.

Maha-Mahopadhyaya
Dakshinatya Kalanidhi
Dr. V. SWAMINATHAIYAR,
MADRAS.

TYAGARAJA VILAS,
TIRUVETTISWARANPET,
TRIPLICANE, 28—8—41.

ஸ்ரீமான் ஜயராமையா அவர்களுக்கு,

அன்புள்ள ஐயா,

தாங்கள் இம்மாதம் 23௳ எழுதிய கடிதமும், அனுப்பிய அருங்கலச் செப்பின் அச்சிட்ட பாரங்களும் கிடைத்தன. ஜைன மத கிரந்தங்களில் விசேஷப் பயிற்சியுள்ள குடும்பத்தில் பிறந்த தாங்கள் அருங்கலச் செப்பைப் பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்டிருப்பதையறிந்து மிக்க ஸந்தோஷத்தை யடைகிறேன்.

அறுபது வருஷங்களுக்கு முன் ஒரு நண்பரிடமிருந்து கிடைத்த ஏட்டுச் சுவடியிலிருந்த இந்நூலை ஒரு குறிப்புப் புஸ்தகத்தில் நானே பிரதி செய்துகொண்டு சுவடியைத் திருப்பிக் கொடுத்து விட்டேன். நான் பிரதி செய்த கையெழுத்துப் புஸ்தகம் மிகவும் ஜீரணமான நிலையில் இருக்கிறது. காகிதம் பழமையுற்றுப் பலஹீனமாக இருக்கிறது. மை ஊறிப்போய் எழுத்துக்கள் தெளிவாகப் புலப்படவில்லை. ஆயினும் பழைய ஞாபகங்களை உண்டாக்குவதால் அதனை நான் பாதுகாத்து வைத்திருக்கிறேன். தாங்கள்கொண்டுள்ள ஊக்கத்தையறிந்து அதனை இன்று தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அருங்கலச் செப்போடு வேறு சில பிரபந்தங்களையும் அதில் பிரதி செய்திருக்கிறேன். அதை ஜாக்கிரதையாக வைத்து ஒப்புநோக்கிவிட்டு விரைவில் திருப்பி அனுப்பும்படி விரும்புகிறேன்.

* * * * * * * *

தங்கள் முயற்சி சிறப்பாக நிறைவேறவேண்டுமென்று ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கிறேன்.

* * * * * * * *

இங்ஙனம், அன்புள்ள,

(ஒ-ம்) வே. சாமிநாதையர்.

# ஓர் அணிந்துரை.

“ அருங்கலச் செப்பு ” என்ற அருமையான நூலைப்பற்றித் தமிழுலகம் அறியும். அது, ஜைனமத சம்பந்தமான தரும லக்ஷணங்களையும், கைக்கொள்ளும் முறைகளையும், அவைபற்றிய பிறசெய்திகளையும் விளங்க உரைப்பது, ஜைனமதச் சான்றோர் களைப்பற்றி இலக்கிய, இலக்கணங்களைக் கற்றவர்களுக்கு அதிகம் கூறவேண்டியதில்லை. தமிழ்மொழிக்கு ஆக்கந்தந்த சான்றோர் களில் ஜைனமதச் சான்றோர்களின் தொகை குறைந்ததன்று. மொழிவளர்ச்சியின் எல்லாத் துறைகளிலும் அவர்களுடைய திருத்தொண்டு தலைசிறந்து விளங்குகின்றது. மதசம்பந்தம் இல்லாமல் அவர்களுடைய நூல்கள் அமைந்திருக்குமானால் இந் நாள் அவர்கள் இயற்றியளித்த நூல்களை தமிழுலகில் பெரிதும் பயிலப்படும் என்பது தவறாகாது.

நண்பர் ஸ்ரீ ஐயராமையா அவர்கள், தமக்குப் பரம்பரைப் பொருளாகக் கிடைத்த “ அருங்கலச் செப்பு ” என்னும் இந்நூலை வெளியிடக்கருதி வீடூர், ஸ்ரீ A. தர்மஸாம்ராஜ்ய நயினார் அவர் களைக்கொண்டு விரிந்த முறையில் உரை எழுதுவித்து அச்சியற் றுங்கால் அடியேனுடைய ஊழியத்தை விரும்பினார்கள். அப்போது எனக்கு அந்நூல் முழுவதையும் படித்துணரும் சந்தர்ப்பத்தை அளித்தது. ஜீவக சிந்தாமணி, சூளாமணி, அறநெறிச் சாரம் முதலிய நூல்களிலும், உரைகளிலும் தோன்றும் மதசம்பந்த மான நீதியுரைகள், ஆசாரமுறைகள் என்பன அனைவர்க்கும் செவ்வனே விளங்குவனவல்ல. அவ் விளங்காதனவற்றை இந்த அருங்கலச் செப்பு இனிது விளக்கத் துணை செய்யக்கூடியது, தொடங்கிய பொருளைச் சுருங்கிய முறையில் விளக்கக் கருதிய ஆசிரியர் தமது கொள்கைக்கேற்ப முதற்பாவால் இந்நூலை அமைத்திருப்பது மிகவும் போற்றத்தக்கது. இந்நூல் இப் பொழுது வெளியிடப்படும் உரையின்றேல் எளிதில் பொருள் விளங்காதென்பது இதனை ஒரு முறை முற்றும் படிப்போர்க்கு விளங்கும். ஜைனமத நூல்களின் பொருளை உள்ளபடி உணர

விரும்பும் தமிழன்பர்களுக்கு இந்நூல் தக்கதொரு சாதனமாகும். இந்நூலைப்பற்றிய பிறசெய்திகளும் இதில் சேர்ந்திருப்பது கற்போர்க்குப் பெரும் பயன் அளிக்கும். இத்திருத்தொண்டில் முன்னின்று முயன்று நிறைவேற்றிய அன்பர்கள் போற்றற்குரியவர்கள். அவர்களது கருத்து இனிது நிறைவேறுவதாக.

கும்பகோணம்,
12—11—41 } **உ. வே. சா. வேங்கடராமையன்.**

## அருங்கலச் செப்பில் எடுத்தாளப்பட்ட

## உரைமேற்கோள் நூல்கள்.

—O—

தமிழ் நூல்கள்.

1. அறநெறிச் சாரம்
2. மேரு மந்தர புராணம்.
3. யசோதர காவியம்.
4. ஜீவக சிந்தாமணி.
5. திருக் கலம்பகம்.
6. நீலகேசி.
7. திருக் குறள்.
8. சூளாமணி.

—o—

வடமொழி நூல்கள்.

9. க்ரியா புஸ்தகம்.
10. ப்ரஸ்னோத்தர ஶ்ராவகாசாரம்.
11. இரத்னகரண்டக ,,
12. ஜீனேந்திர சம்பு.
13. க்ஷத்ரசூடாமணி.
14. தத்வார்த்த சூத்ரம்.
15. தர்ம ஶர்மாப்யுதய காவியம்.
16. கீத வீதராக ப்ரபந்தம்.
17. பஞ்சாஸ்திகாயம்.

# முகவுரை.



திருமலி யருகன் றிருவடி தம்மைப்
பெருமகி மூவகையிற் போற்றுவம் யாமே.

"அருங்கலச் செப்பு" என்ற இந்நூல் ஜைன சமயத்தைப் பொருந்தி இல்லறத்தில் நிகழும் ச்ராவகர்களின் ஒழுக்கங்களைப் பற்றிச் சுருக்கமாய்க் கூறுவதோர் சிறந்த நூலாகும். இது தமிழின் அருமையினை நன்கனுபவித்தறிந்த அரும் பெரும் புலவர்களின் உள்ளத்தினைக் கவரக்கூடிய சுவையின்மிக்க குறள் வெண்பா யாப்பினுலமையப்பட்டது. இல்வாழ்க்கையினர் ஒழுக்கங்களை நூற்றெண்பது வெண்பாக்களால் சுருக்கமாகக் கூறியிருப்பினும் "சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல்" என்றபடி பொருள்கள் பசுமரத்தறைந்த ஆணிபோல் தெள்ளிதின் விளங்கக் கூறப்பட்டுள்ளன. மற்றும், இதன்கண் நற்காட்சி (ஸம்யக்தரிசனம்), நன்ஞானம் (ஸம்யக்ஞானம்), நல்லொழுக்கம் (ஸம்மியக்சாரித்திரம்) என்ற மோக்ஷமார்க்கத்தைப் பற்றி யாவரும் சுலபமாய் அறியும்படி அவை எளியநடையிற் கூறப்பட்டுள. இதனருமைபற்றி இந்நூலின்கண் ஈற்றில் கூறப்பட்டிருக்கும் ஆறு வெண்பாக்கள் மிகவும் போற்றத்தக்கவை. இதன் சொற்சுவை பொருணயங்களை நோக்குங்கால் பண்டையதென்றே கொள்ளல் வேண்டும். இத்தகைய சிறப்பு வாய்ந்த இதனை இயற்றிய ஆசிரியர் இன்னாரெனவும், இன்னகாலத்தவரெனவும் புலப்படவில்லை. ஆயினும், இந்நூலுக்கு முதனூல் ஸ்ரீ சமந்தபத்ராசாரியரால் இயற்றப்பட்ட இரத்ன கரண்டகம் (ரத்நகரண்டகம்) என்று தோன்றுகின்றது. ஆனதுபற்றியே இதற்குத் தமிழில் அதன் பெயரையே நிறுவப்பட்டது. ரத்நம் — அருங்கலம், கரண்டகம் — செப்பு. இரத்ன கரண்டகம் என்ற வட (சொல்) மொழிக்குச் சரியாகத் தமிழில் அருங்கலச் செப்பு என்பதாயிற்று. மேற்கூறிய இரத்ன கரண்டகத்திற் கூறிய விஷயங்களையே இதன்கண் கூறியிருத்தலால் இரத்ன கரண்டகம் இதற்கு முதனூல் என்பதற்கு யாதொரு ஐயமுமின்று,

றிற்க, இதற்கு ஒரு பழைய உரை நம் நாட்டில் ஏட்டுப் பிரதியில் உளது. அதன் கண் ஏடெழுதுவோரால் பெருகிய பிழைகள் மிகவும் செறிந்து காணப்பட்டன. வெண்பாக்கள் சில இடங்களில் பொருளுக்குத் தகுந்தவாறின்றி வரிசை மாறியும் இருந்தன. இதன் மூலபாடம் மட்டும் திருக்கலம்பகத்துடன் சேர்த்துச் சென்ற சுபானு-ஸு நரியம்புத்தூர், கு. பாகுபலிநயினார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. அதன்கண்ணும் வெண்பாக்களின் வரிசை அவ்வாறே மாறுபட்டும் சில எழுத்துப் பிழைகளும் காணப்பட்டன. அவ்வச்சுப் புத்தகத்தையும், ஏட்டுப்பிரதியில் உள்ள பழைய உரையையும் தழுவி ஒருவாறாக இயன்றவரை சில திருத்தங்கள் செய்து செம்மைப்படுத்தினேன். ஒவ்வொரு வெண்பாவுக்கும் விசேஷ உரையும் சிறிது சேர்க்கப்பட்டது.

இந்நூலின்கண் சிலவற்றிற்கு உதாரணமாக இருபத்து மூன்று கதாநாயகர்களின் பெயர்கள்மாத்திரம் நவிலப்பட்டுளது. அக்கதாநாயகர்களின் கதைகளை ஸ்ரீ ஸகலகீர்த்திஆசாரியரால் இயற்றப்பட்ட "ப்ரச்நோத்தர ச்ராவகாசாரம்" என்ற கிரந்தத்திலிருந்து சுருக்கமாய் எழுதியுள்ளேன்.

இதனை அச்சியற்றல் வேண்டுமென்ற விருப்பமுற்று இதனைச் செம்மைப்படுத்தித்தருமாறு தம்மால் எழுதப்பட்ட பழையஉரையுடன் கூடிய கையெழுத்துப் பிரதியொன்றை கும்பகோணம், டவுன் ஹைஸ்கூல், டீச்சர், ஸ்ரீமான் S. ஐயராமையா அவர்கள் எனக்கனுப்பினார்கள். அதனையும், மற்றும் என்னிடமுள்ள பழைய ஏட்டுப்பிரதி ஒன்றையும் கொண்டு இதனை ஒருவாறாகச் செம்மைப்படுத்தினேன்,

இங்ஙனம் எழுதப்பட்ட இதனை, ஜைனசமயத் தமிழ்நூல்கள் பலவற்றை ஆராய்ந்தறிந்த அனுபவமுடையாரும், யசோதர காவியத்திற்கு அருமை வாய்ந்த ஒரு புத்துரையை எழுதியிருப்பவரும், தமிழ் வித்வானுமாகிய காஞ்சீபுரம், ஸ்ரீமான். ஸ்ரீநிவாஸ முதலியார் அவர்களின் பார்வைக்கு அனுப்பி, இலக்கண இலக்கிய நியமங்களையும், மற்றும் சில விஷயங்களையும் கவனித்துச் சீர்படுத்தித்தருமாறு வேண்டினேன். அன்பார்ந்த

அப்பெரியாரும், அவ்வாறே கூடியவிரைவில் வெகுவாய்ச் சீர் படுத்தியனுப்பியதுடன், இனியும் இதற்குத் தம்மாலியன்ற உதவியினைச் செய்வதாகவும் வாக்களித்து, விரைவில் அச்சிடல் வேண்டுமென்று ஊக்கியதையும் நோக்குங்கால் அன்னவரின் அன்பிற்கு இயற்றும் கைம்மாறுவது ஒன்றுங்காண்கிலேன். அவருடைய திருத்தங்கள் இதன்கண் பெரும்பாலும் உள என்பதனைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இதன் அச்சுபாரத்தை (புரூப்) திருத்தம் செய்யுங்கால் எனக்குச் சிறிதும் சிரமம் கொடுக்காமல் எழுத்துப்பிழைகளையும், மற்றும் சில இடங்களில் அருமையான விஷயங்களையும் கவனித்துத் திருத்தம் செய்துகொடுத்த கும்பகோணம், டவுன் ஹை ஸ்கூல், தலைமைத் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான். ஊ. சா. வேங்கடராமையர் அவர்களின் நன்றி என்றும் மறக்கற்பாலதன்று.

இதனைப் பதிப்பிக்கற்குத் தொடங்குங்கால் சாஸ்திரதானம் செய்ய விருப்பமுற்ற என் உறவினர்களில் ஒருவராகிய திண்டிவனம் தாலூகா, பேராவூர், ஸ்ரீமான். வ. சக்கரவர்த்தி நயினார் பாரியை, ஸ்ரீமதி. தனமதி அம்மாளால் செய்த பொருளுதவியானது போற்றிப் புகழத் தகுந்ததாகும்.

இதனைப் பதிப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டு மிகவும் சிரமம் எடுத்துக்கொண்டு, பதிப்பிக்கும் முறையில் முழுப்பொறுப்பையும் ஏற்று, இதனைச் சிறப்புடன் பதிப்பித்த பதிப்பாளரும், என் சுற்றத்தார்களில் ஒருவருமாகிய கும்பகோணம், டவுன் ஹை ஸ்கூல், டீச்சர், ஸ்ரீ S. ஐயராமையா அவர்களின் நன்றி மறவாமையே அன்னவர்க்கு இயற்றும் கைம்மாறாகும்.

இதனை எழுதுங்கால் மறதியினாலும் அறிவிற்குப் புலப்படாமலும் ஏற்பட்ட வழுக்கள் காணப்படுமாயின் ஆன்றோர்கள் அனைத்தையும் க்ஷமித்துக் குற்றத்தை நீக்கிக் குணத்தினையே கொள்ளவேண்டுகிறேன்.

வீடூர். 
1—11—41

A. தர்மசாம்ராஜ்யம்.

𑌧𑌰𑍍𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍁𑌖𑌾𑌕𑌰𑍋 𑌹𑌿𑌤𑌕𑌰𑍋
𑌧𑌰𑍍𑌮𑌂 𑌬𑍁𑌧𑌾𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌵𑌤𑍇
𑌧𑌰𑍍𑌮𑍇𑌣𑍈𑌵 𑌸𑌮𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌶𑌿𑌵𑌸𑍁𑌖𑌂
𑌧𑌰𑍍𑌮𑌾𑌯 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌨𑌮𑌃 ।
𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌪𑌰𑌃 𑌸𑍁𑌹𑍃𑌦𑍍𑌭𑌵𑌭𑍃𑌤𑌾𑌂
𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌮𑍂𑌲𑌂 𑌦𑌯𑌾
𑌧𑌰𑍍𑌮𑍇 𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑌹𑌂 𑌦𑌧𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌦𑌿𑌨𑌂
𑌹𑍇 𑌧𑌰𑍍𑌮 𑌮𑌾𑌂 𑌪𑌾𑌲𑌯 ॥

" ஆக்குவ தேதேனி லறத்தை யாக்குக
போக்குவ தேதேனில் வெகுளி போக்குக
நோக்குவ தேதேனில் ஞான நோக்குக
காக்குவ தேதேனில் விரதங் காக்கவே "

(*மேருமந்தர புராணம்*).

" திங்கண் மும்மாரி பெய்க திருவறம் வளர்க செங்கோ
னன்கினி தரச ருள்க நாடெலாம் விளைக மற்று
மெங்குள வறத்தி ளேரு மினிதூழி வாழ்க வெங்கள்
புங்கவன் பயந்த நன்னூல் புகழொடும் பொலிக மிக்கே "

(ஜீவக *சிந்தாமணி*).

## ஜினதர்மம்

" ஊழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை தானே "

(*திருக்கலம்பகம்*).

---

# அருங்கலச் செப்பு

## நூற்பொருள் சுருக்கம்.

லோகம், அலோகம் என்றவற்றின் ஸ்வரூபங்கள், ஜீவாதி பதார்த்தங்களின் குணங்கள், பூத (இறந்த), அனாகத (எதிர்), வர்த்தமான (நிகழ்) என்ற காலவிகல்பங்கள் முதலிய எல்லாவற்றையும் ஒருங்கே அறியப்பெற்றவர் ஸர்வக்ஞராகிய அர்ஹத் பரமேஷ்டிகள். அவரை கிரந்தகர்த்தா வணங்கி அவரால் கூறப்பட்ட யாதொரு குற்றமுமில்லாத (மூடம் முதலிய 25-குற்றங்களும் நீங்கிய) ஜினதர்மத்தைக் கூறுகிறேன் என்கிறார்.

## ஜினதர்மம்.

ஜினதர்மமானது இரத்தினத்திரயமாகிய ஸம்யக்தரிசனம் (நற்காட்சி), ஸம்யக்ஞானம் (நன்ஞானம்), ஸம்யக்சாரித்திரம் (நல்லொழுக்கம்) ஆகிய மூன்று பிரிவுகளையுடையது. அவற்றுள்:-

## ஸம்யக் தரிசனம் (நற்காட்சி).

இவ்வுலகில் நிலையான மெய்ப்பொருள்கள் ஆப்தன், ஆகமம், முனிவர், ஜீவாதிபதார்த்தங்கள் என்பன. அவை:—

**ஆப்தன்:—** பசி முதலிய 18-குற்றங்களையும் நீக்கி, ஸகலத்தையும் அறிந்தவரும்; இல்லறம், துறவறம் என்ற இரண்டையும் கூறியவரும்; அனந்ததரிசனம், அனந்தஞானம், அனந்தசுகம், அனந்தவீரியம் என்ற அனந்தசதுஷ்டயங்களையுடையவரும்; இராகம், துவேஷம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்றவற்றில் ஒன்றும் தன்னிடத்தில் இல்லாதவரும் ஆகிய கடவுள் ஆகும்.

**ஆகமம்:—** பரமாகமம். அந்த ஆப்தனால் கூறப்பட்டது. என்றும் அழியாதது. ஆனாலும், காலவிகற்பத்தால் சிறிது காலம் மறைந்திருந்து பின் நற்றீக்காலத்திலும், தீநற்காலத்திலும் தோன்றும் தீர்த்தங்கர பரம ஜினதேவர்களால் வெளிப்

*படுத்தப்படுவது. இது பொருள்களின் நிலைமைகளை விளக்கி ஜீவன்களின் ஸம்ஸார சுழற்சியாகிய துக்கத்தைத் துடைப்ப தாகும்.*

**முனிவர்:—** *அந்த ஆப்தனால் அருளப்பெற்ற* ஆகமாதி நூல் *களில் கூறியவாறு* பஞ்சேந்திரியங்களை *வென்றும்;* பாஹ்யப் பரிக்கிரஹங்கள்-10, அப்யந்தரப்பரிக்கிரஹங்கள்-14 *இவற்றை விட்டு விலக்கியும்;* ஸப்த தத்துவங்களில் ஹேயம் இன்னவை *என்று அறிந்து நீக்கியும்,* உபாதேயம் இன்னவை *என்று அறிந்து ஸ்வீகரித்தும்;* அனுப்ரேக்ஷை-12, தர்மத்தியானம்-4, சுக்கிலத்தியானம்-4 *இவற்றை மனத்தில் தியானித்தும், துறவற ஒழுக்கத்தில் நிற்கின்ற* மகாதபஸ்விகள் ஆவார்.

***ஜீவாதி பதார்த்தங்கள்-9:—*** ஜீவ, அஜீவ, புண்ணிய, பாப, ஆஸ்ரவ, ஸம்வர, நிர்ஜ்ஜர, பந்த, மோக்ஷம் என்னும் நவபதார்த்தங்கள் ஆவன.

இவ்வித நான்குவகை மெய்ப்பொருள்களின் *தத்துவங்களை* ஆப்தனால் *கூறியருளியவாறு அறிந்து, அவற்றை முற்றிலும் உண்மையென்று சந்தேகமின்றி நம்பிக்கைக்கொள்ளுதல்* **ஸம்யக் தரிசனம்** *என்றவாறு.*

## ஸம்யக் தரிசனத்தின் வகை.

(1) ***நிச்சங்கை*** (*ஐயமின்மை*):— ஆப்தனால் *கூறப்பட்டவை உண்மையோ, அன்றோ என்னும் சந்தேகம்* இல்லாமை.

(2) ***நிஷ்காங்க்ஷை*** (*சரீரபோக வாஞ்சை இல்லாமை*):— *காம போக இச்சை இல்லாமை.*

(3) ***நிர்விசிகித்ஸை*** (உவர்ப்பு இன்மை):-இரத்தினத்திரயத்தை *யுடையவர்களின் சரீரத்தில் உள்ள மாசுகள் எதையேனும் கண்டு அருவருப்படையாதிருத்தல்.*

(4) ***அமூடதிருஷ்டித்வம்*** (*மயக்கின்மை*):— *மித்தியாமார்க்கமே உண்மையென்று தோன்றும் மயக்கம்* இல்லாமை.

(5) ***உபகூஹனம்*** (*அறப்பழி நீக்கல்*):— *தர்மமுடையவர்களிடத்து உள்ள குற்றங்குறைகளை வெளிப்படுத்தாது மறைத்தல்.*

(6) *ஸ்திதிகரணம்* (அழிந்தாரைத் தாங்கல்):— விரதசீலங்களைக்கொண்டு பின் நழுவவிடுபவர்களைத் திருத்தி முன்போல் விரதமுடையவராகச் செய்தல்.

(7) *வாத்ஸல்லியம்* (அன்பு):— தர்மமுள்ளவர்களிடம் அன்பு வைத்து வாஞ்சிக்கின்ற தன்மை.

(8) *மார்க்கப்பிரபாவனை*(தர்மப்பிரபாவனை):— ச்ராவக, யதி தர்மங்களைப் பிரஸம்ஸித்து பிரகாசிக்கச்செய்தல்.

என ஸம்யக்தரிசனம் எட்டு அங்கங்களைக் கொண்டதாகும். இவற்றுள் எது ஒன்று குறையினும் ஸம்யக்தரிசனம் பிரயோஜனமில்லாததாகும். இவ்வெட்டங்கங்கள் ஒவ்வொன்றினும் சிறப்படைந்த எண்மர்களின் கதைகள் உதாரணமாகக் கூறப்படுகின்றன.

நற்காட்சியுடையவர்களிடத்து தேவமூடம், உலோகமூடம், பாஷண்டிமூடம் என்ற மும்மூடங்களும்; ஜாதி, குலம், வன்மை, செல்வம், வனப்பு, சிறப்பு, தவம், அறிவு முதலிய எண்வகை மதங்களும் (கர்வங்களும்); மித்தியா லிங்கி, நூல், தெய்வம் என்ற மற்றை பக்தியுடனும், உலோபிதத்துடனும் வணங்குதலாகிற ஆறுவகை அவிநயங்களும் இல்லனவாகும்.

## அதன் சிறப்பு.

ஸம்யக்தரிசனம் இல்லா ஞானமும், சாரித்திரமும் மோக்ஷமார்க்கம் ஆகாதாகையால் இதனையே முதலில் அடையவேண்டியதாகிய சிறப்பினையுடையது. எக்குடிபிறப்பினும், யாவரேயாயினும், எப்பிறவியேயாயினும் ஸம்யக்தரிசனமுடையவர் இந்த ஜன்மத்திலும், மறுஜன்மத்திலும் போற்றிப்பூஜிக்கப்படுவார்கள். அன்னவர் நரகம் புகுதலிலர்; பெண், விலங்கு முதலிய ஜன்மங்களையும் அடையார். அங்கக்குறைவு முதலிய பிறவிகளையும் எடார்; குறுவாழ்க்கை(சிறுகுடில் வாழ்க்கை) யுடையோரும் ஆகார்; பவண, வியந்தர, ஜ்யோதிஷ்கர் என்னும் கீழ்த்தேவர் குலங்களிலும் பிறவார்; வித்யாதரர், பலதேவர், வாஸுதேவர் முதலிய மேலான தேவப்பிறவிகளில் பிறந்து நரேந்திர சக்கரம், தேவேந்திர சக்கரம், அர்ஹத்பதவியின் சக்கரம் என்ற முச்சக்கரப் பதவிகளின் சக்கரபோகங்களையும் அனுபவித்துப் பின் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் அடைவர்.

## ஸம்யக் ஞானம் (நன்ஞானம்).

முற்கூறப்பட்ட ஜீவாதிபதார்த்தங்களின் தன்மைகளைக் கூறும் ஆகமங்களைக்(நூல்களைக்)கற்றறிதல் ஸம்யக்ஞானம் ஆகும். அவை நான்குவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

1. *பிரதமானுயோகம்*:- சரிதம்(ஒரு புருஷன் கதை), புராணம்(திரிசஷ்டி சலாகாபுருஷர்கள் 63-பேர்களின் கதைகள்), அர்த்தக்ஞானம் (நோன்புக்கதை முதலியன) என்பவற்றைக் கூறும் நூல்கள்.
2. *கரணானுயோகம்*:-லோகஸ்வரூபத்தையும், உத்ஸர்ப்பிணி, அவஸர்ப்பிணி எனும் காலபேதவியல்பையும் கூறும் நூல்கள்.
3. *சரணானுயோகம்*:— ஸ்ராவகர்கள் (இல்லறத்தார்கள்) அனுஷ்டிக்க வேண்டிய தர்மங்களையும், யதிகள் (தபசிகள்) அனுஷ்டிக்கவேண்டிய தர்மங்களையும் கூறும் நூல்கள்.
4. *திரவ்யானுயோகம்*:— ஜீவன்களிடத்துக் கர்மங்கள் கட்டுகிறதும் (வந்து சேருகிறதும்), விட்டு விலகுகிறதுமான தர்மங்களையும், ஜீவ, அஜீவ முதலிய நவபதார்த்தங்களின் தத்துவங்களையும் கூறும் நூல்கள் என்பன. இவற்றையெல்லாம் நன்ருய்க் கற்றறிந்து தான் மேலான ஞானத்தையடைதலே ஸம்க்யஞானம்(நன்ஞானம்) எனக் கூறப்படுகின்றது.

---

## ஸம்யக் சாரித்திரம் (நல்லொழுக்கம்).

ஸம்யக் தரிசன, ஞானமுடையவர்கள் வினைகள் ஆத்மனிடம் வந்து கூடாமல் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளவேண்டிய வழிகளைக் கடைப்பிடித்தொழுகல் ஸம்யக் சாரித்திரம் அல்லது நல்லொழுக்கம் எனப்படும். அதற்கு இரண்டு வகை விரதானுஷ்டானங்கள் கூறப்பட்டுள்ளன. அவை:—

**அணுவிரதம்:**— கொலை, பொய், களவு, காமம், பரிக்கிரஹம் என்பவற்றை ஏகதேசத்தில் அதாவது சிலபாகங்களை விடுதல்.

**மகாவிரதம்:**—மேற்கூறியவற்றை முற்றுந்துறத்தல் அதாவது எல்லாவற்றையும் ஒருங்கே விடுதல். இவை மற்றும்:—

**அணுவிரதம். 5**—அஹிம்ஸை, ஸத்தியம், அஸ்தேயம், பிரம்மசர்யம், பரிமித பரிக்கிரஹம் என்பன.

*குணவிரதம்.* 3–திக்விரதம், அனர்த்ததண்ட விரதம், போகோ பபோக பரிமாணவிரதம் என்பன.

*சிக்ஷாவிரதம்.* 4—ஸாமாயிகம், புரோஷதோபவாஸம், தேசாவ காசிகம், அதிதிஸம்விபாகம் என்பன.

என பன்னிரண்டு விதமாய்ப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன. பின் இவை ஒவ்வொன்றும் விரிவாய் விவரிக்கப்பட்டும், அவ்வவற்றிற் குள்ள அதிசாரங்கள் கூறப்பட்டும் உள்ளன. இவ்வதிசாரங்களைச் செய்தால் விரதம் நசிக்கின்றதாகையால் அவைகளை முன்னால் அறிந்து விலக்கிப் பின் விரதங்களை அனுஷ்டிக்கவேண்டும். அவ் வாறு செய்கின்றவர்கள் ஸ்வர்க்கபோகசுகத்தை யடைவார்கள். அவ்வாறு விரதானுஷ்டானங்களால் பேற்றினை (மேன்மை)யடைந்த சிலரும், விரதானுஷ்டானமில்லாது கேடடைந்தவர்கள் சிலரும் உதாரணமாகக் கூறப்பட்டுள்ளார்கள்.

இவ்வித விரதானுஷ்டானங்களுடன் கள், தேன், மாமிசம் முதலியவற்றை உண்ணாதிருத்தல் முக்கியமாய் அனுஸரிக்கப்பட வேண்டியதாகையால் அதனை மூலகுணம் என்றார்.

பிறகு குணவிரதம், சிக்ஷாவிரதங்களையும்பற்றிக் கூறி அவ்வ வற்றிற்குண்டான அதிசாரங்களையும், சிலவற்றிற்கு உதாரணக் கதைகளையும் குறிப்பிடுகின்றார்.

## பூசனை (பூஜை).

தேவாதிதேவனை அர்ஹத் பரமேஷ்டிக்கு அபிஷேகம், ஆராதனை முதலிய சிறப்புக்களை ஓயாது செய்தல் பூசனை என்பது. அவ்வாறு செய்துவருவதால் தேவசுகத்தை அடைய ஒரு வழியாகும். அதற்கு ஓர் உதாரணமும் குறிக்கப்பட்டுள்ளது.

## சல்லேகனை.

இது மரணாந்தகாலத்தில் சரீரத்தியாகஞ் செய்தல். அதா வது, சாகின்ற காலத்தில் சாகின்றோம் என்ற கிலேசத்தை விட்டுச் சித்தசமாதானம் செய்து, கலக்கத்தை நீக்கி பஞ்சநமஸ் கார பதத்தை உச்சரித்துக்கொண்டு இரத்தினத்திரயமாகிய ஸன் மார்க்கத்தில் கலங்காதிருத்தல். இதுவும் இதன் அதிசாரத்துடன் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு இவற்றையெல்லாம் அறிந்து அததற்குக் கூறப் பட்ட அதிசாரங்களின்றி விரதங்கள், ஸாமாயிகம், பூசனை,

சல்லேகனை முதலியவற்றை முட்டின்று முடித்தவர்கள் ஸம்ஸார சுழற்சிக்குக் காரணமான பஞ்சபரிவர்த்தனைகளைக் கெடுத்தவர்கள் ஆவார்கள்.

## அறத்தின் பயன்.

தர்மத்தின் பலனை திரசஷ்டிசலாகா புருஷர்களுடைய சரித மாகிய பிரதமானுயோகம் முதலிய சாஸ்திரங்களைக் கேட்டு அல்லது அப்பியஸித்து, நன்றாய் உணர்ந்து, ஸம்ஸாரமாகிய பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு என்னும் துன்பங்களைக் கெடுத்து, இனிப் பிறவியில்லாத தன்மையை அடையும் மோக்ஷஜீவன்களுக்கு (ஸித்தபரமேஷ்டிகளுக்கு) விருப்பம், வருத்தம், பயம் என்ப தொன்றும் தோன்றுவதில்லை. அவ்வித ஆத்மன், கிட்டமுங்காளி தமும் நீங்கிய பொன் தன் சுயஒளியினால் பிரகாசிப்பதுபோல், கேவலஞ்ஞான, தரிசன குணங்களினால் என்றும் சுத்தமாகப் பிர காசிக்கும். அந்த ஆத்மன், அனந்ததரிசனம் முதலிய எண்குணங் களையும் பெற்று இம்மூன்றுலகத்திற்கும் உச்சியாகிய மோக்ஷ ஸ்தானத்தில் சூடாமணி (இரத்தினதீபம்போல்) பிரகாசிக்கும்.

## ஶ்ராவகர்களின் பதினொரு நிலை.

இவ்விரதானுஷ்டானங்களை அனுஷ்டிக்கிறவர்கள் ஶ்ராவகர் கள் (இல்லறத்தார்கள்) எனப்படுவர். அவர்கள் பதினொரு நிலையை உடையவர்களாகப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளார்கள். அவை:—

1. *தரிசனிகன்* :— விரதங்களையனுஷ்டியாது ஸம்யக் தரிச னத்தை மட்டும் உடையவன்.
2. *விரதிகன்*:— ஸம்யக்தரிசனத்துடன் அணுவிரதம், சிக்ஷா விரதங்கள் பன்னிரண்டையும் உடையவன்.
3. *சாமாயிகன்*:— முன் சொன்னவைகளுடன் குறிப்பிட்ட காலம்வரையில் ஸாமாயிக ஸ்தோத்திரம், ஜபம், தபம் முத லியவைகளில் ஈடுபடுபவன்.
4. *புரோஷதோபவாஸன்*:—அஷ்டமி, சதுர்தசிகளில் உபவாஸ விரதமுடையவன்.
5. *ஸச்சித்த விரதி*:— நன்றாய்ப் பழுக்காத காய், பழங்கள் முதலிய பச்சைவஸ்துக்களைப் புசியாது விடுபவன்.

6. *இராத்திரி அபுக்தன்:—* இரவில் நான்கு விதமான ஆஹா ரங்களையும் உண்ணுமல் விட்டவன்.
7. *பிரம்மசாரி:—* ஸ்திரீ போகவாஞ்சையை விட்டவன்.
8. *அநாரம்பன்:—* ஹிம்ஸைக்குக் காரணமான உழவு, வாணி ஜ்யம் முதலியவைகளை விட்டவன்.
9. *அபரிக்கிரஹன்:—* பாஹ்ய, அப்யந்தரப் பரிக்கிரஹங்களை விட்டவன்.
10. *அனுமதன்:—* ஷை எல்லாக் காரியங்களிலும் அனு மோதமும் செய்யாதவன்.
11. *உத்திஷ்டபிண்டவிரதி:—*வீடு முதலிய பரிக்கிரஹங்களை விட்டு, மகாதபஸ்விகளிடம் தீக்ஷையைக் கைக்கொண்டு கருமங்களைக் கெடுக்க முயல்வோன் என்பன.

இந்நிலை ஒவ்வொன்றும் அது அதன் முன்னுள்ள மற்ற நிலை களின் குணங்களையும் உடைத்தாதல் வேண்டும்.

## நூலினை உணரும் வகை.

பாபகாரியங்கள், பகை, சுற்றம் இவை ஆகமாப்யாஸத்திற்கு இடையூறுவனவாகையினுல் அவற்றை நீக்கி ஒருங்குபட்ட உயரிய அறிவினுல் அறியுமிடத்தில்தான் உண்மை உணரப்படும். ஆகையால் அவ்வாறு நன்ஞானத்துடன் கூடி இந்நூலில் கூறிய விஷயங்களை ஆராய்ந்து அறியவேண்டும்.

## நூலின் சிறப்பு.

மோக்ஷமார்க்கம் இன்னது என்று விளக்கும் அருமை வாய்ந்த இவ் **வருங்கலச் செப்பினைப்** பூஜித்து அத்யயனம் செய்தாலும், பிறருக்குச் சொல்லினுலும் அல்லது பிறர் படிக்கத் தான் கேட்டாலும் அவர்களிடம் பந்தித்துள்ள கர்மவினைகள் விட்டு நீங்கும். இந்நூலிற் கூறிய விஷயங்களை ஆராய்ந்தறிந்து அப்யஸிப்பவர்கள் அவ்விதம் தீவினைகள் அழியப்பெற்று தேவ ஸாம்ராஜ்யமாகிய இந்திரபதவியையும், மானவ ஸாம்ராஜ்யமாகிய சக்ரவர்த்தித்வத்தையும், மோக்ஷஸாம்ராஜ்யமாகிய ஸித்தபரமேஷ் டித்வத்தையும் அடைந்து இறுதியில் முக்தியினையும் அடைவர்.

சுருக்கி இதை எழுதியது:— **S. ஜயராமையா.**

அருங்கலச் செப்பு

# அரும்பத விளக்க அகராதி.

(எண்கள் பக்கங்களைக் குறிக்கின்றன).

கிரியை (31)—செய்கை.
சதுஷ்டயங்கள்(5)—நான்கு எண்ணிக்கைத் தொகுதி.
சரீரமாசு (9)—உடம்பின்மே லுண்டான அழுக்கு.
சிந்தித்தல் (42)—தியானித்தல், நினைத்தல்.
சிராவகதர்மம் (10)—இல்லறம்.
சைத்யாலயம் (49)—கோவில்.
துவேஷம் (5)—கோபம்.
துஷ்கார்யம்(38)—கெட்டகார்யம்.
தேஜஸ் (29)—நெருப்பு.
நவபதார்த்தம் (4)—ஒன்பது பொருள்கள்
நிஸ்ரேயஸம்(31)—நிச்சயசுகத்திற்குக் காரணமான மோக்ஷபதவி.
நீசதுலம் (18)—இழிகுலம்.
பந்தம் (42)—கட்டுதல்.
பரமாகமம் (19)—அருகபரமனால் அருளிய மேன்மையான சாஸ்திரம் (வேதம்).
பரிக்கிரஹங்கள் (5)—தனக்குரிய வஸ்துக்கள்.
பரிணமம் (23)—எண்ணம்.
பாதப்பிரக்ஷாளனம்(57)—காலைக் கழுவுதல்.
பானம் (67)—குடித்தல்.
பிரகடனம் (9)—விளக்கம்.
பிரவர்த்தித்தல் (51)—நிகழுதல்.
பிருத்வி (29)—பூமி, மண்.
பூர்வம் (51)—முன்னால்.
பெருங்குடி (23) — மிதியடிமீது ஏறிக் குடையிட நின்றால் ஒருவரையொருவர் காணவொண்ணாத பொன் இராசியையுடைய வைசியர்.

பேதம் (4)—பிரிவு.
மதம் (5)—கர்வம்.
மஹிஷம் (53)—எருமை.
மாத்ஸர்யம் (5)—பொறாமை.
மிதஞ்செய்தல் (34)—அளவுபடுத்தல்.
மித்யாதேவர் (16)—பிறசமயதெய்வங்கள், பொய்த்தேவர்கள்.
மித்யாமார்க்கம் (9)—பிறசமய நெறி.
மோஹம் (5)—மயக்கம்.
யதார்த்தம் (7)—உண்மையியல்பு.
யதிதர்மம் (10)—துறவறம்.
ரஜ்ஜு (2)—கயிறு.
லோகம் (1)—உலகம்.
வதை (42)—கொல்லுதல், அடித்தல்.
வயோதிகம் (69)—கிழத்தனம்.
வனஸ்பதி (29)—புல், பூண்டு, மரம் முதலியன.
வாஞ்சிக்கிறது (10)—இச்சிக்கின்றது.
வாதம் (29)—காற்று.
வாத்ஸல்யம் (12)—பிரியம், அன்பு.
வாணிஜ்யம் (42)—வியாபாரம்.
விகல்பம் (1)—வேற்றுமை,பிரிவு.
விபரீதம் (4)— மாறுதல்.
விரதபங்கம்(44)—விரதத்தின்நின்றும் நழுகல்(விரதத்தின்கேடு).
விருத்தி செய்தல் (34)—பெருகச் செய்தல்.
ஜலஸேசனம் (42)—தண்ணீரால் நனைத்தல்.
ஜயம் (42)—வெற்றி.
ஜினதர்மம் (1)—அருகபரமனால் அருளிய அறம்.

ஜினபவனம்—அருகருடைய கோவில்.
ஜினப்பிரதிமை (49)—ஜிநேச்வரரின் (பிம்பம்) உருவச்சிலை.
ஜினமார்க்கம் (10)—அருகபரமனருளிய நெறி.
ஜீவாதி பதார்த்தங்கள் (3)—உயிர் முதலிய பொருள்கள்.
ஸந்மார்க்கம் )16)—நன்னெறி.
ஸம்யக்தரிசனம் (1)—நற்காட்சி.
ஸம்யக்ஞானம் (1)—நன்ஞானம்.
ஸம்யக்சாரித்திரம் (1)—நல்லொழுக்கம்.
ஸம்யோகம் (70)—சேர்க்கை.
ஸர்வதா (29)—சகல விதத்திலும்.
ஸர்வ வியாபித்வம் (72)—எங்கும் நிறைதல்.
ஸாரம் (3)—மேன்மை, நன்மை.
ஸ்ரேஷ்டிகுலம்(23)வைசியகுலம்.
ஸ்வரூபம் (1)—இயல்பு.
ஸ்வர்க்கலோக சுகம் (35)—தேவலோக சுகம்.
ஸ்வர்க்காபவர்க்கம் (39)—மோக்ஷம்.
ஸ்வாமி (1)—கடவுள்.
ஹேது (53)—காரணம்.
சிராவகன் — இல்லறதர்மத்தைக் கடைப்பிடித்தவன்.
சிராவகி—ஷையின் பெண்பால்.
க்ஷேத்திரம் (49)—இடம்.

அருங்கலச் செப்பு

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 29 | துறவறம் மென்றும் | துறவறம் என்றும் |
| 6 | 6 | மாத்ஸர்யமின்றியும் | மாத்ஸர்யமின்றி |
| | 29 | அதவாது | அதாவது |
| 13 | 2 | உறைத்தல் | உரைத்தல் |
| 27 | 19 | ஒன்றிரண்டை விடுதல் | சில பாகங்களை விடுதல் |
| 30 | 4 | அன்னிய மாதர்களை விரும்பாமை | மாதர்களை விரும்பாமை |
| | 7 | இயங்குயிர்கொல்லாமை | இயங்குயிர் கொல்லாமை |
| 31 | 12 | இரண்டாவது | இரண்டாம் வதம் |
| 50 | 8 | அனுபவசரித | அனுபசரித |
| 66 | 32 | "மானுடம்பு" என்றதற்கு | "மானுடம்பு" என்று பாடங்கொள்ளின் |
| 72 | 29 | மாட்சியினால் | மாட்சியிலான் |

அருங்கலச் செப்பு

# விஷய அட்டவணை



ஸ்ரீ ஜிநாய நம: ||

# அருங்கலச் செப்பு.

(மூலமும் உரையும்)

## அருக பரமன் துதி.

* அணிமதிக் குடை யருகனைத் தொழ
அருவினைப் பயனகலு மே.

அணி - அழகிய, மதி - சந்திரன்போன்ற (உருவத்தையுடையவும்), குடை - சந்திராதித்யம், ஸகலபாஜனம், நித்தியவினோதம் என்னும் முக்குடையின் கீழ் வீற்றிருக்கின்றவும், அருகனை - அருக பரமனை, தொழ - வணங்க, அருவினை - நீங்குதற்கரிய வினைகளின், பயன் - பலன், அகலும் - நீங்கும். (எ—று).

அருக பரமனைத் தொழுவதால் நீங்குதற்கரிய வல்வினைகள் பலனைத்தராது விட்டு நீங்கும் என்பது கருத்து.

அருவினை—நீங்குதற்கரிய வெவ்வினை.

"அருவினை விடும்பகவர்" (திருக்கலம்பகம்—94.)
"அருவினை வினையு ளாய வருந்துயர்ப் பிறவிதோறும்"
(யசோதர காவியம்—I-42.) என்றவற்றாலும் உணர்க.

---

* மகாமகோபாத்யாய, டாக்டர், ஸ்ரீ.உ.வே. சாமிநாதையர் அவர்களின் கையெழுத்து மூலப்பிரதியில் காணப்பட்டது.

ஓம்







ஸ்ரீ ஜிநாய நம:

# அருங்கலச்செப்பு.

(மூலமும் உரையும்)

## கடவுள் வணக்கம்

1. முற்ற வுணர்ந்தானை யேத்தி மொழிகுவன்
குற்றமொன் றில்லா வறம்.

*முற்ற உணர்ந்தானை* - லோகாலோகஸ்வரூபம் முழுவதையும், பூதாநாகதவர்த்தமானகால விகல்பத்தையும் ஒருங்கே அறிந்த ஸர்வக்ஞன ஸ்வாமியை,(அறிந்து), ஏத்தி-ஸ்தோத்திரம் செய்து, குற்றமொன்றில்லா அறம்-அவனால் கூறப்பட்ட யாதொரு குற்றமுமில்லாத ஸ்ரீஜிநதர்மத்தை, அல்லது இருபத்தைந்து குற்றமும் நீங்கிய ஸம்யக்தரிசன- ஸம்யக்ஞான- ஸம்யக்சாரித்திரமென்கிற மூன்று விதமான தர்மத்தையும், மொழிகுவன் - சொல்லுவேன், (என்றவாறு)

லோகம்— ஜீவ, புத்கல, தர்ம, அதர்ம, ஆகாச, கால எனும் ஷட்திரவியஸமூஹத்தால் (ஆறுவகைப் பொருள்களின் சேர்க்கையால்) ஆகியது.

"லோக்யந்தே த்ருச்யந்தே ஜீவாதிபதார்த்தா: யத்ர ஸ: லோக:" என்ற வாக்கியத்தைக் கவனிக்க.

லோகத்தின் உருவம்:—

"முடிவிடை யகலமா யதமோன் றேழ்முழ
விடையினைங் கயிறகன் றேழு நீளமா
யடியினே ழகன்றுநீண் டுயரமீ ரேழுமாய்
வடிவுடை யுலகமூ வாதஞ் சூழ்ந்ததே. (மேருமந்தரபுராணம்).

என்றபடி. உலகம் முந்நூற்று நாற்பத்து மூன்று ரஜ்ஜுப்பிரமாணத்தை யுடையது.

அலோகம்: — லோகத்திற்குப் புறம்பு. அது அனந்தமாகிய சுத்த ஆகாசத்திரவியமாகும்.
'ததோ அலோகாகாசம் கேவலம்' (பஞ்சாஸ்திகாயம்), என்றதனாலறிக.

பூதகாலம் — இறந்தகாலம் (கடந்தகாலம்), அநாகதகாலம்— எதிர்காலம் (வருங்காலம்), வர்த்தமானகாலம் -- நிகழ்காலம் (நடைபெறுகாலம்).

முற்ற உணர்ந்தான் -- ஸர்வஜ்ஞன், அதாவது ஸமஸ்த வஸ்துஸ்வரூபங்களையும் அறிந்தவன்.

'எல்லா முணர்ந்தா னவனே யிறையாக வேத்தி' (நீலகேசி) என்றதனாலறிக.

ஸர்வஜ்ஞலக்ஷணமாவது:—

"ஸகலாநி சராசராணி விவிதத்ரவ்யாணி தேஷாம் குணாந்
பர்யாயாநபி பூதபாவிபவத: ஸர்வாந் ஸதா ஸர்வதா
ஜாநீதே யுகபத் ப்ரதிக்ஷணமத: ஸர்வஜ்ஞ இத்யுச்யதே"
(க்ரியாகலாபம்) என்பது.

ஸ்ரீ ஜிநதர்மத்தின் பெருமைபற்றி, "குற்றமொன்றில்லா அறம்" என்றார். அஹிம்ஸையினையே முக்கியகொள்கையாகக் கொண்ட அறம் என்றபடி.

ஸம்யக்தரிசனத்திற்கு இருபத்தைந்து குற்றங்களாவன:- மூடம் 3. மதம் 8. அநாயதனம் 6. சங்கைமுதலிய தோஷங்கள் 8. ஆக இருபத்தைந்து.

'மூடத்ரயம் மதாஸ்சாஷ்டௌ ததாநாயதநாநி ஷட் |
அஷ்டௌ சங்காதயஸ்சேதி த்ருக்தோஷா: பஞ்சவிம்சதி:'
(ஸ்ரீ ரத்நகரண்டச்ராவகாசாரம்) என்பதால் அறிக.

இவற்றின் விபரங்களை இந்நூலின்கண்ணே நற்காட்சியைப் பற்றிச் சொல்லுமிடத்துக் கூறுகின்றார்.

## ஜிநதர்மம்

2. நற்காட்சி நன்ஞானம் நல்லொழுக்க மிம்மூன்றுந்
தொக்க வறச்சொற் பொருள்.

நற்காட்சி-ஸம்யக்தரிசனமும், நன்ஞானம்-ஸம்யக்ஞானமும், நல்லொழுக்கம் - ஸம்யக்சாரித்திரமும். இம்மூன்றும் - ஆகிய இவைமூன்றும், கொள்க - மூவுலகத்துயிர்களுக்குக் கொற்றியாக எண்ணப்பட்ட, அருஞ்செல்வப் பொருள் - இரத்தினத்திரயமென்று சொல்லப்படும் என்பர். (எ-று).

இம்மூன்றுக்கூட்டமே அருங்கலமெனக் கொள்க. அதோலோகம் (கீழ் உலகம்), மத்தியலோகம் (நடு உலகம்), ஊர்த்துவலோகம் (மேல் உலகம்) என லோகம் மூன்று.

" முதலாவிருந்தியான் மூன்றுமாகி " (மே-ம-பு)
என்றதை உணர்க.

மூவுலகத்திலும் வாழும் உயிர்களுக்கு அரியனவும், ஸாரமாகிய இன்பத்திற்குக் காரணமானவையுமாகிய நற்காட்சி நன்ஞானம், நல்லொழுக்கம்— ஆகிய இவை மூன்றையும் இரத்தினத்திரயம் என்று ஆகமங்கள் கூறுகின்றன.

"அரியவாயலகெலாம் விலையிலாவருங்கலத்திரயம்" (மே-ம-பு).
"அரதனத்திரயமென்னும் பெறுதலுக்கரியசெல்வம்"
(யசோதரகாவியம்)•

'ஸஜ்ஜ ரத்நத்ரயம் த்ரூணம் ஸவஸ்ரேயோஜிகைநவனபிஷணஃ'
(ஜீவந்ரு உவக)•

என்பனவற்றால் உணர்க.

## நற்காட்சி

**3. மெய்ப்பொருடேறுத னற்காட்சி யென்றுரைப்ப ரெப்பொருளுங் கண்டுணர்ந் தார்.**

எப்பொருளுங்கண்டுணர்ந்தார் - சகலவஸ்துக்களின் ஸ்வரூபத்தையும் கண்டறிந்த சர்வக்ஞனாகிய ஸ்வாமியானவர், மெய்ப்பொருள்தேறுதல் - மெய்யான பொருளாகிய ஆப்தன், ஆகமம், முனிவர், ஜீவாதி பதார்த்தங்களென்று சொல்லப்படுவனவற்றின் தத்துவங்களை, அறிந்து - தெளிந்து நம்பிக்கைகொள்ளுதல், நற்காட்சி என்று உரைப்பர் - ஸம்யக்தரிசனம் என்று சொல்லுவர். (எ-று)

ஆப்தன் - ஸ்வாமி. ஆகமம் - அவனால் உபதேசிக்கப்பட்ட சாஸ்திரம். முனிவர் - அச்சாஸ்திரத்திற் கூறப்பட்ட துறவறக் கொள்கையினைக்கொண்டு ஒழுகுபவர்கள்.

ஜீவாதிபதார்த்தங்கள்:— ஜீவ, அஜீவ, புண்ணிய, பாப, ஆஸ்ரவ, ஸம்வர, நிர்ஜ்ஜர, பந்த, மோக்ஷம் என்ற நவபதார்த்தங்கள். இவற்றின் ஸ்வரூபத்தைத் தெளிந்து நம்புதல் ஸம்யக்தரிசனம் என்றவாறு.

"இறைவனு முனியு நூலு மியாதுமோர் குற்ற மில்லா
நெறியினைத் தேளிதல் காட்சியாம்". (மே-ம-பு)

நிலையானமைபற்றி மெய்ப்பொருள் என்றார். அல்லது, பொருள்களின் உண்மைத் தன்மையைத் தெளிதல் காட்சியாம், என்றற்கு "மெய்ப்பொருளீடேறுதல்" என்றார் எனினுமாம். "எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்-மெய்ப்பொருள் காண்பதறிவு" (குறள்) என்றவற்றை உணர்க. தெளிதலாவது - விபரீதம் சந்தேகமின்றி உள்ளபடி உணர்தல். "ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு" (குறள்) என்பதனானுமறிக.

## பொருள்கள்

**4. தலைமகனு நூலு முனியுமிம் மூன்றும்**
**நிலைமைய தாகும் பொருள்.**

தலைமகனும் - ஸ்வாமியும் (ஆப்தனும்), நூலும் - ஆகமமும், முனியும்-முனிவர்களுமான, இம் மூன்றும்- இந்த மூன்றுவகையும், நிலைமையதாகும் பொருள் - நிச்சயமான பொருள்களாகும்.(எ-று)

தலைமகன் - ஆப்தன் - புருஷரிற்சிறந்தோன் என்பதாம். ஆப்த, ஆகம, குருக்கள் என்றும் நிகழ்வதால் நிலைமையதாகும் பொருள் என்றார்.

## ஆப்தன் (கடவுள்)

**5. குற்றமொன் றின்றிக் குறையின் றுணர்ந்தறம்**
**பற்ற வுரைத்தா னிறை.**

குற்றமொன்றின்றி - பதினெட்டுக் குற்றங்களையும்நீக்கி, குறையின்றி-குறைவில்லாமல், உணர்ந்து-சகலத்தையுமறிந்து, அறம்- இல்லறம் துறவறம்மென்னும் பேதத்தினையுடைய தர்மத்தை, பற்ற - (ஜீவன்கள்) அறிய, உரைத்தான் - சொன்னவன்,இறை - ஸ்வாமி. (எ-று)

**6. பசிவேர்ப்பு நீர்வேட்கை பற்றுர்வஞ் செற்றங்**
**கசிவினோ டில்லா னிறை.**

பசி - பசியும், வேர்ப்பு - வியர்வையும், நீர்வேட்கை - தண்ணீர் விருப்பமும், பற்று - பரிக்கிரகங்களின்மேல்பற்றும், ஆர்வம்- ஆசையும், செற்றம் - பகைமையும், கசிவினோடு - கலக்கம் முதலான பதினெட்டுக் குற்றங்களும், இல்லான் - இல்லாதவனே, இறை - ஸ்வாமி. (எ—று.)

பற்று-உள்ளதன் மேல்பற்று. ஆர்வம்-பெறக்கடவதன் மேல் பற்று. கசிவினோடு என்றதனால் - எஞ்சிய மற்றவைகளையும் கொள்க. பதினெண்குற்றங்களாவன— பசி, நீர்வேட்கை, அச்சம், ஆசை, கோபம், மயக்கம், வெகுசிந்தனை, மூப்பு, வியாதி, சாவு, வியர்வை, இளைப்பு, கர்வம், வெறுப்பு, ஆச்சரியம், பிறப்பு, தூக்கம், வருத்தம்—என்பன.

க்ஷுத்பிபாஸா பயம் ராகோ த்வேஷோ மோஹஶ்ச சிந்தநம் ।
ஜரா ருஜா ச ம்ருத்யுஶ்ச ஸ்வேத: கேதோ மதோ ரதி: ॥
விஸ்மயம் ஜநநம் நித்ரா விஷாதோ(அ)ஷ்டாதஶ த்ருவா: ।
த்ரிஜகத்ஸர்வபூதாநாம் தோஷா: ஸாதாரணா இமே ॥

என்றதனால் அறிக.

## 7. கடையிலறி வின்பம் வீரியங் காட்சி யுடையா னுலகுக் கிறை.

கடையில் - அளவில்லாத (அனந்தமாகிய), அறிவு - ஞானமும், இன்பம் - சுகமும், வீரியம் - வீரியமும், காட்சி - தரிசனமும், உடையான் - உடையவன், உலகுக்கு - உலகத்திற்கு, இறை- ஸ்வாமி. (எ-று)

அனந்தஞானம், அனந்ததரிசனம், அனந்தசுகம், அனந்த வீரியம் என்னும் அனந்த சதுஷ்டயங்களையுடையவன் ஸ்வாமி என்றவாறு. கடையில் என்பதனை இன்ப வீரிய காட்சியிலும் கூட்டுக.

## 8. தெறித்த பறையி னிராகாதி யின்றி யுரைத்தா னிறைவ னறம்.

தெறித்த பறையின் - அடிக்கப்பட்ட பேரிகையின் (முரசு) நின்றும் எழும்ஒலி போல, இராகாதி யின்றி - இராக, துவேஷ, மோஹ, மத, மாத்ஸர்யம் ஒன்றுமில்லாமல், அறம் - இல்லறம், துறவறம் என்னும் இரண்டு பிரிவாகிய தர்மத்தை, உரைத்தான் - சொல்லியருளியவன், இறை - ஸ்வாமி. (எ-று)

அறம் உரைக்கான் இறைவன் என இறைவன் றன்மை கூறிய வாறு. அடிக்கப்பட்ட முரசு ஒலிப்பேனென்னும் இச்சையின்றி, கேட்போருக்கெல்லாம் வித்தியாசமின்றி ஒரு தன்மையாய் ஒலிக்கு மாறுபோல, சொல்லுவேனென்னுமிச்சையின்றி, கேட்போர்களி டத்து இராக த்வேஷ மோஹ மத மாத்ஸர்யமின்றியும் தர்மோப தேசம் செய்தல் ஆப்தனியற்கை என்றவாறு. சொல்லுவேன் என்னும் இச்சையில்லாதவழிச் சொல் எழாது எனின் நீலகேசி கடவுள் வாழ்த்தின் உரையை நோக்குக.

## நூல் (ஆகமம்) இயல்

**9. என்றுமுண் டாகி யிறையால் வெளிப்பட்டு
நின்றது நூலென் றுணர்.**

என்றும் உண்டாகி - எந்நாளும் (அநாதியாய்) உண்டாகி, (உத்ஸர்ப்பிணி அவஸர்ப்பிணி என்னும் காலபேதத்தால் சில காலம் மறைபட்டு நின்று), இறையால் - பிறகு அவ்வப்போது தோன்றிய சுவாமிகளினுடைய திவ்யத்வனியால், வெளிப்பட்டு - அருளப்பட்டு, நின்றது - உலகத்தில் நிலைபெற்று விளங்குகின்றது, நூல் என்று - பரமாகமமென்று, உணர் - அறிவாயாக. (எ—று)

நாம் வசிக்கும் இந்தப் பரதக்ஷேத்திரம் முதல் 5-பரதமும், 5-ஐராவதமும் ஆகிய இப் பத்து க்ஷேத்ரங்களிலும் காலம் உத்ஸர்ப் பிணி, அவஸர்ப்பிணி என்னும் இரண்டு பிரிவாக நிகழ்கின்றது. அக்காலங்கள் ஒவ்வொன்றும் ஆறு பிரிவுகளையுடையன.

"சமயமாறுடையதாம் பரதரேவதம்" (மே. ம, பு).
என்றதனால் அறிக.

அவற்றுள் அவஸர்ப்பிணியின் பிரிவுகள் நன்னற்காலம், நற் காலம், நற்றீக்காலம், தீநற்காலம், தீக்காலம், தீத்தீக்காலம் என்பனவாம். உத்ஸர்ப்பிணியில் தீத்தீக்காலம் முதலாகப் பின்னி ருந்து வரிசையாக நிகழும். உத்ஸர்ப்பிணி, அவஸர்ப்பிணி இரண்டும் சேர்ந்தகாலம் ஒரு கல்பகாலம் எனப்படும். அதாவது இருபது கோடாகோடி கடற்காலங்களாகும். அவஸர்ப்பிணிகாலம் பத்து கோடாகோடி கடல்கள் என்னும் எண்ணல் அளவை கொண்டது. உத்ஸர்ப்பிணிகாலம் பத்து கோடாகோடி கடல்கள் என்னும் எண் ணல் அளவைகொண்டது. அவற்றுள் நன்னற்காலம் நான்கு கோடா கோடிகடல்கள் என்னும் எண்ணல் அளவைகொண்டது. நற்காலம்

மூன்று கோடாகோடி சடல்கள் என்னும் எண்ணால் அளவை கொண்டது. நற்றீக்காலம் இரண்டு கோடாகோடி சடல்கள் என்னும் எண்ணால் அளவை கொண்டது. தீநற்காலம் 42000- வருஷங்கள் குறைந்த கோடாகோடி சடல்கள் என்னும் எண்ணால் அளவை கொண்டது. தீக்காலம் 21000-வருஷங்கள், தீத்தீக்காலம் 21000-வருஷங்கள், இப்படியாக விரிந்தன. உத்ஸர்ப்பிணியில் இவைமுறையே தீத்தீக்காலம் முதலாக வரும். அவஸர்ப்பிணியில் பிராணிகளின் உடலுயரம், ஆயுள்பயர், பலம், ஸுகம் முதலியன குறைந்துகொண்டே வரும். உத்ஸர்ப்பிணியில் அவை முறையே ஏறிவளர்ந்துகொண்டேவரும். இப்படி செழுமையில் நற்றீக்காலத்திலும், தீநற்காலத்திலும் 24-தீர்த்தங்கரர்கள் தோன்றி தருமத்தை உபதேசிக்கின்றார்கள். மற்றைக்காலங்களில் இவ்விடங்களில்தர்மோபதேசம் இல்லை என்னினும் சுவக்ஞர்கள் இவ்வாறு நிகழ்வதால் 'என்றுமுண்டாகி இறையால் வெளிப்பட்டது நூல்' என்றார்.

10. மெய்ப்பொருள் காட்டி யுயிர்கட் கரணாகித்
துக்கங் கெடுப்பது நூல்.

மெய்ப்பொருள் காட்டி - அழிவில்லாத பொருள்களின் தத்துவஸ்வரூபத்தை நன்றாகத் தெளிடச் செய்து (பொருள்களின் யதார்த்தத்தினை விளக்கி), உயிர்கட்கு அரணாகி - ஜீவன்களுக்கு உறுதியான துணையாகி, துக்கங்கெடுப்பது - ஜீவன்களின் ஸம்ஸார துக்கத்தைக் கெடுப்பது, நூல் - சாஸ்திரம். (பரமாகமம்). (எ—று)

## முனிகள் (துறவிகள்) இயல்

11. இந்தியத்தை வென்றான் றொடர்ப்பாட்டோ டாரம்பம்
முந்து துறந்தான் முனி.

இந்தியத்தை வென்றான் - பஞ்சேந்திரியங்களையும் வென்றவனாகி, தொடர்ப்பாட்டோடு ஆரம்பம் - பாஹ்யாப்யந்தரபரிக்கிரகங்களையும், கிருஷியாதிகர்மவிருத்தியையும், முந்து துறந்தான் முனி - பற்றறத் துறந்தவனே முனிவர்.

பாஹ்யம் - வெளி, அப்யந்தரம் - உள். பரிக்கிரகம் - பற்று. தொடர்ப்பாடு:- பாஹ்யம், அப்யந்தரம் என்னும் இருவகைப் பரிக்கிரஹங்கள்.

பாஹ்யபரிக்கிரஹங்கள் பத்து. அவையாவன:— க்ஷேத்திரம், வாஸ்து, ஹிரண்யம், ஸ்வர்ணம், தனம், தான்யம், தாஸீ, தாஸன், குப்யம், பாண்டம் என்பனவாம்.

அப்யந்தர பரிக்கிரஹங்கள் பதினான்கு. அவையாவன:— மித்தியாத்வம், ஸ்த்ரீவேதம், பும்வேதம், நபும்ஸகவேதம், ஹாஸ்யை, ரதி, அரதி, பயம், சோகம், ஜுகுப்ஸை, குரோதம், மானம், மாயம், லோபம் என்பன.

க்ருஷியாதிகர்மவிருத்தி:— பயிர்த்தொழில் முதலிய காரியங்கள்.

**12.** தத்துவ ஞான நிகழ்ச்சியுஞ் சிந்தையு
முய்த்த லிருடிகண் மாண்பு.

தத்துவஞானநிகழ்ச்சியும் - ஹேயோபாதேயஸ்வரூபத்தை அறிந்தும், ஹேயத்தினை நீக்கி, உபாதேயத்தினை ஸ்வீகரித்து நடந்தும், சிந்தையும் - மனதில் துவாதசானுபிரேக்ஷையையும், தர்மத்தியான, சுக்கிலத்யானங்களையும், உய்த்தல் - தியானித்துச் செல்லுதல், இருடிகள் மாண்பு - ரிஷிகளின் பெருமையான குணம் (எ—று).

ஜீவ, அஜீவ, ஆஸ்ரவ, பந்த, ஸம்வர, நிர்ஜ்ஜர, மோக்ஷ என தத்துவங்கள் ஏழு. அவற்றுள் அஜீவ, ஆஸ்ரவ, பந்த தத்துவங்கள் ஹேயம். ஜீவதத்துவம் அசுத்தாபேக்ஷையினால் ஹேயமும், சுத்தாபேக்ஷையினால் உபாதேயமும் ஆகும். ஸம்வர, நிர்ஜ்ஜர, மோக்ஷதத்துவங்கள் உபாதேயம். ஹேயம் — நீக்கத்தகுவன. உபாதேயம்— ஸ்வீகரிக்கத்தகுவன.

அநித்தியம், அசரணம், ஸம்ஸாரம், ஏகத்வம், அன்யத்வம், அசுசித்வம், ஆஸ்ரவம், ஸம்வரை, நிர்ஜ்ஜரை, லோகம், போதிர் துர்லபம், தர்மஸ்வாக்யானம் என அனுபிரேக்ஷை பன்னிரண்டு. அபாயவிசயம், விபாகவிசயம், ஆஜ்ஞாவிசயம், ஸம்ஸ்தானவிசயம் என தர்மத்தியானம் நான்குவிதம். பிரதக்த்வவிதர்க்கவீசாரம், ஏகத்வவிதர்க்கவீசாரம், ஸூக்ஷ்மக்கிரியாப்ரதிபாதி, வ்யுபரதக்கிரியாநிவர்த்தி என சுக்கிலத்தியானம் நான்கு வகை. இருடி— வடமொழித்திரிபு.

### நற்காட்சியின் வகை

**13.** எட்டு வகையுறுப்பிற் றுதி யியன்றது
சுட்டிய நற்காட்சி தான்.

எட்டுவகை உறுப்பிற்றாகி இயன்றது - நிச்சங்கை (ஐயமின்மை) முதலான எட்டு வகை அங்கத்தோடு (உறுப்புக்களோடு) கூடினது, சுட்டிய நற்காட்சிதான் - பரமாகமத்துள் சொல்லப்பட்ட ஸம்யக்தரிசனமாம். (எ-று).

ஸம்யக்தரிசனம், நிச்சங்கை முதலிய எட்டு அங்கங்களுடன் கூடினது. "நெறிவிளக் குறுத்தலாதி எட்டங்கம் நிறைந்ததென்றான்." (மே. ம. பு) என்றதனை நோக்குக. நற்காட்சியின் எட்டுஅங்கங்களையும், அவற்றின் விபரங்களையும் மேற்கூறுகின்றார்.

## 14. ஐய மவாவே யுவர்ப்பு மயக்கின்மை மெய்பெற வின்னவை நான்கு.

ஐயம் இன்மை-(ஆப்தன் எவனோ அவனாற் கூறப்பட்ட சாஸ்திரம் உண்மையோ இல்லையோ என்கிற) ஐயம் இன்மையும், அவா இன்மை - (சரீரபோகவாஞ்சையாகிற) விருப்பம் இன்மையும், உவர்ப்பு இன்மை - (இரத்தினத்திரயத்தால் உண்டாகும் பவித்ரமானவர்களுடைய சரீர மாசுகளைக் கண்டு) அருவருப்பு இன்மையும், மயக்கின்மை-(மித்தியாமார்க்கமே உண்மையென்று தோன்றுகிற) மயக்கம் இன்மையும், இன்னவை - ஆகிய இவைகள், மெய்பெற - நிச்சயமாக, நான்கு - நான்கு அங்கங்களாகும். (எ—று).

முற்கூறப்பட்ட எட்டு அங்கங்களுள் இப்பாவில் நான்கு அங்கங்களைக் கூறினார். அவையாவன:—நிச்சங்கை, நிஷ்காங்க்ஷை, நிர்விசிகித்ஸை, அமூடதிருஷ்டித்வம் என்பன. எஞ்சியவற்றை மேற்கூறுகின்றார்.

இன்மை என்பதனை இடைநிலை விளக்காகக்கொண்டு முன்னின்ற ஐயம் முதலிய மூன்று உறுப்புக்கட்கும் கூட்டுக.

## 15. அறப்பழி நீக்க லழிந்தாரைத் தாங்க லறத்துக் களவளா மூன்று.

அறப்பழி நீக்கல் - தர்மம் உடையவர்களிடத்தில் மலிமசம் உண்டானால் பல பேரறியப் பிரகடனம் பண்ணாமல் மறைக்கிற உபகூஹனமும், அழிந்தாரைத் தாங்கல்-விரதசீலங்களைக்கொண்டு பின் வழுக்கினவரை மறுபடியும் விரதசீலங்களில் நிறுத்துகிற ஸ்திதிகரணமும், அறத்துக்களவளா - தர்மமுள்ளாரைக் கண்டால்

கன்றைக் கண்ட கறவைபோல் வாஞ்சிக்கின்ற வாத்ஸல்யமும் ஆகிய இவை, மூன்று - மூன்று அங்கங்களாகும். (எ—று).

முற்பாவில் கூறப்பட்ட நான்கு உறுப்புக்களுடன் இப்பாவில் கூறப்பட்ட மூன்று உறுப்புக்களும் சேர்ந்து ஏழு உறுப்புக்கள் ஆகின்றன என்க.

மலிமசம்— பிரமாதவசத்தால் ஏற்பட்ட தோஷம்.

**16.** அறத்தை விளக்கலோ டெட்டாகு மென்ப
திறப்பட வுள்ள வுறுப்பு.

அறத்தை விளக்கலோடு - சிராவகதர்மத்திலும், யதிதர்மத்திலும் தர்மத்தைப் பிரகாசிப்பிக்கிற தர்மப்பிரபாவனை அல்லது மார்க்கப்பிரபாவனை என்னும் அங்கமும் சேர்ந்து, திறப்படவுள்ள உறுப்பு - ஸம்யக்த்வத்திற்குத் திறமாகிய அங்கங்கள், எட்டாகும் என்ப - எட்டுவகையாகும் என்று சொல்லப்படும், (எ—று).

இவை மூன்று குறள்களினால் எட்டு அங்கங்களின் பெயர்களைக் கூறியவாறு. அந்த எட்டு அங்கங்களின் தன்மையைப் பின்னால் முறையே எட்டுக் குறள்களினால் கூறுகின்றார்.

## ஐயமின்மை

**17.** மெய்ந்நெறிக்க ணுள்ளந் துளக்கின்மை காட்சிக்க
ணையமி லாத வுறுப்பு.

மெய்ந்நெறிக்கண் - மெய்யாகிய ஜிநமார்க்கத்தில், உள்ளம் துளக்கின்மை - மனதில் சங்கையில்லாமல் நம்பி நடத்தல், காட்சிக்கண் - சம்யக்தரிசனத்திற்கு, ஐயமிலாத உறுப்பு - நிச்சங்கை என்னும் முந்தின அங்கமாம். (எ—று).

ஆப்தனால் ஆகமங்களிற் கூறியவைகள் உண்மையோ இல்லையோவென்று ஸந்தேஹத்தை அடையாமல் நம்பிக்கை கொள்ளுதல் நிச்சங்கை என்னும் அங்கமாகும் என்றவாறு.

## அவாவின்மை

**18.** தடுமாற்ற வின்பக் கிவருமை யாதும்
வடுமாற் றவாவின்மை நற்கு.

தடுமாற்ற இன்பக்கு - ஸம்ஸார சரீரபோகத்திற்கு, இவறுமை - இச்சியாமை, வடு - குற்றத்தை, மாற்று - மாற்றுகிற (நீக்குகிற), அவாவின்மை - விரும்பாமையாகிய நிஷ்காங்க்ஷை என்னும் இரண்டாம் அங்கமானது, நற்கு - நன்றாக, ஆகும் -ஆகும்.

நிஷ்காங்க்ஷை— ஸம்ஸாரஸுகத்திற்கு இச்சியாதிருத்தல். தடுமாற்றம்— ஸம்ஸாரம்.

## உவர்ப்பு இன்மை

**19.** பழிப்பி லருங்கலம் பெய்த வுடம்பென்
திழிப்பின்மை மூன்று முறுப்பு.

பழிப்பில் - பழிச்சொலில்லாத (குற்றமில்லாத), அருங்கலம் பெய்த - இரத்தினத்திரயத்தினால் இடப்பட்ட, உடம்பென்று - சரீரமென்று கொண்டு, இழிப்பின்மை - (அத்தகையோரின் சரீரத்திலுள்ள மாசு, வியாதி முதலியவற்றைக்கண்டு) அருவருப்படையாமலிருத்தல், மூன்றாம் உறுப்பு - நிர்விசிகித்ஸை அல்லது அருவருப்பின்மை என்னும் மூன்றுவது அங்கமாகும். (எ—று).

இழிப்பின்மை— உவர்ப்பின்மை.

தர்மிகளுடைய சரீரத்திலுள்ள குற்றங்களைக் கண்டு அருவருப்படையாமலிருத்தல் நிர்விசிகித்ஸை என்னும் அங்கமாகும்.

## மயக்கின்மை

**20.** பாவ நெறியாரைச் சேர்ந்த மதிப்பின்மை
மோவ மிலாத வுறுப்பு.

பாவநெறியாரை - பாபத்திற்குக் காரணமான மார்க்கத்தில் நிகழும் அன்னிய சமயத்தாரை, சேர்ந்த-சேரப்பட்ட, மதிப்பு இன்மை - மதிப்பில்லாமை, அதாவது அவர்களை பெரியோர்கள் என்று எண்ணாமலிருப்பது, மோவமிலாத உறுப்பு - மயக்கமில்லாத அமூடதிருஷ்டித்வம் என்னும் நாலாமங்கமாகும். (எ—று).

அமூடதிருஷ்டித்வம்— மூடமின்றித் தெளிதல்.

## அறப்பழி நீக்கல்

**21.** அறத்துக் கலர்களைத லெவ்வகை யானுந்
திறத்தி னுவகூ வனம்.

எவ்வகையானும் - எவ்விதத்திலாயினும், அறத்துக்கு அலர் களைதல் - தர்மாநுஷ்டானம் உடையவர்களுக்கேற்பட்ட தோஷங்களைப் பலருமறிய விளக்கம் செய்யாமல் மறைத்தல், திறத்தின் - திறமாகிய, உவகூவனம் - உபகூஹனமென்னும் ஐந்தாவது அங்கமாம். (எ—று).

தர்மிகளுக்குப் பிரமாதவசத்தினால் நேரிட்ட தோஷங்களைப் பிரகடனம் செய்யாமை உபகூஹனம் எனப்படும்.

### அழிந்தாரைத் தாங்கல்

**22.** அறத்திற் றளர்ந்தாரை யாற்றி னிறுத்தல்
சிறப்புடை யாறு முறுப்பு.

அறத்தில் தளர்ந்தாரை - தர்மத்தைக் கைக்கொண்டு நடக்க மாட்டாமல் விட்டவரை, ஆற்றில் நிறுத்துதல் - சக்திக்குத் தக்கவாறு நடக்கும்படி சொல்லி பழையபடி தருமத்தில் நிறுத்துதல், சிறப்புடை - புனிதமான (சிறந்த), ஆறும் உறுப்பு - ஸ்திதிகரணம் என்னும் ஆறும் அங்கமாகும். (எ—று).

தருமத்தினின்றும் நழுகினவரைப் பழையபடி தருமத்தில் நிறுத்துதல் ஸ்திதிகரணம் என்னும் அங்கமாகும்.

### அறத்துக்களவளாவல்

**23.** ஏற்ற வகையி னறத்துள்ளார்க் கண்டுவத்தல்
சாற்றிய வச்சளத்தின் மாண்பு.

ஏற்ற வகையில்-சக்திக்கு இசைந்த மாத்திரத்தில், அறத்துள்ளார் - தர்மத்துக்குள்ளாரை (தர்மிகளை), கண்டுவத்தல் -பார்த்துக் கன்றைக் கண்ட கறவைபோல வாத்ஸல்யத்துடன் நடப்பது, சாற்றிய - சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட, வச்சளத்தின்மாண்பு-வாத்ஸல்யம் என்னும் ஏழாம் அங்கத்தினுடைய தன்மையாகும்.(எ-று)

கொண்டுய்த்தல் என்றும் பிரதிபேதம்.

வச்சளம்— வாத்ஸல்யம் என்னும் வடமொழித்திரிபு.

### அறத்தை விளக்கல்

**24.** அறத்தின் பெருமையை யார்க்கு முரைத்த
லறத்தை விளக்குத னற்கு.

அறத்தின் பெருமையை - தர்மத்தின் மகாத்மியத்தை, யார்க்கும் - சகலருக்கும், உரைத்தல் - சொல்லிப் பிரகாசம்செய் வது, நற்கு-நன்றாக, அறத்தை விளக்குதல் - மார்க்கப்பிரபாவனை என்னும் எட்டாம் அங்கத்தின் தன்மையாகும். (எ—று).

தருமத்தைச் சகலருமறிய வெளியிடல் மார்க்கப்பிரபாவனை என்பதாம்.

## உதாரணக் கதைகள்

### 25. அஞ்சன சோர னனந்த மதியுலகில்
### வஞ்சமி லொத்தா யணன்.

அஞ்சனசோரன் - நிச்சங்கையாகிற அங்கத்துக்கு அஞ்சன சோரனும், அனந்தமதி - நிஷ்காங்க்ஷை என்னும் அங்கத்திற்கு அனந்தமதியும், உலகில் - உலகத்திலே, வஞ்சமில் கபடமில்லாத, ஒத்தாயணன்-நிர்விசிகித்சை என்னும் அங்கத்திற்கு ஒத்தாயண மகாராஜனும் (உதாரணமாகச் சொல்லப்பட்டார்கள்). (எ — று).

(இக்கதைகளைப் பின் அனுபந்தத்தில் காண்க.)

### 26. இரேவதை யாருஞ் சினேந்திர பத்தருந்
### தோவகையிற் பாரிசருஞ் சொல்.

இரேவதையாரும் - அமூடதிருஷ்டித்வம் என்னும் அங்கத் திற்கு இரேவதையார் என்னும் ராணியும், சினேந்திரபத்தரும் - உபகூஹனம் என்னும் அங்கத்திற்கு ஜினேந்திரபத்தரும், தோ வகையிற்பாரிசரும் - ஸ்திதிகரணம் என்னும் அங்கத்திற்குப் பாரிஷேண குமாரரும், சொல் - உதாரணமாகச் சொல்லுவாயாக.

தேவதையாரும் என்பது பழைய பாடம்.

(இக்கதைகளைப் பின் அனுபந்தத்தில் பார்க்க.)

### 27. வச்சிர மாமுனியும் வளர்பெரு விண்ணுவும்
### நிச்சய மெட்டு முரை.

வச்சிரமாமுனியும் - மார்க்கப்பிரபாவனை என்னும் அங்கத் திற்கு வஜ்ரகுமாரமுனிவரும், வளர்பெரு விண்ணுவும்-வாத்ஸல் யம் என்னும் அங்கத்திற்கு பெருமை மிக்க விஷ்ணுமுனிவரும், நிச்சயம் - நிச்சயமாக, எட்டும் உரை - இவ்வாறு எட்டு அங்கத் திற்கும் முறையே உதாரணமாகச் சொல்லப்பட்டார்கள். (எ-று).

ஒத்தா யணனு மொருபெரு விண்ணுவு
மெய்த்தக வேட்டு முறை. (பழைய பாடம்).

இவ்வாறு கொள்ளின் இந்நூலுக்கு முதல் நூலாகிய ரத்ந கரண்டகஸ்ராவகாசாரத்திற்கும் இதற்கும் வேறுபடுகின்றது. மேற்படி ஸ்ராவகாசாரத்திலும் மற்றும் சகலகீர்த்தி ஆசாரியராற் கூறியருளிய ப்ரச்நோத்தரஸ்ராவகாசாரமென்னும் கிரந்தத்திலும் மார்க்கப்பிரபாவனை என்னும் அங்கத்திற்கு வஜ்ரகுமார முனிவரின் கதை உதாரணமாகக் கூறப்பட்டுள. ஆதலின் 'ஒத்தா யணனும்' என்பதை 'வச்சிரமுனியும்' என்பதாக மாற்றியமைக்க நேர்ந்தது.

(இக்கதைகளைப் பின் அநுபந்தத்தில் பார்க்க.)

"ததோ ஜிநேந்த்ர ஸக்தோந்யோ வாரிஷேணஸ்ததஃ பரஃ |
விஷ்ணுஸ்ச வஜ்ரநாமா ச ஸேஷயோர்லக்ஷ்யதாம் கதௌ"

(ரத்நகரண்டகம்) என்றதனாலறிக.

இக்கதைகள் ப்ரஸ்நோத்தரஸ்ராவகாசாரம் என்ற கிரந்தத்திலும் உள்ளன.

## 28. உறுப்பிற் குறையிற் பயனின்று காட்சி மறுப்பாட்டின் மந்திரமே போன்று.

காட்சி - ஸம்யக்தரிசனமானது, உறுப்பில் - மேற் கூறிய அங்கங்களில், குறையில் - ஏதேனும் (ஒன்றாயினும்) குறைந்தால், பயன் இன்று - பலனில்லை (பிரயோஜனப்படாது), எதுபோல வெனின், மறுப்பாட்டின் - மாறுபாட்டினையுடைய, மந்திரமே போன்று - மந்திரம் பலியாதவாறுபோலவென்க. (எ—று).

'மறுப்பாட்டின்' என்றது மாறுபாட்டின் என்பதன் குறுக்கல் விகாரம். மாறுபாடான மந்திரமாவது— கருடனென்ற புத்தியினால் கொக்கைத் தியானித்தல்போலக் கொள்க.

இதை "ந்யூநோ மந்த்ரோஸ்த்யயோ ந ஹி ஹந்தி விஷவேதநா:" (க்ஷத்ரசூடாமணி) என்றதனாலறிக.

அக்ஷரஹீனமான மந்திரமென்று கூறுவாருமுளர்.

**29.** மூவகை மூடமு மெட்டு மயங்களுந்
தோவகையிற் காட்சியார்க் கில்.

*மூவகை மூடமும் - மூன்று வகையான மூடங்களும், எட்டு மயங்களும் - எட்டுவகை மதங்களும், தோவகையில் - குற்றமற்ற, காட்சியார்க்கு - ஸம்யக்தரிசனத்தை உடையவர்களுக்கு, இல் - இல்லை. (எ—று).*

*முற் கூறிய எட்டு அங்கங்களுடன் பொருந்திய ஸம்யக்தரி சனத்தை யுடையவர்களுக்கு மும்மூடமும், எட்டு மதங்களும், உளவாகா என்றவாறு. மூவகைமூடங்களையும், எட்டுவகை மதங் களையும் பற்றி மேற்கூறுகின்றார்.*

### உலகமூட இயல்

**30.** வரைப்பாய்த றீப்புகுத லாறுட லின்ன
வுரைப்பி னுலக மயக்கு.

*வரைபாய்தல் - மலையின் மேல் ஏறி விழுவதும், தீப்புகுதல் - நெருப்பில் பாய்வதும், ஆறுடல் - ஆறு சமுத்திரம் முதலியவற் றில் மூழ்குகிறதும், இன்ன-இவை முதலியவைகள், உரைப்பில் - சொல்லுமிடத்தில், உலக மயக்கு - லோகமூடமென்பதாம்.*

*மலையின்மேலேறி வீழ்தல், நெருப்பில் பாய்தல், நதிகள் சமுத்திரங்கள் முதலியவைகளில் மூழ்குதல் முதலியவற்றால் புண் ணியம் உண்டாகும் என்றும், மோக்ஷமடையலாமென்றும் கருதி, அங்ஙனம் நிகழ்த்துதல் லோகமூடமெனப்படும்.*

> " மாமாங்க மாடல் மணற்குவித்தல் கல்லிடுதல்
> தாமோங் குயர்வரைமேற் சாவீழ்தல்— காமங்கோண்
> டாடோ டெருமை யறுத்தல் இவையுலக
> மூட மெனவுணரற் பாற்று ". (*அறநெறிச்சாரம்*).

*என்றதனால் உணர்க.*

### தேவமூட இயல்

**31.** வாழ்விப்பர் தேவ ரெனமயங்கி வாழ்த்துதல்
பாழ்பட்ட தெய்வ மயக்கு.

தேவர் - (ஸம்ஸாரியாகிய) மித்யாதேவர்கள், வாழ்விப்பர் - ஐஸ்வர்யம் முதலியவற்றைத் தந்து நம்மைக் காப்பாற்றுவார், என - என்று மனத்துள்கொண்டு, மயங்கி - மோகித்து, வாழ்த்துதல் - ஸ்தோத்திரம் செய்து வணங்குவது, பாழ்பட்ட - பாழான, தெய்வமயக்கு-தேய்வமூடம் என்பதாம். (எ—று).

**32.** மயக்கார்வஞ் செற்ற முடையாரை யேத்த
றுயக்குடைத் தெய்வ மயக்கு.

மயக்கு - மோகம், ஆர்வம் - இராகம் (ஆசை), செற்றம் - த்வேஷம், உடையாரை - உடைய மித்யாதேவர்களை, ஏத்தல் - ஸ்தோத்திரம் செய்து வணங்குதல், துயக்குடை - மிருதியான, தெய்வமயக்கு - தேய்வமூடமென்பதாம். (எ—று).

இவை இரண்டு செய்யுட்களாலும் தேவமூடம் கூறியவாறு.

## பாஷண்டிமூட இயல்

**33.** மாசுண்ட மார்க்கத்து நின்றுரைப் பூசித்தல்
பாசண்டி மூட மெனல்.

மாசுண்ட - குற்றமுள்ள, மார்க்கத்து- மித்தியாமார்க்கத்தில், நின்றுரை - நின்ற மித்தியா திருஷ்டிகளை, பூசித்தல் - வணங்குதல், பாசண்டி மூடம் எனல்- பாஷண்டி மூடம் என்று சொல்லப்படும். (எ—று).

மாசுண்ட மார்க்கம் எனவே அருகனுற் கூறப்பட்ட ஸந்மார்க்கநெறியில் நில்லாமல் மித்யாநெறியில் நின்றுரைக் கூறுதல் ஆயிற்று. அத்தகையோரைப் பூசித்தல் பாஷண்டிமூடம் என்றார். பூசித்தல் என்றதனுல் அன்னவரை வணங்குதலும், அந்நிகழ்ச்சியைப் பின்பற்றலுமாம். இதனை,

“ தோல்காவி சீரைத் துணிகீழ் விழவுடுத்தல்
கோல்கா கரகங் குடை செருப்பு—வேலோடு
பல்லேன்பு தாங்குதல் பாசண்டி முடமேன
நல்லவரால் நாட்டப் படும்.” (அறநெறிச்சாரம்).

### எண்வகை மதங்கள்

**34.** பிறப்புக் குலம்வலி செல்வம் வனப்புச்
சிறப்புத் தவமுணர்வோ டெட்டு.

*பிறப்பு - தாயின் சம்பந்தமான ஜாதியும், குலம் - தகப்பன் சம்பந்தமான குலமும், வலி - வல்லமையும் (பலமும்), செல்வம் - ஐச்வர்யமும், வனப்பு - அழகும், சிறப்பு - பூஜ்யமும் (பெருமையும்), தவம் - தவமும், உணர்வோடு - அறிவோடு, எட்டு - இவை எட்டும், மதங்கள் என்பன. (எ—று).*

**35.** இவற்றாற் பெரியேம்யா மென்றே யெழுந்தே
யிகழ்க்கி லிறக்கு மறம்.

*இவற்றால் - மேற்கூறிய அம்மதங்கள் எட்டினாலும், யாம் - நாம், பெரியேம் - பெருமைக்கு உரியவர்கள் ஆவேம், என்று - என்று உள்ளத்திற்கொண்டு, எழுந்து - கர்வத்தையடைந்து (தலை நிமிர்ந்து), இகழ்க்கில் - பிறரை இகழ்ச்சி செய்வர் ஆயின், அறம் - ஸம்யக்தரிசனம், இறக்கும் - அவர்கள் மாட்டுக் கெடும். (எ—று).*

*மேற்கூறிய எண்வகை மதங்களுள் ஒன்று உளவாயினும் நற்காட்சி கெடுமென்றவாறு.*

**36.** அறமுண்டே லியாவரு மெள்ளப் படார்கள்
பிறகுணத்தா லென்ன பயன்.

*அறம் - மேற்கூறிய நற்காட்சி (ஸம்யக்தரிசனம்), உண்டேல் - ஒருவர் உடையவரானால், யாவரும் - அவர் எக்குடியில் பிறந்தவரானாலும், எள்ளப்படார்கள் - எவராலும் இகழ்ச்சி செய்யப்படார்கள், (எனவே யாவராலும் பூஜிக்கப்படுவார்கள் அல்லது போற்றப்படுவார்கள் என்பதாயிற்று), பிறகுணத்தால் - அவை தவிர மற்ற குணங்களினால், என்ன பயன் - என்னப் பிரயோஜனம். (எ—று).*

*எவராலும் என்றதனால் அரசர், தேவர் முதலியோராலும் என்பதாயிற்று. "அறமுண்டேல் யாவரும் எள்ளப்படார்கள்" என்பதற்கு எத்தகைய தாழ்ந்தோரானாலும் நற்காட்சி உண்டானால் அவர்கள் இகழப்படுவதற்கில்லை, புகழவேபடுவார்கள் என்று கூறினும் பொருந்தும். அடுத்த செய்யுளை நோக்குக.*

## நற்காட்சியின் சிறப்பு

**37.** பறையன் மகனெனினுங் காட்சி யுடையா
னிறைவ னெனவுணரற் பாற்று.

*பறையன் மகன் எனினும் - நீச குலத்திற் பிறந்தவனாயினும், காட்சியுடையான் - ஸம்யக்தரிசனத்தையுடையவன், இறைவன் என - கடவுளுக்கொப்பானவன் என்று, உணரற்பாற்று - அறியத் தக்கது. (எ—று).*

*கீழ்மகனும் நற்காட்சியுடையானானால் காலாந்தரத்துக் கடவுட்டன்மை அடைதல் நிச்சயமாதல்பற்றி "இறைவன் என உணரற் பாற்று" என்றார்.*

**38.** தேவனு நாயாகுந் தீக்காட்சி யானுயுந்
தேவனு நற்காட்சி யால்.

*தேவனும் - தேவனேயானாலும், தீக்காட்சியால் - மித்யாதரிசனத்தை உடையவனாயின், நாயாகும் - நாயாகப்பிறப்பான், நாயும் - நாயும், நற்காட்சியால் - ஸம்யக்தரிசனத்தையுடையதானால், தேவனும் - தேவனாகப் பிறக்கும். (எ—று).*

*நாய் தேவனானதற்கு உதாரணம் ஜீவகசிந்தாமணியிற் காண்க. "[illegible]" ([illegible]) என்றதனாலறிக.*

## வணக்கத்திற்காகா வழிகள்

**39.** அவ்விநய மாறு மகன்றது நற்காட்சி
செவ்விதிற் காப்பா ரிடை.

*செவ்விதில் - செம்மையாக, காப்பார் இடை - மேற்கூறிய ஸம்யக்தரிசனத்தையுடையவர்களிடத்துள்ள, நற்காட்சி - ஸம்யக்தரிசனமானது, அவிநயம் ஆறும் - ஆறுவகை அவிநயங்களினாலும், அகன்றது - நீங்கியதாகும். (எ—று).*

*குற்றமற்ற நற்காட்சி ஆறுவகை அவிநயங்களினாலும் அகன்றதென்பது விளக்கும். அவிநயங்களின் இயல்பை அடுத்த இரண்டு வெண்பாக்களாற் கூறுகின்றார் அவ்விநயம் என்பதிலுள்ள 'வ்' விரித்தல் விகாரம்.*

**40.** நல்லறத்திற் றீர்ந்த வணக்கத்தை நல்லோர்கள்
சொல்வ ரவிநய மென்று.

நல்லோர்கள் - பெரியோர்கள், நல்லறத்தில் - பரமாகமத்தில், தீர்ந்த வணக்கத்தை - நீங்கிய வணக்கத்தை, அவிநயமென்று - அவிநயம் என்பதாக, சொல்வர் - கூறுவார்கள். (எ—று).

பரமாகமத்தின் நீங்கிய வணக்கமாவது:— வணங்கப்படும் குணமில்லாதவனை வணங்குதலாம். அது மேற் கூறுகின்றார்.

**41.** மிச்சை யிலிங்கியர்நூ றெய்வ மவாவினோ
டச்ச முலோபிதத்தோ டாறு.

மிச்சை இலிங்கியர் - மித்தியாலிங்கிகளாகிய மித்தியா தபஸ்விகள், நூல் - மித்தியாசாஸ்திரம், தெய்வம் - மித்தியா தேவதைகள் (ஆகிய இம்மூன்று பொருள்களையும்), அவாவினோடு - பக்தியினோடும், அச்சம் - பயத்தினோடும், உலோபிதத்தோடு - உலோபத்தினோடும் கூடி வணங்குதல், ஆறு - இப்படி ஆறுவிதமான அவிநயமாகும். (எ—று).

அவாவும், உலோபமும் ஒரு பொருள்சுட்டும் இனப்பெயர்கள் ஆதலால் இவ்விரண்டு வழிகளையும் ஒரு வழியாக்கி, அச்சம் என்பதனை ஒருவழியாகவும் கொண்டால் இருவழியாகும். இந்த இருவழியால் லிங்கி, நூல், தெய்வம் ஆகிய மூவகைப் பொருள்களை வணக்கம் செய்தால் அது ஆறு வகையாகும் என்பது.

“பயாசாஸ்நேஹ லோபாச்ச குதேவாகமலிங்கிநாம் !
ப்ரணாமம் விநயஞ்சைவ ந குர்யு: ஶுத்தத்ருஷ்டய: ”

(ரத்நகரண்டச்ராவகாசாரம்).

மிச்சை - மித்யா என்ற வடசொல் அல்லது மித்தை என்ற பாகதச்சொல்லின் திரிபு எனக்கொள்க.

“ அச்சமே ஆசை உலோபிதம் அன்புடைமை
மிச்சைபா சண்டிகள் நூல்தெய்வ—மெச்சி
வணங்க லவிநயம் என்பவே மாண்ட
குணங்களிற் குன்று தவர். (அறநெறிச்சாரம்)

**42.** இவ்வாறு நோக்கி வணங்கா ரவிநய
மெவ்வாறும் நீங்க லரிது.

இவ்வாறு நோக்கி - மேற் கூறப்பட்ட ஆறுவகை வழிகளிலும் மனத்தைச் செலுத்தி (அறிந்து), வணங்கார் - வணங்காதவரை, அவிநயம் - அவிநயம் என்னும் குற்றம், எவ்வாறும் - எவ்வகையாலும், நீங்கலரிது - நீங்குவது அருமை. (எ—று).

இதனால் நல்லறத்திற்றீர்ந்த வணக்கமுடையாரிடத்தில் அவிநயங்கள் நீங்காதெனக் கூறப்பட்டது.

**43.** காட்சி விசேட முணர்வு மொழுக்கமு
மாட்சி யதனிற் பெறும்.

காட்சி விசேடம் - ஸம்யக்தரிசன விசேஷத்தினால், உணர்வும் - நல்ஞானமும், ஒழுக்கமும் - ஸம்யக்சாரித்திரமும் (ஆகிய இவை இரண்டும்), மாட்சி - பெருமையை, அதனில் - அந்த ஸம்யக்தரிசனத்தினின்றும், பெறும் - அடையும். (எ—று).

ஸம்யக்தரிசனத்தை முன்னதாகவுடைய ஞானமும், சாரித்திரமும் பெருமையடையும். அவையே ஸம்யக்ஞானமென்றும், ஸம்யக்சாரித்திரமென்றும் கூறப்படும். ஸம்யக்தரிசனமில்லாத ஞானமும், சாரித்திரமும் மோக்ஷத்திற்கு மார்க்கமாகாதாகையால் அவை பெருமையுடையனவாகா. அவற்றை ஸம்யக்ஞான, ஸம்யக் சாரித்திரமென்று சொல்வதற்கில்லை. ஆதலால் அவசியம் ஸம்யக்தரிசனமே முதலில் அடையவேண்டுமென்பது விளங்கும். ஆகவின் நற்காட்சியில்லாத ஞானமும், சாரித்திரமும் வீட்டையும் பயனற்றவையாவன. அதை அடுத்த செய்யுளாலும் கூறுகின்றார்.

**44.** நற்காட்சி யில்லா ருணர்வு மொழுக்கமு
மொற்கா வொசிந்து கெடும்.

நற்காட்சி இல்லார் - ஸம்யக்தரிசனமில்லாதவர்களிடத்து, உணர்வும் - ஞானமும், ஒழுக்கமும் - சாரித்திரமும், ஒற்கா - சீக்கிரமாக, ஒசிந்து - ஒருங்கே, கெடும் - நாசமடையும். (எ—று).
நற்காட்சியின் நீங்கிய ஞானமும், சாரித்திரமும், ஞானமென்

றும், சாரித்திரமென்றும் சொல்வதற்கே கூடாமைபற்றி "ஒற்கா ஒசிந்து கெடும்" என்றார். அதற்கு உதாரணம் அடுத்த செய்யுளிற் கூறுகின்றார்.

**45.** அச்சிலேற் பண்டியு மில்லை சுவரிலேற்
சித்திரமு மில்லதே போன்று.

அச்சு இல்லேல் - அச்சு இல்லாவிட்டால், பண்டியும் இல்லை - வண்டி செல்வது இல்லை, சுவர் இல்லேல் - சுவர் இல்லாவிடில், சித்திரமும் இல்லதே போன்று - சித்திரமும் எழுதப்படுவதில்லை போல, (ஸம்யக்தரிசனமில்லாவிடில் ஞானமும், சாரித்திரமும் பயனற்றவை). (எ—று).

**46.** காட்சியோ டொப்பதியாங் காணேம் வையத்து
மாட்சி யுடைய துயிர்க்கு.

வையத்து-இந்த உலகத்தில், உயிர்க்கு-உயிர்களுக்கு, மாட்சி உடையது - பெருமையை உண்டாக்கக்கூடியது, காட்சியோடொப்பது — ஸம்யக்தரிசனத்தோடு சமானமானது, யாம் — நாம், காணேம் - அறியோம். (எ—று).

உலகத்தில் ஜீவராசிகளுக்குப் பெருமையை உண்டாக்கக் கூடியது ஸம்யக்தரிசனம் ஒன்றைத்தவிர வேறொன்றுமில்லை என்றவாறு. முக்திக்கு முதற்காரணம் ஸம்யக்தரிசனமேயாதலால் அங்ஙனம் கூறினார்.

**47.** விரத மிலரேனினுங் காட்சி யுடையார்
நரகம் புகுத லிலர்.

விரதமிலர் எனினும் - விரதங்களை அனுஷ்டிக்காதவராயினும், காட்சியுடையார் - ஸம்யக்தரிசனமுடையவர்கள், நரகம் புகுதல் இலர் - நரகத்தில் போய்ப் பிறவார்கள். (எ—று).

விரதம் ஆவன:— அணுவிரதம், குணவிரதம், சிக்ஷா விரதங்களும், மஹாவிரதங்களுமாம். இவற்றின் விவரங்களை இந்நூலிலேயே மேற்கூறுகின்றார்.

நரகம்:— தீவினையின் உதயத்தினால் போய்ப் பிறந்து துன்பத்தை அடைவதற்கு ஏற்பட்ட கீழுள்ள ஸ்தானமாகும். அவை

ஏழுவகையாக உள்ளன. அவையாவன:— இரத்தினப் பிரபை, சர்க்கராப் பிரபை, வாலுகாப் பிரபை, பங்கப் பிரபை, தூமப் பிரபை, தமப் பிரபை, தமஸ்தமப் பிரபை என்பன.

"சேறியச் சொன்ன பொருடெளிந்தார்
சேரார் விலங்கிற் பெண்ணாகார்
குறுகார் நரக மொரேழும்"

என்ற ஜீவகசிந்தாமணிச் செய்யுளுடன் ஒத்து நோக்குக.

**48. கலங்கலிற் காட்சி யுடையா ருலகில்
விலங்காய்ப் பிறத்த லிலர்.**

உலகில் - உலகத்தில், கலங்கலில்-கலக்கமில்லாத, காட்சியுடையார் - ஸம்யக்தரிசனத்தையுடையவர்கள், விலங்காய் - அடுத்தஜன்மத்தில் விலங்கினமாய், பிறத்தல் இலர் - பிறவார்கள். (எ—று).

நற்காட்சியுடையவர்கள் மறுபிறப்பில் விலங்காகப் பிறவார்கள்.

**49. பெண்டிர் நபுஞ்சக ராகார் பிழைப்பின்றிக்
கொண்ட நற்காட்சி யவர்.**

பிழைப்பு இன்றி - தவறுதலில்லாமல், கொண்ட நற்காட்சியவர் - ஸம்யக்தரிசனத்தைக் கொண்டவர்கள், பெண்டிர் - (மறுபிறப்பில்) பெண்டிர்களாகவும், நபுஞ்சகர் - அலிகளாகவும், ஆகார் - பிறவார்கள், (எ—று).

**50. இழிகுலத் தென்றும் பிறவா ரிறைவன்
பழியறு காட்சி யவர்.**

இறைவன் - ஸர்வக்ஞனால் அருளிய, பழியறு - இருபத்தைந்து குற்றங்களும் நீங்கிய, காட்சியவர் - ஸம்யக்தரிசனத்தையுடையவர், என்றும் - எப்பொழுதும், இழிகுலத்து - இழிவான (தாழ்ந்த) குலத்தில், பிறவார் - பிறவார்கள். (எ—று).

ஸம்யக்தரிசனத்திற்கு இருபத்தைந்து குற்றங்கள்:— முன் 2-ம் பக்கம் பார்க்க.

**51. உறுப்பிற் பிறர்பழிப்ப வென்றும் பிறவார்
மறுப்பாடில் காட்சி யவர்.**

மறுப்பாடில் - குற்றமற்ற, காட்சியவர் - ஸம்யக்தரிசன முடையார், உறுப்பில் - கண், காது முதலிய அங்கங்களில், பிறர் பழிப்ப - பிறரால் பழிக்கும்படி (அங்கஹீனர்களாக), என்றும் - எப்பொழுதும், பிறவார் - பிறவார்கள். (எ—று).

குற்றமற்ற காட்சியுடையவர் மறுபிறப்பில் அங்கஹீனர் களாகப் பிறவார் என்றவாறு.

**52.** குறுவாழ்க்கை நோயோடு நல்குரவு கூடப்
பெறுவாழ்க்கை யுட்பிறத்த லில்.

குறுவாழ்க்கை - குத்ஸிதமாகிய சிறுகுடிலிற் பிறத்தலும், நோயோடு - வியாதியும், நல்குரவு - வறுமையும், கூட - ஆகிய இவை மூன்றும், பெறுவாழ்க்கையுள் - அடையும் வாழ்க்கையுள், பிறத்தல் இல் - (ஸம்யக்தரிசனமுடையார்) பிறவார். (எ—று).

குறுவாழ்க்கை— வாழ்க்கைக்குப் போதுமான இடமில்லாத சிறு குடில்.

**53.** அரச ரிளவரசர் செட்டியரு மாவர்
புரைதீர்ந்த காட்சி யவர்.

புரைதீர்ந்த - குற்றம் நீங்கிய, காட்சியவர் - ஸம்யக்தரிசன முடையார், அரசர் - (மறுபிறப்பில்) இராஜாக்களாகவும், இளவரசர் - யுவராஜாக்களாகவும், செட்டியரும் - இப்பர், கவிப்பர், பெருங்குடி வாணிபமென்னும் ஸ்ரேஷ்டிகுலங்களில் ஸ்ரேஷ்டிகளாகவும், ஆவர் - பரிணாமானுசாரத்தின்படி பிறப்பார்கள். (எ—று).

**54.** மூவகைக் கீழ்த்தேவ ராகார் முகடுயர்வர்
தோவகையில் காட்சி யவர்.

தோவகையில் - குற்றமில்லாத, காட்சியவர் - ஸம்யக்தரிசன முடையவர், மூவகைக் கீழ் தேவராகார் - (மறுபிறப்பில்) பவண, வியந்தர, ஜ்யோதிஷ்கரென்னும் மூன்றுவகைக் கீழ்த் தேவராகப் பிறவார்கள், முகடு உயர்வர் - மேலான கல்பாதி தேவர்களாகவே பிறப்பார்கள்.

‘ கீழ்முத்தேவர் குழாந்தீண்டார்” என்ற சிந்தாமணிச் செய்யுளாலும் அறிக.

"நற்காட்சி யுடைவிலங்கும் மானிடரும் வதஞ்சேறிந்துங்
கற்பாதி முதலாகக் கற்பாந்த முறச்சேல்வர்" (மே. ம. பு)
என்ற செய்யுளாலும் அறிக.

## 55. விச்சா தரரும் பலதேவரு மாவர்
## பொச்சாப்பில் காட்சி யவர்.

*பொச்சாப்பில் - மறதியற்ற, காட்சியவர் - ஸம்யக்தரிசனமுடையார், விச்சாதரரும் - (மறுஜன்மத்தில்) வித்யாதரராகவும், பலதேவரும் - பலதேவராகவும், ஆவர் - பிறப்பார். (எ—று).*

வித்யாதரர்— *வெள்ளியம் பெருமலை வாசிகளும், வித்தையினுதவியினுல் தேவர்களைப் போன்று பல போகங்களை அனுபவிக்கக் கூடியவர்களுமாவர்.*

"நமையோப்பர் விஞ்சையாலிவ்
விஞ்சையர் நாகர் கோவே" (மே. ம. பு) *என்றதனுலறிக.*

பலதேவர்:— *வாசுதேவர்க்கு மூத்தார்.*

அவஸர்ப்பிணி, உத்ஸர்ப்பிணி *காலங்களில் முறையே ஒன்பது* பலதேவர், வாசுதேவர், பிரதிவாசுதேவர்கள் *உண்டாதல் முறை. அவர்களுள்* பலதேவரும், வாசுதேவரும் *ஒன்றுபட்டுப்* பிரதிவாசுதேவரை *வென்று இராஜ்யபோகங்களை அடைந்தனுபவித்தல் இயல்பு. அதனை இங்குக் கூறினுர்.*

## 56. முச்சக் கரத்தோடு சித்தியு மெய்துவர்
## நச்சறு காட்சி யவர்.

*நச்சறு - குற்றமற்ற, காட்சியவர் - ஸம்யக்தரிசனமுடையார், முச்சக்கரத்தோடு - தேவேந்திர சக்கரம், நரேந்திர சக்கரம், ஆர்ஹத்பதவியின் தர்மசக்கரம் என்னும் இந்த மூன்று பதவிகளின் சக்கரபோகங்களை அனுபவித்து, சித்தியும் - (பிறகு) மோக்ஷத்தினையும், எய்துவர் - அடைவார். (எ—று).*

நற்காட்சி [ஸம்யக்தரிசனம்] முற்றும்.

## நன்ஞானம் (ஸம்யக்ஞானம்).

**57.** பொருணின்ற பெற்றியைப் பொய்யின் றுணர்தல்
மருளறு நன்ஞான மாண்பு.

*பொருள் நின்ற - ஜீவாதிபதார்த்தங்களின், பெற்றியை - ஸ்வரூபத்தை, பொய்யின்றி - உள்ளபடி, உணர்தல் - அறிவது, மருளறு - மயக்கமற்ற, நன்ஞானம் - ஸம்யக்ஞானத்தின், மாண்பு - பெருமையாகும். (எ—று).*

உயிரும், உயிரல்லதும் முதலிய பொருள்களின் உண்மையை உள்ளபடி உணர்தல் ஸம்யக்ஞானமாகும்.

ஜீவாதிபதார்த்தங்களாவன:— முன் 4-ம் பக்கம் பார்க்க.

அருகபரமனுலருளிய ஆகமங்களை அறிதல் ஸம்யக்ஞானம் எனப்படும். ஆகமங்கள் பொதுவாய் நான்கு வகைப்படும். அவைகளை முறையே அடுத்த செய்யுள் நான்கினுல் கூறுகின்றார்.

**58.** சரிதம் புராணம் அருத்தக் கியான
மரிதி னுரைப்பது நூல்.

*சரிதம் - ஏக புருஷனுடைய கதையும், புராணம் - த்ரிசஷ்டி சலாகா புருஷருடைய கதையும் (மஹாபுராணமும்), அருத்தக்கியானம் - நோன்புக்கதை முதலிய அர்த்தக்ஞானக் கதைகளையும், அரிதின் - அருமையாக, உரைப்பது - சொல்லுவதானது, நூல் - பிரதமானுயோகம் என்னும் ஆகமமாகும். (எ—று).*

ஏக புருஷன் கதை.— ஜீவக சரிதம், ஸ்ரீபால சரிதம் முதலியன. த்ரிசஷ்டி சலாகா புருஷர்கள்:— 63-சலாகா புருஷர்கள், அதாவது தீர்த்தங்கரர்கள் 24, சக்கரவர்த்திகள் 12, பலதேவர் 9, வாசுதேவர் 9, பிரதிவாசுதேவர் 9 —ஆக-63. இவர்கள் கதையைக் கூறும் நூல், புராணம் எனப்படும். நோன்புக்கதைகள் முதலிய மற்றக்கதைகளுக்கு அர்த்தக்ஞானம் எனப்பெயர். இவை அனைத்தும் பொதுவாகப் பிரதமானுயோகம் எனப்படும்.

**59.** உலகின் கிடக்கையு மூழி நிலையு
மலைவின் றுரைப்பது நூல்.

உலகின் கிடக்கையும் - லோகத்தின் ஸ்வரூபத்தையும், ஊழி நிலையும் - உத்ஸர்ப்பிணி, அவஸர்ப்பிணி என்னும் காலபேதத்தையும், மலைவின்றி - மாறுபாடில்லாமல், உரைப்பது - சொல்லுவது, நூல் - கரணாநுயோகம் என்னும் பரமாகமமாகும். (எ—று).

லோகஸ்வரூபத்தையும், காலபேதத்தையும் 'மேருமந்தர புராணம்' 'லோகசூடாமணி' முதலிய நூல்களில் கண்டுகொள்க.

**60. இல்லற மேனைத் துறவற மென்றிவற்றைப்
புல்ல வுரைப்பது நூல்.**

இல்லறம் - மனை வாழ்க்கையாகிய ஸ்ராவக தர்மத்தினையும், ஏனை - இதற்கு அயலானதாகிய, துறவறம் என்றிவற்றை - மனை துறந்து தபம்செய்யும் யதி தர்மத்தையும், (ஆகிய இவ்விரு தர்மங்களையும்), புல்ல - பொருந்தும்படி, உரைப்பது-சொல்வது, நூல் - சரணாநுயோகம் என்னும் ஆகமமாகும். (எ—று),

ஸ்ராவக, யதி தர்மானுஷ்டானங்களை விவரிக்கும் நூல் சரணாநுயோகம் எனப்படும்.

**61. கட்டொடு வீடு முயிரும் பிறபொருளு
முட்டின்றிச் சொல்லுவது நூல்.**

கட்டொடு - ஜீவன்களிடத்தில் கர்மம் கட்டுகிற வழியையும், வீடும் - கர்மங்கள் விடுதலை அடைந்து மோக்ஷத்தையடையும் தன்மையையும், உயிரும் - உயிரின் இயல்பையும் (ஜீவபதார்த்தத்தையும்), பிறபொருளும் - உயிரல்லனவாகிய மற்றப் பொருள்களின் தன்மையையும் (அஜீவபதார்த்தங்களையும்), முட்டின்றி - தடையில்லாமல், சொல்லுவது - உரைப்பது, நூல் - திரவ்யானுயோகம் என்னும் ஆகமமாகும். (எ—று).

ஜீவாதி நவ பதார்த்தங்களின் ஸ்வரூபத்தைக் கூறும் நூல் திரவ்யானுயோகம் என்பதாம்.

இங்ஙனம் கூறிய இந்நான்கு வகை ஆகமங்களை அப்பியசித்து அறிந்த ஞானம் ஸம்யக்ஞானம் என்பதாகும்.

நன்ஞானம் [ஸம்யக்ஞானம்] முற்றும்.

## நல்லொழுக்கம் (ஸம்யக்சாரித்திரம்).

**62.** காட்சி யுடையார் வினைவரும் வாயிலின்
மீட்சியா நல்லொழுக்கு நன்று.

*காட்சியுடையார்-ஸம்யக்தரிசனமுடையவர்களே, வினைவரும்-வினைகள் (கர்மங்கள்) ஆத்மனிடத்தில் வருகிற, வாயிலின் - வழியின் நின்றும் (ஆஸ்ரவத்தின் நின்றும்), நன்று - நன்றாக, மீட்சி-மீளச்செய்வது, அதாவது கர்மங்கள் வந்து சேராமல் தடைசெய்வது, நல்லொழுக்கு - ஸம்யக்சாரித்திரம், ஆம் - ஆகும். (எ—று).*

*அதைப்பற்றி இனிக் கூறுகின்றார். மீட்சி + ஆம் = மீட்சியாம் என்பது, 'ம்' கெட்டு 'மீட்சியா' என்று ஆயிற்று.*

## நல்லொழுக்கவகை.

**63.** குறைந்ததூஉ முற்ற நிறைந்ததூஉ மாக
வறைந்தா ரொழுக்க மிரண்டு.

*ஒழுக்கம்-ஸம்யக்சாரித்திரத்தை, குறைந்ததூஉம்-அணுவிரதமென்றும், முற்ற நிறைந்ததூஉம்-மஹாவிரதமென்றும், இரண்டு-இரண்டுவிதமாக, அறைந்தார் - ஸர்வக்ஞர் கூறியருளினார்.*

அணுவிரதம்:— கொலை, பொய், களவு, காமம், பரிக்கிரஹம் *என்பவற்றை ஏகதேசத்தினால் துறத்தல் (அதாவது ஒன்றிரண்டை விடுதல்).*

மஹாவிரதம்:— *மேற்கூறிய* கொலை, பொய், களவு, காமம், பரிக்கிரஹம் *என்பனவற்றை முற்றும் துறத்தல்.*

*" ஹிம்ஸாந்ருதஸ்தேயா ப்ரஹ்மபரிக்ரஹேப்யோ விரதி*
*[வ்ரதம்"*

*"தேசஸர்வதோ அணுமஹதீ" (என்ற தத்வார்த்த ஸூத்ர) வாக்கியங்கள் இங்குக் கவனிக்கத் தக்கன.*

## விரத இயல்

**64.** நிறைந்த திருடிகட் காகு மனையார்க்
கொழிந்தது மூன்று வகைத்து.

நிறைந்தது - மஹாவிரதமானது, இருடிகட்கு ஆகும் - ரிஷிகளுக்கு (தபஸ்விகளுக்கு) ஆகும், மனையார்க்கு - இல்லறத்தார்க்கு (ஸ்ராவகர்களுக்கு), ஒழிந்தது - மற்றையதாகிய அணுவிரதமானது, மூன்று வகைத்து - அணுவிரதம், குணவிரதம், சிக்ஷாவிரதம் என மூன்றுவகையாகும். (எ—று).

இருடி:— ரிஷியென்னும் வடமொழித் திரிபு.

### மனையறத்தார் விரதம்

**65.** அணுவத மைந்துங் குணவத மூன்று
முணர்நான்கு சிக்கா வதம்.

அணுவதம் ஐந்தும் - அணுவிரதம் ஐந்து விதமும், குணவதம் மூன்றும் - குணவிரதம் மூன்றுவிதமும், நான்கு சிக்காவதம் - சிக்ஷாவிரதம் நான்குவிதமும், என்பதாக, உணர் - அறிவாயாக. (எ—று).

அணுவிரதம் ஐந்தாவன:— அஹிம்ஸை, ஸத்தியம், அஸ்தேயம், பிரம்மசர்யம், பரிமித பரிக்கிரஹம் என்பன.

குணவிரதம் மூன்றுவன:— திக்விரதம், அனர்த்த தண்டவிரதம், போகோபபோக பரிமாண விரதம் என்பன.

சிக்ஷாவிரதம் நான்காவன:— ஸாமாயிகம், புரோஷதோபவாஸம், தேசாவ காசிகம், அதிதி ஸம்விபாகம் என்பன. இவைகள் பன்னிரண்டும் இல்லறத்தார் (ஸ்ராவகர்) அனுஷ்டிக்கக்கூடிய சாரித்திரம் (ஒழுக்கம்) ஆகும்.

" பெரியகொலை பொய்களவு பிறர்மனையி லொருவல்
பொருள்வரைதல் மத்தமது புலைசுணலி னீங்கல்
பெரியதிசை தண்டமிரு போகம்வரைந் தாடல்
மரீஇயசிக்கை நான்குமிவை மனையறத்தார் சீலம்.
(மே. ம. பு.)

### அணுவிரதம் ஐந்தாவன.

**66.** பெரிய கொலைபொய் களவொடு காமம்
பொருளை வரைதலோ டைந்து.

பெரிய கொலை - த்ரஸஜீவவதையும், பொய் - பொய்பேசுதலையும், களவோடு - திருட்டோடு, காமம் - அன்னிய மாதர்பால்

ஏற்படும் காமத்தையும் நீக்குதலும், பொருளை - க்ஷேத்திரம், வாஸ்து முதலிய பொருள்களை, வரைதலோடு - மிதமாக (குறைவாக) உபயோகப்படுத்துதலும் ஆகியவை, ஐந்து - அணுவிரதங்கள் ஐந்தாகும். (எ—று).

"பொருளை வரைதலோடு" என்றதனால் மற்ற நான்கினையும் நீக்குதலும் என்று கொள்ளவேண்டியதாயிற்று.

த்ரஸஜீவன்கள்:— ஒரு இடத்தைவிட்டு மற்றோரிடத்திற்குத் தானாகச் செல்லக்கூடிய, த்வீந்திரியம் (ஈரறிவு) முதல் பஞ்சேந்திரியம் (ஐயறிவு) வரையுமுள்ள ஜீவன்கள்.

"த்வீந்த்ரியாதய ஸ்த்ரஸா:" என்ற தத்வார்த்த சூத்திரத்தினை நோக்குக. இதனை அடுத்த செய்யுளில் "இயங்குயிர்" எனக் கூறுவதானுமுணர்க.

இடம்விட்டுச்செல்லவியலாத ஏகேந்திரியத்தினை (ஓரறிவினை) யுடையனவாகிய பிருத்வி, அப்பு, தேஜ, வாத, வனஸ்பதிகாய ஜீவன்கள், ஸ்தாவர ஜீவன்கள் எனப்படும். இவற்றுள்:—

அஹிம்ஸாணு விரதமாவது:— த்ரஸ ஜீவன்களை வதியாமையாகும். ஸ்தாவரஜீவ வதையினையும் ஸர்வதாநீக்குதல் மனையறத்தார்க்குக் கூடாமையின், த்ரஸ ஜீவ வதையினை மாத்திரம் நீக்குதல் அஹிம்ஸாணு விரதம் எனக் கூறப்பட்டது. அதனையே ஆசிரியர் பெரிய கொலையின் மீட்சி என்றார், எனக்கொள்க.

அணுவிரதம்.

1. அஹிம்ஸாணுவிரதம்:— த்ரஸ ஜீவன்களை வதியாமை.
2. ஸத்யாணுவிரதம்:— பாபஹேதுவாகிய வசனங்களைப் பேசாமை.
3. அஸ்தேயாணுவிரதம்:— பிறரால் கொடாத பொருளைக் கொள்ளாமை.
4. பிரம்மசரியாணுவிரதம்:— தன்மனைவியைத்தவிர இதரமாதர்களை விரும்பாமை.
5. பரிமிதபரிக்கிரஹாணுவிரதம்:— க்ஷேத்திராதி வஸ்துக்களை மிதமாகக் கொள்ளல்.

மஹாவிரதம்.

1. அஹிம்ஸா மஹாவிரதம்:— த்ரஸ, ஸ்தாவராதி சகலஜீவன்களையும் வதியாமை,

2. ஸத்ய மஹாவிரதம்:— ஆத்மஹிதமான வசனங்களைத் தவிர மற்ற வசனங்களைப் பேசாமை.
3. அஸ்தேய மஹாவிரதம்:— பிறர்பொருளைக் கொள்ளாமை.
4. பிரம்மசர்ய மஹாவிரதம்:— அன்னிய மாதர்களை விரும்பாமை.
5. பரிக்கிரஹவிரதி மஹாவிரதம்:— பாஹ்யாப்யந்தரமுதலிய சகலபரிக்கிரஹங்களையும் முற்றத் துறத்தல்.

## 67. இயங்குயிர்கொல்லாமை யேவாமை யாகும் பெருங்கொலையின் மீட்சி யெனல்.

பெருங்கொலையின்-த்ரஸஜீவ வதையின், மீட்சி எனல்-மீட்சியாகிய அஹிம்ஸாணுவிரதமெனப்படுவது (யாதெனில்), இயங்குயிர் - இடம்விட்டுச் செல்லக்கூடிய த்ரஸ (ஜங்கம) ஜீவன்களை, கொல்லாமை-தான் கொல்லாதிருப்பதும் (வதியாமையும்), ஏவாமை - கொல்லும்படி பிறரை யேவாமலிருப்பதும், ஆகும் - ஆகும்.

ஏவுதலும் கூடாதென்றதனால் அனுமதித்தலும் கூடாதென்றவாறு. இதனால் க்ரதம், காரிதம், அனுமோதம் ஆகிய இவை மூன்றினாலும் த்ரஸ ஜீவ வதையின் மீளுதல் அஹிம்ஸாணுவிரதம் ஆகும். க்ரதம்— தான் செய்தல். காரிதம்—பிறரைக் கொண்டு செய்வித்தல். அனுமோதம்— பிறர் செய்கைக்கு உடன்படல்.

## 68. அறுத்த லலைத்த லடைத்தலோ டார்த்த லிறப்ப பொறையிறப்போ ரைந்து.

அறுத்தல் - மாடு, நாய் முதலிய பிராணிகளின் காது முதலிய அங்கங்களை அறுப்பதும், அலைத்தல் - சாட்டை, தடி முதலானவைகளால் அடித்து ஹிம்ஸித்தலும், அடைத்தலோடு - ஆஹாராதிகள் போடாமல் அடைத்துவைப்பதும், ஆர்த்தல் - கயிறு, சங்கிலி, விலங்கு முதலியவைகளைக்கொண்டு கட்டுதலும், இறப்ப பொறை - பெரும் பாரத்தை ஏத்துதலும், (என்றிப்படி), இறப்பு - அஹிம்ஸா விரதத்திற்கு அதிசாரம், ஐந்து - ஐந்தாகும். (எ—று).

அதிசாரம்—தோஷம். அஹிம்ஸாவிரதத்தைக் கைக்கொண்டு பின்னர், மேற்கூறிய காரியங்களைச் செய்தால், விரதம் நசிக்கின்ற

படியால் இவை ஐந்தும் அதிசாரம் எனப்பட்டன. அதிசாரம் இன்றி விரதத்தினை அனுஷ்டித்தால்தான் விரதம் ஸம்பூர்ண மாய் நிறைவுறும். ஆதலால், அதிசாரம் இன்னவை என்று முந்தி அவசியம் அறிந்து கொள்ளவேண்டியதுபற்றி, அவைகள் கூறப்படுகின்றன.

"வமுவைஙுவெஊாதி ஹாராரோவணா ஊவா_ந நிரோராமா:"
(தத்வார்த்த ஸூத்ரா) என்றதையும் அறிக.

## 69. பாவம் பொருந்துவன சொல்லாமை ஏவாமை யாகு மிரண்டாம் வதம்.

பாவம் பொருந்துவன - பாபத்திற்கு ஹேதுவான வசனங் களை, சொல்லாமை - தான் சொல்லாமையும், ஏவாமை - பிறரைச் சொல்லும்படி ஏவாமையும், இரண்டாவது - ஸத்யாணுவிரதம் என்னும் இரண்டாவது அணுவிரதம், ஆகும் - ஆகும். (எ—று).

பாபத்திற்குக் காரணமான வசனங்களைத் தான் பேசாமலும், பிறரைச் சொல்லும்படி ஏவாமலும், பிறர் சொல்லும்படி அனு மதிக்காமலும் இருப்பது ஸத்யாணுவிரதம் ஆகும்.
"சுஸஊஹியா_நஊ_நாதழ" (தத்வார்த்த ஸூத்ரம்) என்ற தையும் அறிக.

## 70. குறளை மறைவிரி யில்லடை வெளவல் புறவுரை பொய்யோலை கேடு.

குறளை-பொறாமையினால் இருவருடைய ஸ்நேகத்தைப் பிரிக் கும் பொருட்டுச் செய்யும் ஏமாற்றுதலும், மறைவிரி - ஸ்திரீபுரு ஷர்களால் ஏகாந்தத்தில் அனுஷ்டித்த ரஹஸ்யச் செயல்களை வெளி யிடுதலும், இல்லடைவெளவல் - பிறரால் தன்னிடத்தில் கொண்டு வந்து வைக்கப்பட்டப் பொருள்களை அபகரித்தலும், புறவுரை - அப்யுதய நிஸ்ரேயஸ ஸாதகக் க்ரியைகளுக்கு மாறுபாடாக வேறு ஒன்றைச் சொல்லுதலாகிய மித்யோபதேசமும், பொய்யோலை - பிறர் கெடும்பொருட்டுப் பொய்யோலை (பொய்ப்பத்திரம்) எழுது தலும் ஆகிய இவை, கேடு - ஸத்யாணுவிரதத்திற்கு அதிசார மாவன. (எ—று).

"மித்யோபதேஶ ரஹோப்யாக்யாந கூடலேகக்ரியா ந்யாஸாபஹார ஸாகாரமந்த்ரபேதா:" என்ற (தத்வார்த்த ஸூத்ர) வாக்கியத்தாலும் அறிக.

**71. கொடாதது கொள்ளாமை ஏவாமை யாகுங்
கொடாதது கொள்ளா வதம்.**

*கொடாதது - ஒருவர் கொடாத வஸ்துக்களை, கொள்ளாமை- தான் கைக்கொள்ளாமலும், ஏவாமை - அவ்விதம் அபகரிக்கப் பிற ரை ஏவாமலும் இருப்பது, கொடாதது கொள்ளாவதம் -* அஸ்தே யாணுவிரதம், *ஆகும் - ஆகும்.* (எ—று).

*பிறரால் மனமாரக் கொடாத வஸ்துக்களைத் தான் கொள்ளா மலும், கொள்ளும்படி பிறரை ஏவாமலும், அனுமதிக்காமலும் இருப்பது* அஸ்தேயாணுவிரதம்(களவாடாமை) *எனப்படும்.*

**72. குறைவு நிறைகோடல் கொள்ளைக் கவர்தல்
மறைய விராத விறப்பு.**

*குறைவு-அளவு குறைந்த மரக்கால், படி, தராசு முதலியவற் றால் அளந்து பிறருக்குக்கொடுப்பதும், நிறைகோடல்-அதிகமான மரக்கால் முதலியவற்றால் அளந்து வாங்குவதும், கொள்ளை கவர் தல் - அரசாங்க சட்டத்திற்கு மீறி கொள்ளையிடுதல் முதலியன செய்தலும், மறையவிராதல் - பொன்னுள் வெள்ளியும், பாலுள் நீரும், உப்புள் மணலும், நெய்யுள் எண்ணெயும், நெல்லுள் பதரும் கலந்து மறைத்துக் கொடுப்பதும் (இவைபோல்வன பிறவும்), இறப்பு - களவாடாமைக்கு அதிசாரம் ஆகும்.* (எ—று).

*இன்னும் இரண்டு அதிசாரங்களை அடுத்த பாவில் கூறு கின்றார்.*

**73. கள்ளரோடு கூடல் கள்ளர் கொணர்பொருளை
உள்ளினர் கோடலோ டைந்து.**

*கள்ளரொடு கூடல் - திருடர்களுடன் கூடுதலும், கள்ளர் கொணர் பொருளை - திருடர்கள் திருடிவரும் பொருளை, உள்ளி னர் - கருதி இச்சித்தவர்களாகி, கோடலோடு - அவற்றை*

லாபமாக வாங்குதலோடு, ஐ ந் து - அஸ்தேய விரதத்திற்கு உரிய அதிசாரங்கள் ஐந்தாகும். (எ—று).

"ஷேநப்ரயோக ததாஹ்ருதா தாநவிருத்த ராஜ்யாதி க்ரமஹீநாதிக மாநோந்மாந ப்ரதிரூபக வ்யவஹாரா:" (தத்வார்த்த ஸூத்ரம்) என்றதனையும் ஈண்டு நோக்குக.

## 74. விதித்த வழியின்றிக் காமம் நுகர்தல் மதிப்பின்மை நான்காம் வதம்.

விதித்த வழியின்றி - குரு, தந்தை, தாய், பந்துஜனங்கள்முதலானோர் சம்மதியின்பேரில் அக்னிசாக்ஷியாக மணந்த தன்மனைவியிடத்தல்லது இதர மாதர்களிடத்து, காமம் நுகர்தல் - காமசேவை செய்தலை, மதிப்பின்மை - மனத்தினாலும் எண்ணாமை, நான்காம் வதம் - பிரம்மசரியம் என்னும் நான்காவதுவிரதம் ஆகும்.

தன் மனைவி தவிர இதரமாதர்களை நுகர மனத்தினாலும் நினையாமை பிரம்மசரியாணுவிரதம் ஆகும். மனநிகழ்ச்சியும் (மனதில் எண்ணுதலும்) பாபத்திற்குக் காரணமாதல்பற்றி "மதிப்பின்மை" என்று கூறினார்.

## 75. அனங்க விளையாட்டு வேட்கை மிகுதி மனங்கொள் விலாரிணைக் கேடு.

அனங்க விளையாட்டு - காமவிகாரத்தால் அங்கமில்லாதவிடத்தில் கிரீடிக்கிறதும், வேட்கைமிகுதி - ஸதா தீவிரமான காமபரிணாமமுடைமையும், மனங்கொள்விலார் இணை - மனங்கொளக் கூடாது பொருள் நிமித்தமாகக்கூடும் வேசிகைளின் கூட்டுறவும், கேடு - பிரம்மசர்யாணுவிரதத்திற்கு அதிசாரமாவன. (எ—று).

மற்ற இரண்டு அதிசாரங்களை அடுத்த செய்யுளில் கூறுகிறார்.

## 76. பிறர்மனை கோடல் பிறர்க்குச் செல்வாளை திறவதிற் கோடலோ டைந்து.

பிறர் மனைகோடல் - பிறர் மனைவியைக் கைக்கொள்ளுதலும், பிறர்க்குச் செல்வாளை - பிறருக்கு உரியளாகச்செல்லுமவளை, திறவதில் - வல்லமையினால், கோடலோடு - கைக்கொள்ளுதலோடு, ஐந்து - ஐந்து அதிசாரங்கள் ஆவன. (எ—று).

" பரவிவாஹகரணே க்வசிகா பரிக்ருஹீதா பரிக்ருஹீதா கமநாநங்க க்ரீடா காமதீவ்ராபி நிவேசா: " (தத்வார்த்த ஸூத்ரம்) என்றதனையும் ஈண்டு நோக்குக

**77. பொருள்வரைந் தாசைச் சுருக்கியே வாமை யிருடீர்ந்தார்க் கைந்தாம் வதம்.**

பொருள் வரைந்து - செல்வம் முதலிய பத்துவகை வஸ்துக்களை மிதம்செய்து, ஆசை சுருக்கி - ஆசையைத் தான் அடக்கியும், ஏவாமை - பிறரைக்கொண்டு பொருள்களை விருத்திசெய்யும்படி ஏவாமலிருப்பதும், இருள் தீர்ந்தார்க்கு - அக்ஞானமாகிய இருளின் நீங்கிய ஸம்யக்த்ரஷ்டிகளுக்கு, ஐந்தாம் வதம் - பரிமித பரிக்கிரஹ விரதம் என்னும் ஐந்தாவது அணுவிரதமாகும். (எ—று).

செல்வம் முதலிய பத்து வஸ்துக்களாவன:— க்ஷேத்ரம், வாஸ்து, ஹிரண்யம், ஸ்வர்ணம், தனம், தான்யம், தாஸி, தாஸன், குப்யம், பாண்டம் என்பனவாம். இவைகளில் இவ்வளவுக்கு மேல் வைத்துக்கொள்வதில்லை என்று மிதஞ்செய்தலும், பிறரைக்கொண்டு விருத்தி செய்யாமையும், அனுமதிக்காமலிருப்பதும் பரிமித பரிக்கிரஹ விரதம் எனப்படும்.

**78. இயக்கமோ டீட்டம் பெருக்கலும் லோப மியம்புமிகைக் கோடலோ டைந்து.**

இயக்கமோடு - பிராணிகளின் வருத்தமறியாமல் ஏறி நெடுந்தூரம் சவாரி செய்தலும், ஈட்டம் பெருக்கலும் - சேர்த்துவைத்த தான்யம் முதலியவற்றை த்ரஸஜீவன்கள் உற்பத்தியாகும்வரையில் வைத்திருக்கின்றதும், உலோபம் - ஸத்பாத்திரங்களில் தானம் கொடாமையும், வியப்பு - பிறர் செல்வங்கண்டு ஆச்சர்யமடைதலும், மிகைக் கோடலோடு - தன்னால் முடியாத காரியத்தை ஆரம்பிக்கின்றதும், ஐந்து - இப்படி பரிமித பரிக்கிரஹ விரதத்திற்கு அதிசாரம் ஐந்து ஆவன. (எ—று).

அவையாவன:— அதிவாஹனம், ஸங்கிரஹம், அதிவிஸ்மயம், அதிலோபம், அதிபாரவஹனம், என்பன.

அதிவாஹநாதி ஸங்க்ரஹ விஸ்மய லோபாதி பாரவஹநாநி பரிமித பரிக்ரஹஸ்ய ச விக்ஷேபா: பஞ்சலக்ஷ்யந்தே (ரத்நகரண்டக ச்ராவகாசாரம்) என்றதனால் அறிக.

## அணுவிரதங்களின் சிறப்பு

**79.** ஐயைந் திறப்பிகந் தைந்து வதங்களுஞ்
செய்யும் சுவர்க்கச் சுகம்.

*ஐயைந்து இறப்பு - இங்ஙனம் கூறிய இருபத்தைந்து அதிசாரங்களும், இகந்த - நீங்கிய, ஐந்து வதங்களும் - மேற்கூறிய ஐந்து விரதங்களும், சுவர்க்கச் சுகம் - ஸ்வர்க்கலோக சுகத்தை, செய்யும்- அனுஷ்டிப்பவர்களுக்குச் செய்யக்கூடியனவாய் ஆகின்றன.*

*செய்தற்குக் காரணமாதல்பற்றிக் காரணத்தைச் "செய்யும்" என்று காரியமாக உபசரித்தார்.*

## விரதங்களினுல் சிறப்படைந்தவர்கள்

**80.** சட்டித் தனதேவன் பாரீசன் நீலியும்
பெற்றுர் சயனுஞ் சிறப்பு.

*சட்டி - அஹிம்ஸாணு விரதத்தினுல் (கொல்லாமையினுல்), சட்டிப்புலையனும் - சட்டிப்புலையன் என்ற யமபாலனும், தன தேவன் - ஸத்யாணுவிரதத்தினுல் (பொய் சொல்லாமையினுல்)* தனதேவனும், *பாரீசன் - அஸ்தேயாணு விரதத்தினுல் (களவாடாமையினுல்)* பாரிஷேணகுமாரனும், *நீலியும் - பிரம்மசர்யாணு விரதத்தினுல்* நீலிநங்கையும், *சயனும் - பரிமித பரிக்கிரஹாணு விரதத்தினுல்* ஐயகுமாரனும், *சிறப்பு - அரசர்களாலும் தேவர்களாலும் செய்த சிறப்பினை, பெற்றுர் - அடைந்தார்கள். (எ—று).*

*சட்டிப்புலையனை, யமபாலனென்று ப்ராவகாசாரத்தில் கூறப்படுகிறது. (இதில் கண்ட இக்கதைகளை அனுபந்தத்தில் பார்க்க.)*

## விரதமின்மையால் கேடடைந்தவர்கள்

**81.** தனசிரி சத்தியன் றுபதன் காப்பா
னனைதாடி வெண்ணெ யுரை.

*தனசிரி - கொலையினுல்* தனஸ்ரீயும், *சத்தியன் - பொய்யினுல்* சத்தியகோஷன் *என்னும் மந்திரியும், தாபதன் - களவினுல்* உறித்தாபஸனும், *காப்பான் - பரஸ்திரீ நிவ்ருத்தி விரதமின்மையால் (காமத்தினுல்)* தளவரனும், *நனைதாடி வெண்ணெய் - பரிமித பரிக்கிரஹ விரதமின்மையால்(பேராசையால்)* தாடி வெண்ணெய்க்

காரனும், ஆகிய இவர்கள் கேடடைந்ததற்கு உதாரணமாக, உரை - ஆகமத்தில் சொல்லப்பட்டது (அல்லது) ஆகமத்திற்கூறி யதை நீ பிறருக்குச் சொல்வாயாக (எ—று).

இதனால் அஹிம்ஸை முதலிய பஞ்சாணுவிரதங்களை அநுஷ்டியாமையினால் உண்டாகும் தீங்கிற்கு உதாரணம் கூறியவாறு. (இக்கதைகளை அனுபந்தத்தில் காண்க).

## மூலகுண இயல்

**82.** கள்ளொடு தேன்புலை சுண்ணுமை யைவதமுந்
தெள்ளுங்கால் மூல குணம்.

தெள்ளுங்கால் - தெளியுமிடத்தில், கள்ளொடு - கள்ளும் தேன் - தேனும், புலைசு - மாமிசமும், ஆகிய இவை மூன்றையும், உண்ணுமை - உண்ணுமையும், ஐவதமும் - முன் சொல்லிய அணு விரதமைந்தும், மூலகுணம் - ஆக எட்டும் இல்லறத்தார்களுக்கு (ஶ்ராவகர்களுக்கு) மூலகுணம் எனப்படும். (எ—று).

மூலகுணம் என்றதனால் தவறுமல் அவசியம் அநுஷ்டிக்க வேண்டிய குணம் என்பது ஏற்படும். கள்ளொடு தேன் புலை சுண்ணுமை என்பது, மது, மத்ய, மாம்ஸ நிவ்ரத்தி என்று ஆரியத்திற் கூறப்படுகிறது. மது - தேன், மத்யம் - கள், மாம்ஸம் - புலைசு. இவை மூன்றும் இல்லறத்தாரால் அவசியம் நீக்கப்படுவதோடு மேற்கூறிய அஹிம்ஸை, ஸத்தியம், அஸ்தேயம், பிரம்மசரியம், பரிமித பரிக்கிரஹம் என்ற ஐந்து அணுவிரதங்களும் அவசியம் அநுஷ்டிக்கவேண்டியது பற்றி, இவை எட்டும் மூல குணம் என்று சொல்லப்பட்டது மூலகுணம் - முக்கியமான (அவசியமான) குணம்.

## திசைவிரத இயல்

**83.** வரைப திசைபத்தும் வாழு மளவும்
புரைவிற் றிசைவிரத மென்.

வாழுமளவும் - உயிர்வாழும் வரையில், திசைபத்தும் - திக்குகள் நான்கும், விதிக்குகள் (மூலைகள்) நான்கும், மேலும், கீழும், ஆகப் பத்துத் திசைகளிலும், வரைப - இவ்வளவுக்கு மேல் செல்லுவதில்லை என்ற கொள்கையினை உடையவராதல், புரைவில் - குற்றமற்ற, திசைவிரதம் - திக்விரதம் என்று சொல்லப்படும்.

திக்விரதம்:— பத்து திக்குகளில் இவ்வளவு தூரத்துக்கு மேற்செல்லுவதில்லை என்று நியமம் செய்தல். இது குணவிரதம் மூன்றினுள் ஒன்று.

**84.** ஆறு மலையுங் கடலு மடவியுங்
கூறுப வெல்லை யதற்கு.

அதற்கு - அந்த திக்விரதத்திற்கு, ஆறும் - நதியும், மலையும் - பர்வதமும், கடலும் - சமுத்திரமும், அடவியும் - காடும் (இவை முதலியவைகள்), எல்லை - எல்லையாகக் கொள்ளப்படும் என்று, கூறுப - ஞானிகள் சொல்லுவார்கள். (எ—று).

ஒவ்வொரு திக்கிலும் இன்ன நதியைக் கடந்து செல்லுவதில்லை என்றும், இன்ன மலைக்கப்பால் செல்வதில்லை என்றும், இன்ன கடலைத் தாண்டிப்போவதில்லை என்றும், இன்ன காட்டிற்கு அப்புறம் செல்லுவதில்லை என்றும், ஒரு எல்லையைக்குறிப்பாகக்கொண்டு நியமம் செய்தல், முறை என்று கூறப்பட்டது.

**85.** எல்லைப் புறத்தமைந்த பாவமீண் டாமையிற்
சொல்லுப மாவத மென்று.

எல்லைப் புறத்து - நியமஞ்செய்த எல்லைக்கு வெளியில், அமைந்த - ஏற்படக்கூடிய, பாவம் - ஐந்துவகைப் பாபங்களும், ஈண்டாமையின் - தனக்குச் சேராமையினால், மாவதமென்று - (அத்தேயத்திற்கு) மஹாவிரதம் என்று, சொல்லுப - சொல்லுவார்கள் (ஆசிரியர்கள்). (எ—று).

முற்கூறியவாறு நியமித்த எல்லைக்குப் புறம்பில் ஐவகைப் பாபங்களையும் எப்பொழுதும் எக்காரணத்தைக் கொண்டும் செய்யவியலாமையின் "ஐவகைப் பாபங்கள் ஈண்டாமையின்" என்றார். ஐவகைப் பாபங்களையும் முற்றத் துறத்தல் பற்றி, ஆங்கு மஹாவிரதத்தோடொக்கும் என்றவாறு.

ஐவகைப் பாபங்களாவன:— ஹிம்ஸை, அஸத்யம், ஸ்தேயம், அப்பிரம்மசரியம், பஹுபரிக்கிரஹம் என்பன. இவற்றைச் செய்யாதொழிந்ததனால் இந்தப் பாபங்களினின்றும் மீளுதலாயிற்று.

## மஹாவிரதத்தின் தன்மை

**86. சிறிய கொலைபொய் களவொடு காமம்
பொருளைத் துறத்தலோ டைந்து.**

*சிறியகொலை - ஏகேந்திரியஜீவன் முதலிய ஜீவன்களை ஹிம் ஸித்தலாகிய ஜீவவதையும், பொய் - பொய் பேசுதலும் (அஸத் விஷய வார்த்தையும்), களவொடு - பிறரால் கொடாத பொருளைக் கொள்ளுதலும் (திருட்டும்), காமம் - ஸ்திரீஸேவை செய்தலாகிய காமமும் (மைதுன ஸேவையும்), பொருளை - பாஹ்ய பரிக்கிரஹம் பத்தும், அப்பியந்தர பரிக்கிரஹங்கள் பதினான்கும், ஆக இரு பத்துநான்கு பரிக்கிரஹங்களையும், துறத்தலோடு - ஆகிய இவ் வைந்தினையும் நீக்குதலோடு, ஐந்து - மஹாவிரதம் ஐந்தாகும்.*

1. *ஏகேந்திரிய ஜீவன்கள் முதலாக சகல ஜீவன்களையும் ஹிம் ஸியாமை.* 2. *அஸத்விஷயமான வார்த்தையைச் சிறிதும் பேசா திருத்தல்.* 3. *பிறர் மனதாரக் கொடாத பொருளைக் கொள் ளாமை.* 4. *ஸ்த்ரீஸேவை இல்லாதிருத்தல்.* 5. *பாஹ்யாப்யந்தர பரிக்கிரஹங்களை முற்றத்துறத்தல் - என்ற இவை ஐந்தும், மஹா விரதம் எனப்படும்.*

பாஹ்ய பரிக்கிரஹம் பத்து. *அவையாவன:—* க்ஷேத்திரம் (*விளை நிலம்*), வாஸ்து (*வீடு முதலியன*), ஹிரண்யம் (*வெள்ளி முதலியவைகளாலான நாணயங்கள்*), ஸ்வர்ணம் (*பொன் நகைகள் முதலியன*), தனம் (*வாஹனம் முதலியன*), தான்யம் (*நெல்முதலி யன*), தாஸீ (*அடிமை ஸ்திரீ*), தாஸன் (*அடிமை ஆள்*), குப்யம் (*வஸ்திரம், சந்தனம் முதலியன*), பாண்டம் (*தவலை முதலிய சாமான்கள்*) *என்பன.*

அப்யந்தர பரிக்கிரஹம் பதினான்கு. *அவையாவன:—* குரோ தம், மானம், மாயம், லோபம், ஹாஸ்யை, ரதி, அரதி, சோகம், பயம், ஜுகுப்ஸை, ஸ்திரீவேதம், பும்வேதம், நபும்ஸக வேதம். மித்யாத்வம் *என்பன.*

**87. கொலைமுதலா வைந்தினையு முற்றத் துறத்தல்
தலையாய மாவத மாம்.**

*கொலைமுதலா - மேற்கூறிய ஏகேந்திரிய ஜீவஹிம்ஸை முதலிய, ஐந்தினையும்-ஐந்து துஷ்காரியங்களையும், முற்றத்துறத்*

தல் - ஸாகல்யமாக (முழுவதையும்) நீக்குதல், தலையாய - மேன்மை யாகிய, மாவதமாம் - மஹாவிரதம் ஆகும். (எ—று).

கொலை, பொய், களவு, காமம், பரிக்கிரஹம் என்ப வற்றை முற்றிலும் நீக்குதல் மஹாவிரதமெனப்படும். எக்காரணத் தை முன்னிட்டும் சிறிதும் வர்த்தியாமைபற்றி முற்றத்துறத் தல், என்றார். ஸ்வர்க்காபவர்க்க ஸாதனமாதல்பற்றி "தலையாய மாவதம்" என்றார். இவ்விரண்டு வெண்பாக்களினால் மஹாவிரதத் தின் தன்மை கூறப்பட்டது.

## திசைவிரதத்தின் இறப்பு

**88.** இடம்பெருக்க லெல்லை மறத்தல்கீழ் மேலோ
டுடனிறுத்தல் பக்க மிறப்பு.

இடம்பெருக்கல் - பிரமாத, அஞ்ஞான, லோப வசங்களினால் தன்னால் நியமம் செய்த எல்லையை மறுபடி விருத்தியாக்கிக் கொள்வதும் (அதிகமாகச்செய்துகொள்ளுதலும்), எல்லை மறத் தல் - நியமம் செய்த எல்லையைப் பிரமாதவசத்தினால் மறந்து அப்பால் செல்லுதலும், கீழ் - கீழேயும், மேலோடு - மேலேயும், பக்கமுடன் - பக்கங்களிலும் (திக்குவிதிக்குகளிலும்), இறுத்தல் - நியமம் செய்த எல்லையை மீறிச் செல்லுதல் ஆகிய இவை மூன் றும் சேர்ந்து, இறப்பு - திக் விரதி விரதத்திற்கு அதிசாரம் ஐந்தாகும். (எ—று).

"ஊர்த்வாதஸ்திர்யக்வ்யதிக்ரம க்ஷேத்ரவ்ருத்திஸ்ம்ருத்யந்தரா தானானி" (தத்வார்த்த ஸூத்ரம்) என்றதை நோக்குக.

### திக்விரதி விரதத்திற்கு அதிசாரங்கள்

க்ஷேத்ர வ்ருத்தி:— குறிப்பிட்ட எல்லையைப் பெருக்கிக் கொள்ளுதல்.

விஸ்மரணம்:— எல்லையை மறந்துவிடுதல்.

அதோ வ்யதிக்ரமம்:— கிணறு முதலியவைகளில் குறிப்பிட்ட ஆழத் திற்குங் கீழ் இறங்குதல்.

ஊர்த்வ வ்யதிக்ரமம்:— மலை முதலியவற்றில் குறிப்பிட்ட உயரத்திற்கு மேல் ஏறுதல்.

திர்யக் வ்யதிக்ரமம்:— திக்கு, விதிக்குகளில் குறிப்பிட்ட எல்லைக்கு அப்பால் செல்லுதல்.

## அனர்த்ததண்ட விரத இயல்

**89.** எல்லை யகத்தும் பயமில மீண்டொழுக
னல்லனத்த தண்ட வதம்.

எல்லையகத்தும் - நியமம் செய்த எல்லைக்குள்ளும், பயமில - தனக்குப் பயனற்ற காரியங்களை, மீண்டொழுகல் - செய்யாமல் மீண்டு நடத்தல், நல் - நன்மையாகிய, அனத்த தண்டவதம் - அனர்த்த தண்ட விரதி விரதம் எனப்படும். (எ—று).

இது குணவிரதங்கள் மூன்றினுள் ஒன்று. பலனற்ற காரியங்களைச் செய்யாதிருத்தல் என்ற நியமமுடைமை. அதன் விபரங்களை அடுத்த எட்டு பாக்களாற் கூறுகின்றார்.

**90.** ஐந்தனத்த தண்ட விரத முறையுள்ளிச்
சிந்திக்கச் செய்வன் தெரிந்து.

ஐந்து அனத்ததண்ட விரதம் - ஐந்துவகையான அனர்த்த தண்ட விரதத்தை, முறையுள்ளி - வரிசையாக, தெரிந்து - ஆகமத்திற் கூறியதை உணர்ந்து, சிந்திக்கச் செய்வன் - மற்றையோரும் அறியும்பொருட்டுத் தெரிவிப்பேன். (எ—று).

ஐவகை அனர்த்ததண்டங்கள் ஆவன:— அபத்யானம், பாபோபதேசம், பிரமாதசரியம், ஹிம்ஸாதானம், பாபஸ்ருதி(துஸ்ருதி) என்பன. அவற்றை மேற்கூறுகின்றார்.

**91.** ஆர்வமொடு செற்றத்தை யாக்கும் நினைப்புக
டீவுறு தீச்சிந்தை யாம்.

ஆர்வமொடு - இராகத்தோடு, செற்றத்தை - துவேஷத்தையும், ஆக்கும் - உண்டுபண்ணும், நினைப்புகள் - எண்ணங்கள், தீவுறு - பொல்லாத பாபத்திற்குக் காரணமான, தீச்சிந்தையாம் - அபத்தியானம் எனப்படும். (எ—று).

காரணமின்றி இராகத்வேஷ ஸம்பந்தமான பரிணமங்களில் நிகழ்தல் அபத்தியானம் என்பது. இவற்றின் நீங்குதல் அனர்த்த தண்டவிரதி விரதம் எனப்படும். அனர்த்தண்டம் - தனக்கொரு பயனின்றிச் செய்யும் துஷ்காரியங்கள். இராகம் — ஆசை, த்வேஷம் — கோபம். இவை சம்பந்தமான எண்ணங்கள் பாபத்திற்குக் காரணமாதல் பற்றித் "தீவுறுதீச்சிந்தை" என்றார்.

## 92. சேவாள் விலைகோளல் கூறுதல் கூட்டுதல் பாபோப தேச மெனல்.

சேவாள் - பக்ஷிகள், விரஷபங்கள், அடிமையாட்கள் முதலியவற்றை, விலைகொளல் - இன்ன இடத்தில் சகாயமாகக் கொள்ளலாமென்றும், கூட்டுதல் - இன்னவிதமாய் வசபடுத்தலாம் என்றும், கூறுதல் - (இவைபோன்ற ஜீவஹிம்சைக்குக் காரணமாகிய வசனங்களை) சொல்லுதல், பாபோபதேசமெனல் - பாபோபதேசம் எனப்படும். (எ—று).

இவற்றினின்றும் விலகுதல் அனர்த்ததண்ட விரதத்துள் ஒன்று.

## 93. பயமின் மரங்குறைத்த லோடகழ்த லென்ப பயமில் பமாத மெனல்.

பயமில் - பிரயோஜனமில்லாமல், மரம் குறைத்தலோடு - மரத்தை வெட்டுகிறதும் (செடியை அறுப்பதும், துரும்பைக் கிள்ளுதலும்), அகழ்தல் - பூமியைக் கெல்லுகிறதும் (கீறுகிறதும்) போன்றவை, பயமில் - பயனற்றதாகிய, பமாதம் எனல் - பிரமாத சரியம் என்று சொல்லப்படும், என்ப - என்று அறிந்தோர்கூறுவர்.

இவற்றின் நீங்குதலும் அனர்த்ததண்ட விரதமாம்.

## 94. தீக்கருவி நஞ்சு கயிறு தடிநார்க ளீத்தல் கொலைகொடுத்த லாம்.

தீ - நெருப்பும், கருவி - ஆயுதங்களும், நஞ்சு - விஷமும், கயிறு - கயிறும், தடி - தடியும் (பிரம்பும்), நார்கள் - நார்களும், (மற்றும் இவைபோன்ற மண்வெட்டி, அறிவாள், கொடுவாள், கோடாரி, சிப்பு, ஈர்கொளி முதலியவைகளை), ஈத்தல் - பிறருக்குக் கொடுத்தல், கொலை கொடுத்தலாம் - ஹிம்ஸாதானம் எனப்படும்.

ஹிம்சைக்குக் காரணமாகிய பொருள்களைப் பிறருக்குக் கொடுத்தல் ஹிம்ஸாதானம். இவற்றின் நீங்குதல் அனர்த்ததண்ட விரதி விரதம் எனப்படும்.

## 95. மோகத்தை யீன்று தவமழிக்குஞ் சொற்கேட்டல் பாவச் சுருதி யெனல்.

*மோகத்தை - இராகத்வேஷத்திற்குக் காரணமாகிய அக்ஞானத்தை, ஈன்று - உண்டாக்கி, தவம் - தபங்களையும் (விரதங்களையும்), அழிக்கும் - கெடுக்கத்தக்க, சொல் - மித்யா நூல்களை (வசனங்களை), கேட்டல் - கேட்பதும் படிப்பதும், பாவச் சுருதி எனல் -* பாபஸ்ருதி (துஸ்ருதி) என்*று* சொல்லப்படும். (எ—று).

*பாபத்திற்குக் காரணமாகிய சாஸ்திரங்களைப் படித்தல், கேட்டல், சிந்தித்தல் முதலியன* துஸ்ருதி *எனப்படும்.* இவற்றின் *நீங்குதலும்* அனர்த்ததண்ட விரதி விரதமாம். இங்ஙனம் அனர்த்த தண்ட விரதி விரதம் ஐந்து வகையாகும்.

**அவற்றுள்,** 1. *பிறர்களுக்கு ஜயம், அபஜயம், வதை, பந்தம், அங்கச்சேதம், பொருள் அபகரித்தல் முதலியன எவ்வாறு ஏற்படும் ? எப்படிச் செய்யலாம் ?* என்று மனத்தால் சிந்தித்தல் அபத்தியானம். 2. *பிராணி வதையினுக்குக் காரணமான திர்யக் (விலங்கு), வாணிஜ்யம் முதலிய பாபவசனங்களைச் சொல்லுதல்* பாப உபதேசம். 3. *பிரயோஜனமின்றி* விருக்ஷம் முதலியவைகளை வெட்டுதல், பூமியை அகழ்தல், ஜலஸேசனம் முதலிய தோஷகாரியங்களைச் செய்தல் பிரமாத சரிதம். 4. *விஷம்,* முள், ஆயுதம், நெருப்பு, கயிறு, சாட்டை, தடி முதலிய ஹிம்ஸைக்கு உபகரணமான வஸ்துக்களைப் பிறருக்குக் கொடுத்தல் ஹிம்ஸாதானம். 5. ஹிம்ஸை, இராகம் முதலிய உண்டாதற்குக் காரணமான துர்வசனங்களைப் பேசுதலும், கேட்டலும், சிந்தித்தலும், துஸ்ருதி. இந்த அனர்த்ததண்டங்களில் நீங்குதல் அனர்த்ததண்ட விரதி விரதம்.

" [illegible] |
[illegible] ||" 144.

[illegible] |
[illegible] ||
[illegible] |
[illegible] || 146.

[illegible] |
[illegible] || 147.

[illegible] ।
[illegible] ॥ 148.
(யஶஸ்திலகாக்²ய காவ்யம் [illegible]-21).

## அனர்த்ததண்ட விரதத்தின் இறப்பு.

**96.** நகையே நினைப்பு மொழியின்மை கூறன்
மிகைநினைவு நோக்கார் செயல்.

*நகை* - சபா யோக்யமல்லாத பரிஹாஸ வசனங்களைப் பேசுதலாகிய (கந்தர்ப்பமும்), *நினைப்பு* - பரிஹாஸம் செய்யும் எண்ணத்தோடுகூடி காய சேஷ்டை செய்தலாகிய கௌத்குச்யமும், *மொழியின்மை கூறல்* - காரணமின்றி வீண் வார்த்தைகளை அளவின்றிப் பேசுதலாகிய மௌகர்யமும், *மிகைநினைவு* - பிரயோஜனமில்லாமல் போகோபபோக வஸ்துக்களை அதிகமாக அடைந்து அனுபவிக்க வேண்டுமென்னும் எண்ணத்தை உடைத்தாகிற உபபோக பரிபோக அனர்த்தக்யமும், *நோக்கார் செயல்* - இன்னகாரியம் செய்யத்தகுந்தது, இன்னகாரியம் செய்யத்தகாததென்று ஆலோசியாமல் பாபகாரியங்களைச் செய்தலாகிற அஸமீக்ஷ்யாதிகரணமும் என்றிவை ஐந்தும் அனர்த்ததண்ட விரதத்திற்கு அதிசாரம் ஆவன. (எ—று).

"கந்தர்ப்பகௌத்குச்யமௌகர்யாஸமீக்ஷ்யாதிகரணோபபோகபரிபோகாநர்த்தக்யாநி" [தத்வார்த்த ஸூத்ரம்] என்றதனாலும் அறிக.

**97.** ஐந்தனத்த தண்ட விரதக் கிறப்பிவை
முந்துணர்ந்து காக்க முறை.

*ஐந்தனத்த தண்டவிரதக்கு* - ஐந்துவிதமான அனர்த்த தண்ட விரதத்திற்கு, *இறப்பிவை* - அதிசாரங்களாகிய மேற்கூறிய இவ்வைந்தினையும், *முந்துணர்ந்து* - முன்னதாகவேயறிந்து, *முறை* - முறைப்படி (அனர்த்த தண்ட விரதத்தை அதிசாரமில்லாமல்), *காக்க* - பாலிக்கக்கடவது (இரக்ஷிக்கக்கடவது). (எ-று).

அதிசாரங்களின் தன்மையை முன்னுலறிந்து அவை அணுகாமல் விரதத்தினைக் காத்தல் முறை என்றார். அதிசாரங்கள் அணுகாமல் விரதங்களை ஏற்றுப் பரிபாலித்தலே பலன் தரக்

கூடியதாகையால், அதிசாரங்கள் தம்பால் சேராவண்ணம் பாது காத்தற்கு முந்துற அதிசாரங்கள் இன்னவை என அறிதல் அவசியம். ஆகவே ஒவ்வொரு விரதங்களுக்கும் அதிசாரங்கள் இன்னவை என ஆகமத்திற் கூறப்படுகிறது. அதிசாரங்களால் விரதத்திற்கு நாசம் ஏற்படுகிறது. ஆகலால் விரதபங்கம் ஆகாவண்ணம் அனுஷ்டித்தற்கு அங்ஙனம் கூறினார்.

## பரிக்கிரஹ பரிமாண விரதம்

**98. போகோப போக பரிமாண மென்றுரைப்பர்**
**வாயிற் புலன்கள் வரைந்து.**

*வாயிற் புலன்கள்* - ஐம்புலன்களின் வழியாக ஸ்வீகரிக்கும் வஸ்துக்களை, *வரைந்து* - இவ்வளவுக்கு மேல் ஸ்வீகரிப்பதில்லை என்று மிதம்செய்து நிகழ்தல், *போகோப போக பரிமாணம் என்று* - போக உபபோக பரிமாணம் என்று, *உரைப்பர்* - அறிந்தோர் சொல்லுவார்கள். (எ—று).

ஐம்புலன்களின் வழிச்சென்று அடையும் வஸ்துக்களை மிதம் செய்தல் போகோபபோக பரிமாணம் என்பது. ஐம்புலன்களாவன:— மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகளின் மூலம் ஸ்வீகரிக்கும் ஸ்பரிச (ஊறு), ரஸ (சுவை), வர்ண (ஒளி), கந்த (நாற்றம்), சப்தம் (ஓசை) என்பன. இவைகள் விஷயவஸ்துக்கள் என்றும் சொல்லப்படும். இவைகளை மிதம் செய்தல் போகோபபோக பரிமாணம் எனப்படும். இது, குணவிரதங்கள் மூன்றினுள் ஒன்று.

**99. துய்த்துக் கழிப்பன போக முபபோகந்**
**துய்ப்பாம் பெயர்த்து மெனல்.**

*துய்த்துக் கழிப்பன* - ஒரு தரம் அனுபவித்துக் கழிப்பனவாகிய தாம்பூலம், சந்தனம், பூமாலை, ஆஹாரம் முதலியவைகள், *போகம்* - போகவஸ்துக்கள் ஆவன; *துய்ப்பாம் பெயர்த்துமெனல்* - மீட்டும் மீட்டும் அனுபவிப்பதற்குத் தக்க கட்டில், மெத்தை, வாஹனம், வஸ்திரம், பூஷணம் முதலியவைகள், *உபபோகம்* - உபபோக வஸ்துக்கள் ஆவன. (எ—று).

ஒருதரம் அனுபவித்து மறுபடி அனுபவித்தற்கு யோக்யமல்லாத வஸ்துக்கள் போகவஸ்துக்கள் என்றும், திரும்பத்

திரும்ப அனுபவித்தற்குரிய பொருள்கள் உபபோக வஸ்துக்கள் என்றும் கூறப்படும்.

**100. மயக்கங் கொலையஞ்சிக் கள்ளு மதுவுந்**
**துயக்கில் துறக்கப் படும்.**

மயக்கம் - அறிவை மயக்குங் காரணத்திற்கும், கொலை - கொலையால் வரும் பாபத்திற்கும், அஞ்சி - பயந்து, கள்ளும் - கள்ளும், மதுவும் - தேனும் ஆகிய இவைகள், துயக்கில் - உறுதியாக, துறக்கப்படும் - நீக்கப்படுவது போகோபபோக பரிமாண விரதம் ஆகும். (எ—று).

கள் மயக்கத்தைச் செய்வதாலும், தேன் சேகரிக்குங்கால் ஜீவஹிம்ஸைக்குக் காரணமாதல்பற்றியும், இவைகளைக் கொள்வதில்லை என்று வர்ஜித்தல் (நீக்குதல்) போகோபபோக பரிமாண விரதத்தில் சேருவதாகும்.

**101. வேப்ப மலரிஞ்சி வெண்ணெ யதம்பழம்**
**நீப்ப ரிவைபோல் வன.**

வேப்பமலர் - வேப்பம் பூவும், இஞ்சி - பச்சை இஞ்சியும், வெண்ணெய் - வெண்ணெயும், அதம் பழம் - அளிந்த (அழுகிய) பழமும், இவை போல்வன - இன்னும் இவைபோன்ற ஸூக்ஷ்ம ஜீவன்களுக்கு ஆஸ்ரயமாகிய வஸ்துக்களையும், நீப்பர் - மேற் கூறிய விரதமுடையவர்கள் நீக்குவார்கள். (எ—று).

வேப்பம்பூ ஸூக்ஷ்மமாகிய த்ரஸ ஜீவன்களினால் நிறைந்து இருத்தல்பற்றியும், பச்சை இஞ்சி அனந்த நிகாய ஜீவஸ்தானமாக இருப்பதாலும், வெண்ணெய் அரைஜாமத்திற்கு மேற்பட்டால் த்ரஸஜீவ உற்பத்திக்குக் காரணமாதல்பற்றியும், அதிகமாயளிந்த அல்லது அழுகிய பழம் த்ரஸஜீவ உற்பத்திக்கு ஹேதுவாதலினாலும் இவைகளை நீக்க வேண்டுமென்றார். இவை போல்வன என்றதனால், சுரைக்காய், வில்வப்பத்திரிக்காய், துமட்டிக் காய், இலந்தைப் பழம், காளான், தென்னங்குருத்து, தாழங்குருத்து, கத்தரிக்காய், வெள்ளுள்ளி முதலியவைகளும், கருணைக்கிழங்கு, தாமரைக்கிழங்கு முதலிய கிழங்குகளும், கீரைத்தண்டு முதலிய தண்டுகளும் வாழைப்பூ முதலிய பூக்களும், பெருங்காயம், இரண்டு நாட்களுக்கு மேற்பட்ட மோர், இரண்டு நாழிகைக்கு மேற்பட்ட

வடிக்காத ஜலம் முதலியனவும் கொள்க. இவைகளை இன்னும் விரிவாக இதன் முதன் நூலாகிய இரத்தினகரண்டக ச்ராவகா சாரத்திலும், பிரஸ்னோத்தர ச்ராவகாசாரத்திலும் காணலாம்.

**102. இயமங்கள் கால வரையறை யில்லை நியமங்க ளல்லா வதம்.**

இயமங்கள் - இயம விரதங்கள் என்பதற்கு, காலவரையறை இல்லை - இவ்வளவு காலத்திற்கு என்று அளவு செய்வதில்லை, அந்த ஜன்மபரியந்தம் கொள்ளும் விரதமாம். நியமங்கள் - நியம விரதங்கள் என்பன, அல்லாவதம் - அது முற்கூறியது போலில்லாமல் இவ்வளவு காலத்திற்கு அநுஷ்டிப்பதென்று கொள்ளும் விரதமாம்.

முற்கூறிய போகோபபோக வஸ்துக்களைத் துறத்தலாகிய விரதம் இயமவிரதம், நியமவிரதம் என இருவகைப்படும். இயம விரதம் என்பது (யாவஜ்ஜீவம்) ஜீவிதமுள்ளவரையில் விடாது அநுஷ்டித்தல். நியமவிரதம் என்பது இவ்வளவு நாட்களுக்கு அநுஷ்டித்தல் என்று சக்திக்குத் தக்கவாறு நியமம் செய்து கொள்ளுதல்.

**103. உடுப்பன பூண்பன பூச்சாந்து மூர்தி படுப்பப் பசியநீ ராட்டு**

உடுப்பன - வஸ்திரமும், பூண்பன - ஆபரணமும், பூ-பூவும், சாந்தும் - சந்தனமும், ஊர்தி - யானை, குதிரை முதலிய வாஹனமும், படுப்ப - கட்டில் முதலியனவும், பசிய நீராட்டு - குளிர்ந்த நீரில் குளித்தலும், (அடுத்த பாவில் தொடரும்).

**104. கோல மிலைகூட நித்த நியமங்கள் கால வரையறுத்த னற்கு.**

கோலம் - பாக்கும், இலைகூட - வெற்றிலையும் முதலிய போகோப போக வஸ்துக்களை, நித்த நியமங்கள் - நாள்தோறும் நியமம் செய்து, வரையறுத்தல் - சக்திக்குத் தக்கவாறு காலவரை செய்து நீக்குதல், நற்கு - நன்மையாம். (எ—று).

**105. இன்று பகலிரா வித்திங்கட் கிவ்வாண்டைக் கென்று நியமஞ் செயல்.**

இன்று பகல் - இன்று பகல்மட்டில் என்றும், இரா - இரவு மட்டில் என்றும், இத்திங்கட்கு - இம்மாதமளவும் என்றும், இவ் வாண்டைக்கு என்று - இவ்வருஷத்திற்கென்றும், நியமம்செயல் - சக்திக்குத் தக்கவாறு நியமம் செய்தல் நலம். (எ—று).

மேற்கூறிய வஸ்துக்களை இவ்வளவு வஸ்துக்களுக்கு மேல் அனுபவிப்பதில்லை என்றும், இன்ன வஸ்துக்களை இன்ன காலம் வரையில் சேர்த்துக்கொள்வதில்லை என்றும் உறுதிகொள்ளுதல், போகோபபோக பரிமாண விரதம் எனப்படும்.

### பரிக்கிரக பரிமாண விரதத்தின் இறப்பு

**106.** வேட்கை வழிநினைப்புத் துய்ப்பு மிகநடுக்கு
நோக்கின்மை யைந்தா மிறப்பு.

வேட்கை - விரதம் செய்த வஸ்துவினைப் பின்னும் விரும்பு கிறதும், வழி நினைப்பு - அந்த வஸ்துக்களடையும் காரணத்தினைச் சிந்திக்கின்றதும், துய்ப்பு - வஸ்துக்களை மறந்து அனுபவித்தலும், மிக நடுக்கு - அந்த வஸ்துக்களைக் கண்டு மனதையடக்கமுடியாமல் மிகவும் பிரியப்படுவதும், நோக்கின்மை - மனத்தில் கொண்ட விரதத்தைப்பற்றிச் சிந்திக்காமல் யதேச்சையாக நடப்பதும், ஆக, இறப்பு - போகோபபோக பரிமாண விரதத்திற்கு அதிசாரம், ஐந்தாம் - ஐந்தாவன. (எ—று).

விஷயானுபேக்ஷா, அனுஸ்மரதி, அதிலௌல்யம், அதித்ருஷா, அனுபவம் என போகோபபோக பரிமாண விரதத்திற்கு அதிசாரம் ஐந்தாவன. இத்துடன் போகோபபோக பரிமாண விரதம் என்னும் குணவிரதத்தினைக் கூறினார். இனி நான்கு வகையான சிக்ஷாவிரதங்களைப் பற்றிக் கூறுகின்றார்.

### சாமாயிக விரதம்

**107.** கட்டு விடுகாறு மெஞ்சாமை யைம்பாவம்
விட்டொழுகல் சாமா யிகம்.

கட்டுவிடுகாறும் - அடுத்த வெண்பாவிற் கூறுகிற பிரமாணத் தால் நியமம் முடியுமளவும், எஞ்சாமை - குறைவின்றி, ஐம்பா வம் - ஹிம்சை முதலிய ஐந்து பாபகாரியங்களையும், கிரிஷியாரம் பம் முதலிய ஷட்கர்மங்களையும், விட்டு - மனத்தினாலும் நினைக்கா

மல் விட்டு, ஒழுகல் - ஆத்மத்தியானத்தில் பொருந்தி வர்த்தித்தல், சாமாயிகம் - சாமாயிகம் என்னும் சிக்ஷாவிரதமாம்.

ஹிம்ஸை முதலிய ஐந்து பாபகாரியங்கள்:— ஹிம்ஸை, அஸத்யம், ஸ்தேயம், அப்பிரம்மசரியம், பஹூ பரிக்கிரஹம்.

ஷட்கர்மங்களாவன:— அஸி, மஸி, கிருஷி, வித்யா, வாணிஜ்யம், சில்பம் என்பன.

### 108. கூறை மயிர்முடி முட்டி நிலையிருக்கை கூறிய கட்டென் றுணர்.

*கூறை* - வஸ்திரத்தையும், *மயிர்முடி* - தலை மயிரையும், நியமித்து முடிகிறதும், *முட்டி* - முஷ்டியை முடியாகப் பிடிப்பதும், *நிலையிருக்கை* - பர்யங்காசனமாகவாவது, காயோத்ஸர்க்கமாகவாவது இருந்தும் ஸாமாயிகம் முடிப்பது, *கூறிய* - முன் வெண்பாவிற் கூறிய, *கட்டென்று* - பந்தமென்று, *உணர்* - அறிவாயாக. (எ—று).

வஸ்திரத்தை இறுகக்கட்டி இன்ன காலத்தளவும் சாமாயிகம் செய்வதென்று நியமித்து, வஸ்திரம் முதலியன அவிழ்ந்தாலும் சலனத்தை அடையாது நிற்றல் வஸ்திரபந்தம். மயிரை முடிந்து நியமித்தல் கேசபந்தம். முஷ்டியைப் பிடித்து நியமித்தல் முஷ்டி பந்தம். பர்யங்காசனமாகவாவது, காயோத்ஸர்க்கமாகவாவது இருந்து நியமித்தல் பர்யங்கபந்தனம். இவ்வாறு நிகழுங்கால் எவ்விதயிடையூறு நேரினும் தளராது முடித்தல்பற்றி இவற்றைக் "கட்டு" என்று கூறப்பட்டது.

"𑌮𑍂𑌰𑍍𑌧𑌰𑍁𑌹 𑌮𑍁𑌷𑍍𑌟𑌿𑌵𑌾𑌸𑍋 𑌬𑌨𑍍𑌧𑌂 𑌪𑌰𑍍𑌯𑌙𑍍𑌕𑌬𑌨𑍍𑌧𑌨𑌂𑌚𑌾𑌪𑌿 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍁𑌪𑌵𑍇𑌶𑌨𑌂 𑌵𑌾 𑌸𑌮𑌯𑌂 𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌸𑌮𑌯𑌜𑍍𑌞𑌾𑌃" (8) [illegible] (𑌰𑌤𑍍𑌨𑌕𑌰𑌣𑍍𑌡𑌕𑍇)

### 109. ஒருசிறை இல்லம் பிறவுழி யானும் மருவுக சாமா யிகம்.

*சாமாயிகம்* - மேற்கூறிய ஸாமாயிகத்தை, *இல்லம்* - தன் வீட்டில், *ஒரு சிறை* - ஒரு புறத்திலாயினும், *பிறவுழியானும்* - தேவாலயம், நந்தவனம், குளக்கரை, தோப்பு, சாலை, காடு முதலிய வேறு இடங்களிலாவது, *மருவுக* - சேர்ந்து செய்தல் வேண்டும்.

இதனால் ஸாமாயிகத்திற்கு க்ஷேத்திரம் கூறினவாறு. மனம் அமைதியை அடையக்கூடிய இடம் அவசியமாதல்பற்றி "ஒரு சிறை" என்றார்.

**110.** சேதியம் வந்தனை பட்டினி யாதியா
யோதிய கால மதற்கு.

அதற்கு - மற்றும் அந்த ஸாமாயிகத்திற்கு, சேதியம் வந்தனை - ஜிந பிம்பங்களை வந்திக்கின்ற காலமும், பட்டினி ஆதியாய்-அஷ்டமி, சதுர்தசி முதலிய திதிகளில் உபவாஸத்துடன் வர்த்திக்கின்ற காலமும், ஓதிய காலம் - ஆசிரியர்களால் சொல்லப்பட்ட காலங்களாகும். (எ—று).

சைத்யாலயத்திற்குச் சென்று ஜினப்பிரதிமைகளை வணங்குகின்ற பொழுதும், அஷ்டமி, சதுர்தசிமுதலிய தினங்களில் உபவஸிக்கின்ற பொழுதும் அவசியம் ஸாமாயிகம் செய்யவேண்டியதென்பதனால் அக்காலம் ஸாமாயிகத்திற்குரிய காலமாகச் சொல்லப்பட்டது. ஜிநபிம்ப வந்தனை, உபவாஸம் முதலிய காலங்களில் மனவமைதி ஏற்படுவதினாலும் அக்காலங்களில் மனதை நீண்ட நேரம் வெளிவிஷயங்களிற் செல்லவொட்டாமல் தடுத்தற்கு ஸாமாயிகபாவனை அவசியமாதல்பற்றி அக்காலம் ஸாமாயிகத்திற்குரிய காலம் எனப்பட்டது. இதனால் மற்றக் காலங்களில் ஸாமாயிகம் செய்யவொண்ணாதோ எனில், செய்யலாம். ஆனால் மேற்கூறிய காலங்களில் அவசியமாய்ச் செய்யவேண்டுமென்பதைப் பற்றி அதனை ஸாமாயிக காலம் என்றார் போலும். இதனால் ஸாமாயிகத்திற்குக் காலம் கூறியவாறு.

**111.** பெற்ற வகையினாற் சாமா யிகமுவப்பின்
முற்ற நிறையும் வதம்.

பெற்றவகையினால் - முற்கூறியபடி திரவிய, க்ஷேத்திர, காலங்கள் கூடியவிடத்துத் தன் சக்திக்குத் தக்கவாறு, சாமாயிகம்-ஸாமாயிக பாவனையில் பொருந்தி, உவப்பின் - (நியமித்த கால மளவும்) விரும்பி நின்றால் (வர்த்தித்தால்), வதம் - ஸாமாயிக விரதம், முற்ற நிறையும் - முழுவதும் நிறைவேறினதாகும். (எ—று).

முற்கூறிய திரவிய, க்ஷேத்திர, காலங்கள் கூடி ஸாமாயிக பாவனையைக் குறித்தகாலம் வரையில் செய்துமுடித்தால் ஸாமாயிக விரதம் நிறைவேறினதாகும் என்றதனால் இடையிற்றளராது நிற்கும் சக்தி அவசியம் வேண்டும் என்பதாயிற்று. இல்லையேல் ஸாமாயிகவிரதம் முற்றிலும் நிறைவதற்கில்லை எனக்கூறினார்.

**112. தனிய னுடம்பிது வேற்றுமை சுற்றம்
இனைய நினைக்கப் படும்.**

உடம்பிது - (நம் ஆத்மனோடு அநுபவசரித அஸத்பூத வியவஹார நயத்தினால் சம்பந்தப்பட்டிருக்கும்) இச்சரீரமானது, தனியன் - ஜீவனிடத்தின் நின்றும் வாளும் கூடும்போல வேறானதே என்றும், சுற்றம் - புத்திர மித்திராதி பந்துக்கள், வேற்றுமை - (உபசரித அஸத்பூத வியவஹார நயத்தினால் சம்பந்தப்பட்டவர்களாயினும், நிச்சய நயத்தினால் அத்யந்தம்) வேறானவர்களே என்றும், இனைய - இவை முதலாகிய பாவனைகள், நினைக்கப்படும் - ஸாமாயிக பாவனையில் தியானிக்கப்படும் (பாவிக்கப்படும்).

தற்காலம் சரீரமும் ஆத்மனும் ஒன்றாய்ச் சேர்ந்திருந்தும் உண்மையில் இரண்டும் வேறுதல்பற்றி வாளும் கூடும்போல வேறானதென்று கூறப்பட்டது.

"சேதனமா லாவி யசேதனமா லிவ்வுடம்
பாதலினால் வேறாய வவ்விரண்டுஞ்—சேர்தலினால்
மன்னுமோன் றாய்விடினும் வாளுந் தடறும்போற்
பின்ன மெனவே பிரித்துணர்மின்"

(திருக்கலம்பகம் 76) என்பதையும் நோக்குக.

கூடியிருக்கும் சரீரமே உண்மையில் தனி என்றவிடத்து, பிரிந்தே நிற்கும் சுற்றத்தார் உண்மையில் மிகவும் வேறுதல் பற்றி "வேற்றுமைச் சுற்றம்" என்றார்.

"[illegible] [illegible] [illegible] [illegible], [illegible] யாயீதி [illegible]

[illegible] [illegible] தயா" (சூத்ரசூடாமணி.)

(இ—ள்) இடைநடுவில் ஏற்பட்ட புத்ர, மித்ரர், களத்ரம் முதலியவர்கள் ஒன்றாய் மறுபிறப்பில் தொடரார்கள் என்பது

ஆச்சர்யமன்று. பிறந்தபொழுதே ஒன்றாய்த் தோன்றிய சரீரம் சம்பந்தமாய் மறுபிறப்பிற் தொடர்வதில்லை என்றதையும் உணர்க.

"இனைய நினைக்கப்படும்" என்றதனால் இவைபோல மற்றும் செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை முதலியனவும் நினைக்கப்படும்.

## 113. இறந்ததன் றீமைக் கிழித்தும் பழித்தும் மறந்தொழியா மீட்ட றலை.

இறந்ததன் தீமைக்கு - சென்றகாலத்தில் தான்செய்த பாப காரியங்களுக்கு, இழித்தும் பழித்தும் - தன்னை மிகவும் இழிவாகக் கருதி நிந்தித்து, (பிறகு), மறந்தொழியா - மறதியினாலும் அத்தகைய பாபகாரியங்களில் இனிச் செல்லாவண்ணம், மீட்டல் - தன் மன, வசன, காயங்களை மீட்டுக் கொள்ளுதல், தலை - ஸாமாயிக பாவனைக்கு உத்தமமானதாம். (எ—று).

பூர்வம் செய்த பொல்லாங்கிற்கஞ்சித் தன்னை நிந்தித்துக் கொள்ளுதலும் தகும் என்றார்.

"தன்னைநிந் தித்தல் தக்கோர்ப் பழிச்சுதல்." எனவும்,

"இடரினை யினுமின்றுப் பயில்புலத் திவறிச் சென்றேன்
படுதுயர் நரகந்தன்னுட் பதைப்பனே வடிக ளென்றன்." எனவும்,

"தெரிவின்றி நுகர்ந்தவெல்லாந் தீரயான் றுறப்ப லென்றன்." எனவும், மேருமந்தர புராணத்தில் கூறியவாற்றால் அறிக.

## 114. தீயவை யெல்லா மினிச்செய்யே னென்றடங்கித் தூயவழி நிற்றலு மற்று.

தீயவையெல்லாம் - பாபத்திற்குக் காரணமாகிய எவ்விதப் பொல்லாங்கான காரியங்களையும், இனிச் செய்யேன் - இதுமுதற் கொண்டு இனிமேல் நான் செய்யமாட்டேன், என்றடங்கி - என்று நிர்ணயம் செய்து அடக்கத்துடன் கூடி, தூயவழியில் - பரிசுத்தமான (குற்றமற்ற) மார்க்கத்தில், நிற்றலுமற்று - நிற்பதும் ஸாமாயிகம் ஆகும். (எ—று).

ஸாமாயிக பாவனையில் இனித் துஷ்காரியங்களைச் செய்யேன் என்று நிர்ணயித்தலும் கூடும் என்றார். "தூவகையி னிற்றலு மற்று" என்றும்பாடம்.

**115.** ஒன்றியு மொன்றுதுந் தான்செய்த தீவினையை
நின்று நினைந்திரங்கற் பாற்று.

*ஒன்றியும் - பொருந்தியும் (தெரிந்தும்), ஒன்றுதும் - பொருந்தாமலும் (தெரியாமலும்), தான்செய்த தீவினையை - தான்செய்த பாபகாரியங்களை, நின்று - ஸாமாயிகத்தில் நின்று, நினைந்து- எண்ணி, இரங்கற்பாற்று - இரக்கத்துடன் ஸாமாயிகம் செய்யக் கடவர்கள். (எ—று).*

*முன்னால் அறிந்தும் அறியாமலும் செய்த தீவினையை நினைந்து இரக்கமடையக் கடவதென்றார்.*

**116.** தனக்கும் பிறர்க்கு முறுதிச்சொற் செய்கை
மனத்தினிற் சிந்திக்கற் பாற்று.

*தனக்கும் - தன்னுடைய ஆத்மனுக்கும், பிறர்க்கும் - மற்ற ஜீவன்களுக்கும், உறுதி - ஹிதமாகிய, சொல் - வசனமும், செய்கை - காரியமும், மனத்தினில் - மனத்தினால், சிந்திக்கற் பாற்று - நினைக்கத் தகுந்தனவாம். (எ—று).*

*மன வசன காயங்களினால் தனக்கும் பிறர்க்கும் உறுதியான (ஹிதமான) காரியங்களில் பிரவர்த்தித்தல் அவசியம் என்றார்.*

**117.** பிறர்கண் வருத்தமுஞ் சாக்காடுங் கேடு
மறந்தும் நினையாமை நன்று.

*பிறர்கண் - பிறர்களிடத்து, வருத்தமும் - வருத்தம் செய்தலையும், சாக்காடும் - கொல்லுதலையும், கேடும் - கெடுதலையும், மறந்தும் - மறந்தாயினும், நினையாமை - செய்ய எண்ணாமை, நன்று - மிகவும் நல்லது. (எ—று).*

*பிறர்களைத் துன்பமுறுத்தலும், வதித்தலும், கெடுத்தலும் முதலிய காரியங்களை மறந்தும் மனத்தினால் நினையாதிருத்தல் ஸாமாயிகபாவனையில் அவசியமானதாகும்.*

**118.** திருந்தார் பொருள்வரவுந் தீயார் தொடர்பும்
பொருந்தாமை சிந்திக்கற் பாற்று.

திருந்தார் - அன்னியர்களுடைய, பொருள் - பொருள்களை, வரவும் - ஸ்வீகரித்தலையும், தீயார் - துன்மார்க்கருடைய, தொடர்பும் - ஸ்நேகத்தையும், பொருந்தாமை - பொருந்தாமையை, சிந்திக்கற்பாற்று - யோஜிக்கக் கடவர். (எ—று).

ஸாமாயிகபாவனை உடையவர்கள் அன்னியருடைய பொருள்களை அபகரித்தலையும் துன்மார்க்கர்களின் கூட்டுறவையும் நீக்கக் கடவர்.

## 119. கூடியவை யெல்லாம் பிரிவனவாம் கூடின்மை கேடின்மை சிந்திக்கற் பாற்று.

கூடியவை எல்லாம் - ஆத்மனிடத்துக் கர்மவசத்தினால்வந்து கூடின சரீரம், தனம் தான்யம் முதலான அஜீவத்ரவ்யங்களும், தந்தை, தாய், புத்திரர், மித்திரர், களத்திரம் முதலிய பந்துக்களும், கோ, மஹிஷம் முதலிய ஜீவத்ரவ்யங்களும், பிரிவனவாம் - பிரிந்து போகக்கூடியன (நிலையற்றன), கூடின்மை - கூட்டுறவினை அடையாத ஆத்மா ஒன்றும், கேடின்மை - நித்தியமானது என்பதை, சிந்திக்கற்பாற்று - யோஜிக்கக் கடவர். (எ—று).

ஆத்மாவுக்குக் கர்மவசத்தினால் கூடிய தனம், தான்யம் முதலிய ஜடவஸ்துக்களும், புத்திரர் மித்திரர் முதலிய ஜீவ வஸ்துக்களும் அவசியம் பிரிந்துபோகக் கூடியவை (நிலையற்றவை). ஆத்மா ஒன்றுமே நித்தியமானது என்று ஆலோசிக்கக் கடவர்.

"கேண்மி னமரங்காள் கேடின்றி நிற்பதுயிர்
காண்மி னுடம்பு கவினிளமை— கேண்மையுடன்
வல்லாண்மை செல்வமேன் றிவ்வெல்லாம் வானத்து
வில்லாகு மென்றே விழையன்மின்"

(திருக்கலம்பகம் 76.) என்றதனையும் ஈண்டு உணர்க.

## 120. நல்லறச் சார்வு நவையற நீக்கலும் பல்வகையாற் பார்க்கப் படும்.

நல்லறச்சார்வும் - ஸ்ரீ ஜிநதர்மத்தில் பிரீதியுடைத்தாதலும், நவை - துன்பத்திற்குக் காரணமான ஸம்ஸாரவிருத்திக்கு ஹேதுவாகிய வினைகள், அற - கெட்டு ஒழியும்படி, நீக்கலும் - நீக்குகின்றதுமாகிய ஸம்வேக, வைராக்யபாவனைகள், பல்வகையால் - பல

வகையினாலும் (சாஸ்திர ஆராய்ச்சியினால்), பார்க்கப்படும் - சிந்திக்கப்படும். (எ—று).

மேலும் ஆகமாப்யாசங்களினால் ஸம்வேக, வைராக்ய பாவனைகளைப் பாவிக்கத்தகும் என்றவாறு. ஸம்வேகம்—தர்ம, தர்மபலன்களில் பிரீதி (தர்மத்திலும், தர்மத்தின் பலன்களிலும் வாஞ்சைப்படுதல்). வைராக்யம் — ஸம்ஸார சரீர போகங்களில் வெறுப்படைதல்.

## சாமாயிக விரதத்தின் இறப்பு

**121.** உள்ள மொழிசெய்கை தள்ளல் விருப்பின்மை
யுள்ளார் மறத்த லிறப்பு.

உள்ளம் மொழி செய்கை - மன, வசன, காயங்களினால், தள்ளல் - ஸாமாயிக பாவனையை விட்டு வேறுகாரியங்களில் நிகழ்தலும், விருப்பின்மை - ஸாமாயிகத்தில் வாஞ்சையில்லாமையும் (விஸ்வாஸமில்லாமையும்), உள்ளார் மறத்தல் - ஸாமாயிக பாவனையை நியமித்த காலங்களில் செய்ய மறந்துவிட்டுக் குறிப்பிட்ட காலம் கடந்து செய்தலும், இறப்பு - ஸாமாயிக விரதத்திற்கு அதிசாரம் ஆவன. (எ—று).

ஸாமாயிகம் செய்கையில் மனதை வேறு காரியங்களிற் செலுத்துதலும், இதர விஷயங்கள் ஸம்பந்தமான வசனங்களை வசனிக்கின்றதும், காயசேஷ்டை செய்கின்றதும், விஸ்வாஸமின்றிச் செய்தலும், காலத்தை மறந்து அகாலத்தில் செய்வதும் ஆகிய இவை ஸாமாயிக விரதத்திற்கு அதிசாரம் எனப்படும்.

“யோகதுஷ்ப்ரணிதாநாநாதரஸ்ம்ருத்யநுபஸ்தாநாநி” (தத்வார்த்த ஸூத்திரம்) என்றதனாலும் உணர்க. இதுவரை ஸாமாயிகத்தைக் கூறினார்.

## போசத உபவாசம்.

**122.** உவாவட் டமியின்க ணால்வகை யூணு
மவாவறுத்தல் போசத மெனல்.

உவா - சதுர்தசி, அட்டமியின் கண் - அஷ்டமி முதலிய திதிகளில், நால்வகை ஊணும் - உண்பன, தின்பன, நக்குவன,

பருகுவன என்னும் நான்கு வகையான ஆஹாரங்களையும், அவா வறுத்தல் - ஆசையின்றி நீக்கிவிட்டு உபவசித்தல், போசதம் எனல் - புரோஷதோபவாஸம் எனப்படும். (எ—று).

உவா என்றல் பௌர்ணமி, அமாவாசையாகிற இரண்டு திதிகளுக்கும் பெயர். பௌர்ணமிக்கு முந்தின திதியாகிய சதுர்த்தசியிலும், அமாவாசைக்கு முந்தின திதியாகிய சதுர்தசி திதியிலும் உபவசித்தல் வழக்கமாய் வருகிறது. இதன் முதல் நூலிலும் அங்ஙனமே கூறப்படுகிறது. தமிழில் அதனை “ உவா ”என்றார்.

“ஓவா திரண்டுவவு மட்டமியும் பட்டினிவிட்
டோழுக்கங் காத்தல்” (ஜீவக சிந்தாமணி 1547).

ஒரு மாதத்தில் இரண்டு உவா என்றதனால் அமாவாசைக்கு முந்தின சதுர்தசியும், பௌர்ணமிக்குமுந்தின சதுர்தசியும் கூறிய வாறு. ஆஹாரத்தின்மேல் மனத்தின்கண் ஏற்படும் ஆசையையும் விடவேண்டுதல் அவசியமாதல்பற்றி “அவா வறுத்தல்” என்றார்.

“ சதுஷ்பர்வ்யாம் உபவாஸ: கர்த்தவ்ய: ஸ்ராவகோத்தமை: |
ஸர்வாரம்பபரித்யாகாத் ஸர்வஸாவத்யவர்ஜித: ||”
(ஸ்ரீ பூஜ்யபாத ஸ்ராவகாசாரம்) என்றதனாலும் அறிக.

## 123. ஐம்பாவ மாரம்பம் நீராட்டுப் பூச்சாந்து நம்பற்க பட்டினியின் ஞான்று.

பட்டினியின் ஞான்று - உபவாஸ தினத்தன்று, ஐம்பாவம் - அடுப்பு, துடைப்பம், அம்மி, நீர்ச்சால், உரல் இவைகளால் ஏற்படக் கூடிய ஹிம்ஸைக்குக் காரணமான தொழில்களையும் (சுல்லி, பேஷணி, உதகும்பிநி, கண்டநீ, ப்ரமார்ஜநீ என்ற பஞ்சஸூநாதோஷங்களையும்), ஆரம்பம் - உழவு, வாள், வரைவு, வாணிபம், வித்யா, சில்பம் என்ற ஆறுவகைத் தொழில்களையும், நீராட்டு - ஸ்நானம் செய்தலையும், பூ - பூமுடித்தலையும், சாந்து - சந்தனம் முதலியன பூசிக்கொள்ளுதலையும், நம்பற்க - நீக்கக்கடவர். (எ—று).

சமையல் செய்வதற்குரிய தொழிலாகிய மேற்கூறிய ஐந்து காரியங்களினால் சிறிது ஸாவத்யதோஷமேற்படுகிறதுபற்றி அவைகள் பஞ்சஸூநாதோஷம் என்று ஆகமத்தில் கூறப்படும்,

அத்தகைய காரியங்களை எல்லாம் விட்டு நீக்கி, ஆத்மபாவனை யுடன் கூடி, நால்வகை உண்டியினையும் விலக்குதல் உபவாஸ விரதம் எனப்படும்.

**124.** அறவுரை கேட்டல் நினைத்த லுரைத்தல்
திறவதிற் செய்யப் படும்.

அறவுரை - தர்மசாஸ்திரத்தை, கேட்டல் - கேட்கிறதும், நினைத்தல் - சிந்தித்தலும், உரைத்தல் - பிறருக்குச் சொல்லு தலும், திறவதில் - உறுதியாய் (அவசியமாய்), செய்யப்படும் - உப வாஸ தினத்தன்று செய்யவேண்டும். (எ—று).

மற்றெல்லாக் காரியங்களையும் விட்டுத் தருமசாஸ்திரத்தைக் கேட்டல், சிந்தித்தல், பிறருக்குச் சொல்லுதல் ஆகிய இக்காரி யங்களை உபவாஸ தினத்தன்று செய்யக்கடவர். மனநிகிழ்ச்சியை வேறு வழியிற் செல்லாமற்றடுத்தற் பொருட்டு இங்ஙனம் செய் தல் அவசியம் என்று கூறப்பட்டது.

**125.** உண்டி மறுத்த லுபவாசம் போசத
முண்ட லொருபோ தெனல்.

உண்டி மறுத்தல் - நான்குவிதமான ஆஹாரங்களையும் முற் றத் துறத்தல், உபவாஸம் - உபவாஸம் எனப்படும், ஒரு போது உண்டல் - ஒருவேளை ஆஹாரம் புசித்தல், போசதமெனல் - புரோஷதம் என்று சொல்லப்படும். (எ—று).

ஆஹாரத்தை முற்றத்துறத்தல் உபவாஸம் என்றும், ஒரு வேளை ஆஹாரம் கொள்வது புரோஷதம் என்றும் சொல்லப்படும். ஆதலின் புரோஷதோபவாஸம் என்பது:— முதல் நாளாகிய தாரணையன்று ஒருவேளை ஆஹாரங்கொள்ளுதலும், உபவாஸதின மாகிய நடுநாள் ஆஹாரத்தைத் துறந்திருத்தலும், அதற்கடுத்த நாளாகிய பாரணையன்று ஒருவேளை ஆஹாரம் கொள்ளுதலுமாம்.

**126.** போச துபவாச மென்றுரைப்பர் பட்டினிவிட்
டாரம்பஞ் செய்யா னெனில்.

பட்டினி விட்டு - முதல் நாளும், மறுநாளும் ஒருவேளை ஆஹாரங் கொண்டு அதாவது தாரணையன்றும், பாரணையன்றும்

ஏகபுக்தமாக இருந்து, உபவாஸதினத்தன்று நால்வகை ஆஹாரங்களையும் துறந்து, ஆரம்பம் - கிருஷி, வாணிபம் முதலிய தொழில்களை, செய்யான் எனில் - ஒருவன் செய்யாமல் ஆத்மத் தியானத்தில் பொருந்தி வர்த்திப்பானாகில் (அதனை), போசதுபவாசமென்று - புரோஷதோபவாஸம் என்று, உரைப்பர் - (அறிந்தோர்) சொல்லுவார்கள். (எ—று).

உபவாஸதினத்தின் முதல்நாளும்மறுநாளும் ஏகபுக்தமாகி, உபவாஸதினத்தில் நால்வகை ஆஹாரங்களையும் துறந்து, தியானத்தில் நிற்றல் புரோஷதோபவாஸம் எனப்படும். முதல்நாளும் மறுநாளும் ஏகபுக்தமின்றி உபவாஸதினத்தில் மாத்திரம் நால்வகைஆஹாரங்களையும் துறத்தல் சாதாரண உபவாஸம் என்று சொல்லப்படும்.

**127.** நோக்கித் துடையாது கோடன் மலந்துறத்தற்
சேக்கைப் படுத்த லிறப்பு.

நோக்கித்துடையாது கோடல் - (தான் எடுக்கிற வைக்கிற வஸ்துக்களை ஜாக்கிரதையாக ஜீவஹிம்ஸை ஆகாதவண்ணம்) பசியினால் ஆராய்ந்து பாராமல் வைக்கிறதும் எடுக்கிறதும் (அத்ரஷ்டம்ரஷ்ட ஆதானமும்), மலம் துறத்தல் - (ஜீவஹிம்ஸை நேரிடாவண்ணம்) பசியினால் ஆராய்ந்து பாராமல் மல மூத்ராதிகளைக் கழித்தலும் (அத்ரஷ்ட ம்ரஷ்ட உத்ஸர்க்கமும்), சேக்கைப்படுத்தல் - (ஜீவஹிம்ஸை நேரிடாவண்ணம் பார்க்காமல்) கட்டில் முதலிய சயனங்களில் படுப்பதும் (ஸம்ஸ்தரமும்), இறப்பு - புரோஷதோபவாஸ விரதத்திற்கு அதிசாரம் ஆகும். (எ—று).

**128.** கிரியை விருப்புக் கடைப்பிடி யின்மை
யுரிதி னிறப்பிவை யைந்து.

கிரியை விருப்பின்மை - பசியின் கொடுமையால் கிரியை, ஜபம், ஸாமாயிகம் முதலிய ஆவசியங்களுள் ப்ரீதி செய்யாமையும் (அனாதரமும்), கடைப்பிடியின்மை - வீட்டுக் காரியங்களினால் உபவாஸத்தை மறந்து, மனதைப் பலவழிகளில் செல்லவிடுவதும் (அஸ்மரணமும்), உரிதில் - உரிமையாகச் செய்யத்தக்க, இவை ஐந்து - இவ்வைந்தும், இறப்பு - புரோஷதோபவாஸ விரதத்திற்கு அதிசாரம் ஆவன. (எ—று).

"சதுர்ஷ்டசதுர்ஷ்ட ஸ்வஸ்தமாசாந ஸம்ஸ்காரணாநிவ்ருத்த:
ப்ரோஷதேநாசநம் ப்ரோக்தம் ததஸ்வாஸ்வாதநம் ஸதைவ"
(ப்ரஶ்நோத்தர ஶ்ராவகாசாரம்).

இதுவரையில் புரோஷதோபவாஸம் என்னும் சிக்ஷா விரதத்தைப் பற்றிக் கூறியவாறு.

## தேசாவகாசிக விரதம்

**129.** தேசம் வரைந்தொழுகல் கால வரையறையிற்
றேசாவ காசிக மென்.

காலவரையறையில் - இவ்வளவுகாலபரியந்தம், தேசம் வரைந்து - இன்ன தேசத்திற்கப்பால் போவதில்லை என்று நியமம்செய்து, ஒழுகல் - நடத்தல், தேசாவகாசிகமென் - தேசாவகாசிகம் என்னும் விரதம் எனப்படும். (எ—று).

இவ்வளவு காலத்திற்கு இன்ன தேசத்திற்கப்பால் போவதில்லை என்று நியமம் செய்து அதன்படி நடத்தல் தேசாவகாசிகம் என்னும் விரதம்.

**130.** மனைச்சேரி யூர்புல மாறடவி காத
மினையவிடம் வரைத லென்.

மனை - இன்ன மனை மட்டுமென்றும், சேரி - இந்தச் சேரி மட்டுமென்றும், ஊர் - இன்ன ஊர் மட்டுமென்றும், புலம் - இன்ன வயல் மட்டுமென்றும், ஆறு - இன்ன ஆறு மட்டுமென்றும், அடவி - இன்ன காடு மட்டுமென்றும், காதம் - இன்ன காதம் மட்டுமென்றும், இனைய - இப்படிப்பட்டவைகளை, (வரையறுத்துக் கொள்ளுதல்), இடம்வரைதலென் - க்ஷேத்திரத்திற்கு எல்லை குறிப்பிட்டு நியமம் செய்தலாம். இது தேச வரையறை எனப்படும். (எ—று).

**131.** ஆண்டொடு நாட்டிங் களித்துணை யென்றுய்த்தல்
காண்டகு கால மதற்கு.

ஆண்டொடு - வருஷமும், நாள் - நாளும், திங்கள் - மாதமும், இத்துணை என்று - இவ்வளவென்று, உய்த்தல் - நியமம் செய்து நடத்தல், அதற்கு - அந்த தேச விரதத்திற்கு, காண்தகு காலம் - கால நியமம் என்று அறியப்படும். (எ—று).

இத்தனை நாள், இத்தனை மாதம், இத்தனை வருஷம், இன்ன எல்லைக்குப் புறம்பு செல்லுவதில்லை என்று உசிதப்படி நியமம் செய்தலுமாம். இதனால் கால வரையறை கூறியவாறு.

**132.** எல்லைப் புறத்தமைந்த பாவமீண் டாமையிற்
புல்லுக நாளும் புரிந்து.

எல்லைப் புறத்தமைந்த பாவம் - தான் வரையறை செய்த எல்லைக்குப் புறம்பான தேசத்தில் ஏற்படக்கூடிய பாபகாரியங்கள், ஈண்டாமையில் - இந்த விரதானுஷ்டானத்தினால் சேராதபடியினால், நாளும் - தினந்தோறும் (எப்பொழுதும்), புரிந்து - (இந்தத் தேசவிரதத்தினை)விரும்பி, புல்லுக - அனுஷ்டிக்கக்கடவர்.

இந்த விரதத்தினால் நியமம் செய்த எல்லைக்குப் புறம்பு பாபகாரியங்களைச் செய்வதற்கில்லையாதலால் அவ்விடத்திற்கு மஹாவிரதத்தோடு ஒக்கும், ஆதலால் இந்த விரதத்தினை அவசியம் அனுஷ்டித்தல் நலம். (எ—று).

## தேசாவகாசிக விரதத்தின் இறப்பு

**133.** கூறல் கொணருத லேவ லுருக்காட்டல்
யாதொன்றும் விட்டெறிதல் கேடு.

கூறல் - தான் வரையறை செய்த எல்லைக்குப் புறம்பிலுள்ளவர்களைக் கூவி அழைத்தலும், அல்லது அவர்களுக்குச் சில சங்கதிகளைச் சொல்லி அனுப்புதலும், கொணருதல் - அவ்விடத்திலிருக்கும் வஸ்துக்களை வரவழைக்கின்றதும், ஏவல் - பிறரை ஏவிச் சில வேலைகளைச் செய்விக்கின்றதும், உருக்காட்டல் - தன் உருவத்தை உன்னதமான இடத்திலிருந்து காண்பித்தலும், யாதொன்றும் விட்டெறிதல் - கல், மரம் முதலியவற்றுள் ஒன்றை விட்டெறிகின்றதும், கேடு - தேச விரதத்திற்கு அதிசாரம் ஆகும். (எ—று).

இவை ஐந்தும் தேச விரதத்திற்கு அதிசாரம் ஆவன.

“ ஆநயந ப்ரேஷ்ய ப்ரயோக ஶப்த ரூபாநுபாத புத்கல க்ஷேபா:” (தத்வார்த்தஸூத்ரம்)என்றதை நோக்குக.

## அதிதி சம்விபாக விரதம்

**134.** உண்டி மருந்தோ டுறையு ளுபகரணம்
கொண்டுய்த்தல் நான்காம் வதம்.

*உண்டி - ஆஹாரத்தையும், மருந்தோடு - ஔஷதத்தையும், உறையுள் - ஆவாஸத்தையும் (இருக்க இடம்), உபகரணம் - புஸ்தகம் முதலிய உபகரணங்களையும், கொண்டுய்த்தல் - தன் சக்திக்குத் தக்கவாறு ஸத்பாத்திரங்களில் தானம்செய்தல், நான்காம் வதம் -* அதிதி ஸம்விபாகம் *என்னும் நான்காவது சிக்ஷா* விரதம் ஆகும்.

ஆஹாரம், ஔஷதம், ஆவாஸம், சாஸ்திரம் *என்னும்* இவைகளை *ஸத்பாத்திரத்தில் தானம் செய்தல்* அதிதி ஸம்விபாகம் *என்னும் சிக்ஷா* விரதம் ஆகும்.

**135.** தானஞ் செயல்வையா வச்ச மறநோக்கி
மானமில் மாதவர்க்கு நற்கு.

*அறம் நோக்கி - தர்மத்தை ஆராய்ந்து (அதன் பொருட்டு), மானமில் - கர்வமில்லாத, மாதவர்க்கு - மஹாதபஸினைச் செய்யும் முனிவர்களுக்கு, நற்கு - நன்றாக, தானம்செயல் - மேற்கூறிய நான்குவிதமான தானங்களைச்செய்தல், வையா வச்சம் -* வையாப்பிரத்யம் *(என்று ஆகமத்தில் கூறப்படும்).* (எ—று).

*தபஸ்விகளுக்கு மேற்கூறிய நான்குவகைத் தானங்களைச் செய்தல்* வையாப் பிரத்யம் *என்று சொல்லப்படும்.*

**136.** இடர்களைத லுற்றது செய்தலு மாங்கே
படுமெனப் பண்புடை யார்க்கு.

*பண்புடையார்க்கு - நற்குணங்களை உடைய மஹா முனிவர்களுக்கும், உத்தம ஶ்ராவகர்களுக்கும், ஆங்கே - துன்பம் நேரிட்ட பொழுதே, இடர் களைதல் - உசிதத்தினால் அத்துன்பத்தை நீக்குதலும், உற்றது செய்தலும் - தன் சக்திக்குத் தக்கவாறு அவர்களுக்கு வேண்டியதைச் செய்தலும், எனப்படும் - என்று சொல்லப்படும் (முற்கூறிய* வையாப்பிரத்யம்) (எ—று).

*உத்தம ஶ்ராவகர்களுக்கும், மஹாமுனிவர்களுக்கும் நேரிட்ட பசி, வியாதி, உபசர்க்கம் முதலிய துன்பங்களை உசிதத்தினால்*

நீக்குதலும், அல்லது ப்ரதிக்கிரியை செய்தலும் வையாப்பிரத்யம் என்று சொல்லப்படும்.

## 137. உத்தமற் கொன்பது புண்ணியத்தா லீவது உத்தம தான மெனல்.

உத்தமர்க்கு - உத்தமமான மஹா தபஸ்விகளுக்கு, ஒன்பது புண்ணியத்தால் - நவ புண்ணியக் கிரமத்தால், ஈவது - (அம்முனிவர்களுடைய பாணி பாத்திரத்தில் பரிசுத்தமான ஆஹாரத்தைக்) கொடுப்பது, உத்தமதானம் எனல் - உத்தமமான ஆஹார தானம் என்று சொல்லப்படும். (எ—று).

பாணி பாத்திரம்:— கையைப் பாத்திரம்போல் ஏந்துதல். மஹாமுனிவர்கள் பரிக்ரஹ ரஹிதர்களாகையால் வேறு பாத்திரங்களில் புசியார். ஆகையால் பாணி பாத்திரம் சொல்லப்பட்டது.

நவ புண்ணியக் கிரமம்:— எதிர்கொண்டழைத்தல், உச்சஸ்தானத்திருத்தல், பாதப்பிரக்ஷாளனம் செய்தல், அர்ச்சித்தல், நமஸ்கரித்தல், மன, வசன, காய சுத்தியுடைமை, ஏஷணசுத்தி என ஒன்பது விதம் ஆவன.

“ப்ரதிக்ரஹோச்சஸ்தாநம் உத்ஸ்தாநம் ததைவ ச ।
பாதப்ரக்ஷாளநம் பூஜா ப்ரணாமச்ச விதித: ॥”
“காயவாங்மநஸாம் ஶுத்திரேஷணாஶுத்திரேவ ஹி ।
விதேயம் நவகம் ஸாதுப்ய: க்ருஹிணாம் புண்யஹேதவே ॥” (ஸ்ரோத்ர ஸ்ராவகாசாரம்) என்றதனால் அறிக.

## 138. உத்தம தானந் தயாதானந் தம்மளவில் வைத்தொழியான் செய்க வுவந்து.

தம்மளவில் - தம்சக்திக்குத் தக்கவாறு (மஹா முனிவர்களுக்கு மேலே சொன்ன பிரகாரம் ஆஹாரதானத்தைக் கொடுப்பதுடன்), உத்தமதானம் - உத்தமமாகிய, தயா தானம் - தயாதானத்தை (அபயதானத்தை), வைத்து - சகலஜீவன்களிடத்தும் வைத்து, ஒழியான் - அதினின்றும் நீங்காதவனாய், உவந்து - கருணையுடன் (சந்தோஷத்துடன்), செய்க - செய்யக்கடவர். (எ—று).

சகல ஜீவன்களிடத்தும் தயவுடன்கூடி நிகழ்தல் அபய தானம் எனப்படும்.

**139. மனைவாழ்க்கை யால்வந்த பாவந் துடைத்தல்**
**மனைநீத்தார்க் கீயும் கொடை.**

*மனை வாழ்க்கையால் - வீட்டுக் காரியங்களால், வந்த - வரப் பட்ட, பாவம் - பாபங்களை, துடைத்தல் - நீக்கல் (கெடுத்தல்), மனை நீத்தார்க்கு - மனை முதலிய பரிக்கிரஹங்களை விட்டு நீக்கித் துறவடைந்த முனிவர்களுக்கு, ஈயும் - கொடுக்கும், கொடை - ஆஹாரதானத்தின் பலனும். (எ—று).*

*முனிவர்களுக்கு ஆஹாரதானம் செய்வது பாபங்கள் நீங்குவ தற்கு ஹேதுவாகின்றது என்பது பெறப்படும்.*

**140. தான விடயத்திற் றடுமாற்றம் போந்துணையும்**
**ஈனமி லின்பக் கடல்.**

*தானவிடயத்தில் - மேற்கூறிய தானங்களினால் (உண்டாகும் பயன்), தடுமாற்றம் - சம்ஸாரம் (சம்ஸாரபந்தம்), போந்துணை யும் - நீங்கி முக்தியடைகிறவரையிலும், ஈனமில் - குறைவில்லாத, இன்பக்கடல் - பெரிதான சுகத்திற்குக் காரணமாம். (எ—று).*

*தானத்தினால் வரும் நல்வினையின் உதயத்தினால், தாதாக்கள் (தானம் செய்தவர்கள்) முக்தியடையும் வரையில், பிறப்புக்கள் தோறும் இந்திர பதவி, சக்ரவர்த்தித்வம், இராஜாதி ராஜத்வம் முதலிய பதவிகளைப் பெற்று, விசிஷ்ட சம்ஸார சுகத்தினையும் அடைவர். பின்னால் முக்தியினையும் அடைந்து என்றைக்கும் அழியாத ஆனந்த சௌக்கியத்தினையும் அடைவர் என்பது கருத்து.*

## உதாரணக் கதைகள்

**141. சிரிசே னிடபமா சேனையே பன்றி**
**உரைகோடற் கொண்டை யுரை.**

*சிரிசேன் - ஆஹார தானத்திற்கு ஸ்ரீஷேண மஹாராஜ னும், இடபமாசேனை - ஔஷததானத்திற்கு விரஷபஸேனையும், பன்றி - ஆவாஸ தானத்திற்குப் பன்றியும், உரை கோடல் -(சாஸ் திர) தானத்திற்கு, கொண்டை - கௌண்டேசரும் (குந்த குந்தா சாரியரும்), உரை - உதாரணமாகச் சொல்லுக. (எ—று).*

*இக் கதைகளைப் பின் அனுபந்தத்தில் காண்க.*

### அதிதி சம்விபாக விரதத்தின் இறப்பு

**142.** பசியதன் மேல்வைத்தல் மூடல் மறைத்தல்
புரிவின்மை யெஞ்சாமை கேடு.

*பசியதன் மேல்வைத்தல்* - ஆஹாரத்தைப் பச்சிலைமேல்வைத்தலும், *மூடல்* - பச்சிலையினால் மூடுவதும், *மறைத்தல்* - பச்சை வஸ்துக்களைக் கலந்து மறைவாகக் கொடுப்பதும், *புரிவின்மை* - பக்தியில்லாமல் கொடுப்பதும், *எஞ்சாமை* - காலந்தவறிக் கொடுப்பதும், *கேடு* - அதிதி சம்விபாக விரதத்திற்கு அதிசாரம் ஆகும். இவை ஐந்தும் அதிதி ஸம்விபாக விரதத்திற்கு அதிசாரம்ஆவன.

“ஸசித்த நிக்ஷேபாபிதாநபரவ்யபதேசமாத்ஸர்ய காலாதிக்ரமா:” (தத்வார்த்த ஸூத்ரம்) என்றதனால் அறிக.

இத்துடன் பன்னிரண்டு விரதங்களையும் கூறியவாறு,
இனிப் பூஜையைப்பற்றிக் கூறுகின்றார்.

### பூசனையின் இயல்

**143.** தேவாதி தேவன் திருவடிக்குப் பூசனை
யோவாது செய்க வுவந்து.

*தேவாதி தேவன்* - தேவர்களுக்கெல்லாம் தேவனான அர்ஹத் பரமேஸ்வரருடைய, *திருவடிக்கு* - அழகியபாதத்திற்கு, *பூசனை* - அபிஷேக, ஆராதனை முதலிய சிறப்புக்களை, *ஓவாது* - இடைவிடாமல், *உவந்து* - ஸந்தோஷித்து, *செய்க* - செய்தல் வேண்டும். (எ—று).

அர்ஹத் பரமேஸ்வரர் பாதங்களில் பக்திபூர்வகம் அர்ச்சித்தல், நமஸ்கரித்தல் முதலியன செய்தல் பூஜை எனப்படும்.

“ ……………தன்ன மதிபோன் முக்குடைக்கீழ்த் தாதை பாதம்
பூவே புகை சாந்தம் சுண்ணம் விளக்கிவற்றுற் புனைத லொனும்
ஏவா விவை பிறவும் பூசனையென் றீண்டியநூல் கரை கண்டாரே.”
(ஜீவக சிந்தாமணி—1547) என்றதையும் நோக்குக.

இவ்வாறு பூஜிப்பதனால் பூஜிப்பவர்களுக்குப் புண்ணியத்தை அளிக்கக் காரணமாகின்றது. “உவந்து” என்றதனால் பக்திபூர்வகமும் சக்தியானுஸாரமும் எனக் கொள்க,

## பூசனையின் சிறப்பிற்கு உதாரணம்

**144.** தெய்வச் சிறப்பின் பெருமையைச் சாற்றுமேன்
மையுறு தேரை யுரை

*தெய்வச் சிறப்பின்* - அருகத்தேவருடைய ஸ்ரீபாதங்களில் பக்தியுடன் பூஜிப்பதன், *பெருமையை* - மாஹாத்மியத்தை, *சாற்றுமேல்* - சொல்லுமிடத்தில், *மையுறு* - கறுத்த, *தேரை* - ஒரு தவளையானது, *உரை* - உதாரணமாகச் சொல்லப்படும்.

இக்கதையை அனுபந்தத்தில் பார்க்க.

## சல்லேகனை இயல்

**145.** இடையூ றொழிவினோய் மூப்பிவை வந்தால்
கடைதுறத்தல் சல்லே கனை.

*இடையூறு* - தேவ, மானவ, திர்யக், அசேதனம் என்னும் நான்கு வகையினால் ஏற்படும் உபஸர்க்கம், க்ஷாமம் முதலிய இடையூறுகளும், *ஒழிவில் நோய்* - மருந்தில் தீராத (அஸாத்ய) வியாதியும், *மூப்பு* - மிகுந்த கிழத்தனமும், *இவை* - ஆகிய இவைகள், *வந்தால்* - வந்தால், *கடை* - கடைசியில் (அந்திய காலத்தில்), *துறத்தல்* - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்னும் நான்குவகை ஆஹாரங்களையும், மற்ற ஆரம்பம் முதலியவைகளையும் நீக்குதல், *சல்லேகனை* - சல்லேகனை என்று சொல்லப்படும்.

ஸல்லேகனை:— சரீரத்தியாகம். அதாவது, மரணகாலத்தில் சாகின்றோமென்ற ஸம்க்லேசமும், ஸர்ராகி ஸஜ்ஜமெல்லாமும் ஒழியவேண்டும் என்று சொல்லிச் சித்த சமாதானம் செய்து கொண்டு, கலக்கத்தை நீக்கி, பரலோககமன பாதேயமாகிய(கட்டமுதாகிய) பஞ்சநமஸ்கார பரம மந்திரோபதேசத்தைப் பெற்று இரத்தினத்திரய ரூபமாகிய ஸன்மார்க்கத்தில் கலங்காதிருத்தல்.

நீலகேசி 321-வது கவி உரையிலும், அக்கவியின் உரையில் மேற்கோளாகக் கொள்ளப்பட்ட

"எல்லாப் படியும் விலக்கப் படாதேரியா
வில்லல மழியி லதனகத்தில்——நல்ல
பொருள்கொண்டு போவான்போற் சாம்போது பற்றற்
றருள்கொண்டு போத லறம்."—— என்ற கவியாலும் அறிக.

“ 𑌉𑌪𑌸𑌰𑍍𑌗𑍇 𑌦𑍁𑌰𑍍𑌭𑌿𑌕𑍍𑌷𑍇 𑌜𑌰𑌸𑌿 𑌰𑍁𑌜𑌾𑌯𑌾𑌂 𑌚 𑌨𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌤𑍀
𑌕𑌾𑌰𑍇, 𑌧𑌰𑍍𑌮𑌾𑌯 𑌤𑌨𑍁𑌵𑌿𑌮𑍋𑌚𑌨𑌮𑌾𑌹𑍁𑌃 𑌸𑌲𑍍𑌲𑍇𑌖𑌨𑌾𑌮𑌾𑌰𑍍𑌯𑌾𑌃”
(𑌰𑌤𑍍𑌨𑌕𑌰𑌣𑍍𑌡𑌕 𑌶𑍍𑌰𑌾𑌵𑌕𑌾𑌚𑌾𑌰𑍇) என்றதனால் அறிக.

தேவ, மானவ, திர்யக், அசேதன என்ற நான்கு வகைகளால் வரும் உபஸர்க்கங்களாவன:— தேவர்கள் (பூதம், பிசாசம் முதலியன), மனிதர்கள் (சத்துருக்கள், திருடர்கள், முதலியவர்கள்), திர்யக் பிராணிகள் (சிங்கம், புலி, கரடி, பாம்பு முதலிய விலங்குகள்), அசேதனம் (உயிரில்லாதனவாகிய நீர், நெருப்பு, காற்று, படை, நஞ்சு முதலியன) இவைகளால் ஏற்படும் துன்பங்கள். இதனை நீலகேசி 111-வது கவியாலும் உணர்க.

**146.** இறுவாய்க்க ணான்கும் பெறுவாமென் றெண்ணி
மறுவாய நீக்கப் படும்.

இறுவாய்க்கண் - அந்திய காலத்தில் (ஆயுஷ்யாவஸானகாலத்தில்), நான்கும் - ஞானம், தரிசனம், ஸுகம், வீரியம் என்னும் நான்கு ஆத்மகுணங்களையும், பெறுவாம் என்று - அடையக்கடவேம் என்று, எண்ணி - நினைத்து, மறுவாய - குற்றமுள்ள எண்ணங்களை எல்லாம், நீக்கப்படும் - விலக்கக்கடவர். (எ—று),

இதனால் ஸல்லேகனையின்போது குற்றமுள்ள எண்ணங்களை விடல்வேண்டும் எனக்கூறப்பட்டது. அவற்றை மேல்கூறுகின்றார்.

**147.** பற்றொடு செற்றமே சுற்றந் தொடர்ப்பாடு
முற்றுந் துறக்கப் படும்.

பற்றொடு - ஆசையையும், செற்றம் - கோபத்தையும், சுற்றம் - உறவின் முறையாரையும், தொடர்ப்பாடு - மனை முதலிய பாஹ்யப் பரிக்கிரஹங்களையும், மித்தியாத்துவம் முதலிய அப்யந்தரப் பரிக்கிரஹங்களையும், முற்றும் - முழுவதையும், துறக்கப்படும் - நீக்குதல் வேண்டும். (எ—று).

பாஹ்ய, அப்யந்தரப் பரிக்கிரஹங்களின் விபரங்களுக்கு முன் 8-ம் பக்கத்தில் காண்க.

**148.** ஆலோ சனையி னழிவகற்றி மாதவன்கண்
மீள்வின்றி யேற்றுக் கொளல்.

ஆலோசனையின் - ஆலோசனாபூர்வகமாக, அழிவு - தான் கொண்ட விரதத்திற்குப் பிரமாத வசத்தினால் கெடுதல் நேரிட்டால், அகற்றி - அதை நீக்கி, மாதவன்கண் - மஹா தபத்தை உடைய குருவினிடத்தில் (ஒளியாமல் கூறி), மீள்வின்றி - விரதத்தினின்றும் நழுவாமல், ஏற்றுக்கொளல் - மறுபடியும் (குருவின் ஆக்ஞைப்படி பிராயச்சித்த விதியின்படி) விரதங்களைக் கைக்கொண்டு அனுஷ்டித்தல் வேண்டும். (எ—று).

**149. கசிவு கலக்க மகற்றி மனத்தை ஒசியாமல் வைக்க வுவந்து.**

கசிவு - இளக்கத்தையும், கலக்கம் - கலக்கத்தையும், அகற்றி - நீக்கி, மனத்தை - மனத்தை, உவந்து - ஸந்தோஷத்துடன், ஒசியாமல் - சாயாமல் (வளையாமல்), வைக்க - (ஆத்மஸ்வரூபத் தியானத்தில்) ஸ்திரமாக வைக்கவேண்டும். (எ—று).

கசிவு= இளக்கம், ஸ்நேகம், இதனை வடநூலார் ஸ்நிக்தபரிணமம் என்பர். இதனாலும் வினைகள் ஆஸ்ரவிக்கின்றவாதலால் அதையும் அகற்றுதல்வேண்டும் என்றார். கலக்கம்=குரோதம், மானம், மாயை, லோபங்களினால் கலக்கம் அடைதல். "ஒசியாமல்" என்றதனால் மனத்தை வேறு வழிகளில் நழுவவிடாமல் தைரிய பாவனையுடன் என்பது கருத்து. "உவந்து" என்றதனால் ஸந்தோஷ பாவனையுடன்கூடி என்பதும் பெறப்படும்.

ஸல்லேகனையின் பொழுது மனத்தின்கண் கசிவு, கலக்கம் முதலியவற்றை அகற்றி ஆத்மஸ்வரூபத்தை ஸ்திரமாய்ச் சிந்தித்தல் வேண்டும் என்றவாறு.

**150. ஊனொடு பான முறைசுருக்கி யோர்ந்துணர்ந்து மானுடம்பு வைக்கப் படும்.**

ஊனொடு பானம் - அன்ன பானங்களை, முறை - கிரமமாக, சுருக்கி - குறைத்து, ஓர்ந்துணர்ந்து - மறு ஜன்மத்திற்குத் துணையாகக் கூடிய தர்மங்களை ஆராய்ந்தறிந்து (தர்மோபதேசம் முதலியவற்றைக் கேட்டு), மானுடம்பு - மனுஷ்ய சரீரம், வைக்கப்படும் - சித்த ஸமாதானத்துடன்கூடி (கலங்காமல்) வைக்கப்படல்வேண்டும் (விடப்படல்வேண்டும்). (எ—று).

"மானுடம்பு" என்றதற்கு, மாட்சிமையுற்ற மனுஷ்யசரீரம் என்று பொருள் கொள்ளினும் அமையும்.

ஸல்லேகனையின் ஆரம்பத்தில் அன்ன பானங்களை மிதம் செய்து, பிறகு கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைத்து, அன்னத்தை விட்டுப் பானத்தை மாத்திரம் உட்கொண்டு, அதனையும் கிரமத்தால் குறைத்து, உபவாசத்தைக் கொண்டு, மரணத்திற்குப் பயம் அடையாமல் இராக துவேஷ மோஹங்களையும் விட்டு, ஆகம வசனங்களைக் கேட்டுச் சித்த ஸமாதானத்துடன் சரீரத்தை விடல் வேண்டும் என்றார். சரீரத்தை விடல்வேண்டும் என்றதனால், ஆயுஷ்யாவஸான காலத்தில் இவ்வாறு செய்தல்வேண்டும் என்பது கருத்து.

**151. மந்திரங்க ளைந்து மனத்துவரச் சென்றார்கள்**
**இந்திரற்கு மிந்திரரே யெண்.**

*மந்திரங்களைந்தும் - பஞ்சபரமேஷ்டிகளின் நமஸ்கார பதங்களாகிய பஞ்ச மந்திரங்கள் ஐந்தையும், மனத்துவர - மனத்தில் அடையும்படி, சென்றார்கள் - நிகழ்ந்தவர்கள் (இடைவிடாமல் சிந்தித்தவர்கள்), இந்திரற்கும் - தேவேந்திரற்கும், இந்திரர்-மேலான இந்திரரான ஸ்வாமியாக (ஜிநேந்திரராக) ஆவர் (என்பதை), எண் - அறிவாயாக. (எ—று).*

*இதனால் ஸல்லேகனையைக் கொண்டு நிகழுங்கால் பஞ்சமந்திர பதங்களையிடைவிடாது சிந்தித்தலவசியம் எனக் கூறப்பட்டது.*

பஞ்ச மந்திரங்களாவன:— (1) ஓம் ணமோ அரஹந்தாணம். (2) ஓம் ணமோ ஸித்தாணம், (3) ஓம் ணமோ ஆயிரியாணம், (4) ஓம் ணமோ உவஜ்ஜாயாணம், (5) ஓம் ணமோ ளோயே ஸவ்வஸாஹூணம். *இவற்றை அ, ஸி, ஆ, உ, ஸா, என்றும் கூறுவது உண்டு.*

### சல்லேகனையின் இறப்பு

**152. சாவொடு வாழ்க்கையை யஞ்சித்தான் மெச்சுதன்**
**வாழ்வொடு நட்டார் நினைப்பு.**

*சாவொடு - மரணத்தோடு, வாழ்க்கையை - ஜீவிதத்திற்கும், அஞ்சி - பயந்து, தான் - (ஸல்லேகனையைக் கைக்கொண்ட) ஒருவன், மெச்சுதல் - மேற்கூறிய ஜீவிதமரணங்களை மாறுதலாக வேண்டுகின்றதும் (அதாவது, மரணம் நேரிடுமென்று உணர்ந்தபொழுது ஜீவித்திருக்க வேண்டுமென்று நினைத்தலும், ஜீவித்திருப்போம் என்று உணர்ந்தபொழுது மரணமடைய வேண்டும்*

என்று இச்சித்தலும்), வாழ்வொடு - (பூர்வம்) முன்னால் அனு பவித்த சுகத்தைப்பற்றிச் சிந்தித்தலும், நட்டார் நினைப்பு - ஸ்நே ஹிதர்கள் முதலிய பந்துக்களை நினைத்துக் கொள்ளுதலும்.

(அடுத்தப் பாவுடன் தொடரும்).

**153.** நிதானத்தோ டைந்திறப்பு மின்றி முடித்தார்
பதான மறுத்தா ரெனல்.

நிதானத்தோடு - இனி இப்படி ஆகவேண்டுமென்று எண் ணுகிற நிதானசல்லியமும் ஆகிய, ஐந்து இறப்பும் - ஸல்லேகனைக் குக் கூறிய ஐந்து அதிசாரங்களும், இன்றி - இல்லாமல், முடித் தார் - ஸல்லேகனையைக் கைக்கொண்டு நிறைவேற்றியவர்கள், பதா னம் - ஸம்ஸாரத்திற்கு முக்கிய காரணங்களான பஞ்ச பரிவர்த் தனைகளை, அறுத்தார் - கெடுத்தவர்கள், எனல் - என்று சொல் லப்படுவர்.

(எ—று).

பதானம்—முக்கியம். ப்ரதாநம் என்ற வடமொழியின் திரிபு. பஞ்சபரிவர்த்தனைகள்:— திரவியம், க்ஷேத்திரம், காலம், பவம், பாவம் என்பன. இவ்விரண்டு வெண்பாக்களாலும் ஸல்லே கனைக்கு உளவாகிய ஐந்து அதிசாரங்களைக் கூறினார்.

"ஜீவித மரணா ஶம்ஸா மித்ராநுராக ஸுகாநு பந்த நிதாநாநி" (தத்வார்த்த ஸூத்ரம்) என்றதனால் அறிக.

இதுவரையில் ஸல்லேகனையைக் கூறினார். இனி அறத்தின் பயனைப் பற்றி ஏழு வெண்பாக்களாற் கூறுகின்றார்.

## அறத்தின் பயன்

**154.** அறத்துப் பயனைப் புராண வகையிற்
றிறத்துள்ளிக் கேட்கப் படும்.

அறத்துப் பயனை - தர்மத்தின் பலனை, புராணவகையில் - புராணம் முதலிய சாஸ்திரங்களினால், திறத்துள்ளி - நன்றாய் ஆராய்ந்து, கேட்கப்படும் - கேட்டுச் சிந்தித்தல் வேண்டும்.

தர்மத்தின் பலன்களை, திரிஷஷ்டி சலாகா புருஷர்களுடைய சரிதமாகிய பிரதமானுயோகம் முதலிய சாஸ்திரங்களைக் கேட்டு அல்லது அப்பியஸித்து, நன்றாய் உணர வேண்டும்.

**155. பிறப்புப் பிணிமூப்புச் சாக்காடு நான்கு
மறுத்த லறத்தின் பயன்.**

*பிறப்பு - பிறப்பும், பிணி - வியாதியும், மூப்பு - வயோதிக மும், சாக்காடு - மரணமும், நான்கும் - ஆகிய இவை நான்கினையும், அறுத்தல் - கெடுத்தல் (மோக்ஷத்தை அடைதல்), அறத்தின் பயன் - தர்மத்தின் பலன் ஆகும். (எ—று).*

*சம்ஸாரமானது பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு என்னும் துன்பங்களுடன் கூடிச் சுழல்வதால், இவற்றைக் கெடுத்த நிலைமை ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்ட மோக்ஷம் அடைதல் ஆகும். அதுவே அறத்தின் பலனும் என்றவாறு.*

*"பிறப்பு" முதலியன துன்பம் என்றதற்கு,—*

"பிறப்பிறப்பு மூப்புப் பிணிகளெனுந் துன்ப
முறப்புணர யானுழக்குங் காலை" (திருக்கலம்பகம் 76).

*அத்துன்பங்களின் நீங்கி நிலையான சுகத்தை எய்துதல் அறத்தின் பயன் என்றார்.*

"அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில" (திருக்குறள்) *என்றதனாலும் அறிக.*

**156. பரிவு நலிவினெ டச்சமு மில்லை
உருவின் பிறப்பில் லவர்க்கு.**

*உருவின் - உருவினையுடைய, பிறப்பில்லவர்க்கு - பிறப்பில் பிறவாத தன்மையை அடைந்த மோக்ஷ ஜீவன்களுக்கு (ஸித்த பரமேஷ்டிகளுக்கு), பரிவு - விருப்பமும், நலிவினேடு - வருத்த மும், அச்சமும் - பயமும், இல்லை - ஒருகாலும் கிடையாது.*

*"பிறப்பில்லவர்"—இனி ஸம்ஸாரத்தில் பிறவியினை அடையா தவர்கள். அதாவது, முக்த ஜீவன்கள் என்றவாறு.*

**157. கிட்டமுங் காளிதமு நீக்கிய பொன்போல
விட்டு விளங்கு முயிர்.**

*உயிர் - மேற்கூறிய முக்த ஜீவன்கள், கிட்டமும் - கிட்ட மும், காளிதமும் - காளிதமும், நீங்கிய - விலகிய, பொன் போல - புடம்போட்டுக் காய்ச்சிய சுத்தமான பொன்னைப்போல, விட்டு விளங்கும் - தனது குணங்களினால் மிகவும் பிரகாசிப்பர்.*

கிட்டகாளிதம்—பொன்னோடு ஸம்பந்தப்பட்ட இதரபாஷாணங்களின் குணம். களிம்பு, மாற்று இவை பொன்னுடன் அனாதி சம்பந்தமுடையன எனவும்படும். இவை, பொன்னைப் புடம் போட்டுக் காய்ச்சிய காலத்தில் நீங்கக் கூடியன. அக்கினியின் ஸம்யோக வசத்தினால், கிட்டகாளிதங்களில் நீங்கிய பொன் தனது சுத்த குணங்களினால் மிகவும் பிரகாசிப்பது போல, ஸ்ருதத்துடன்கூடி குப்தி, ஸமிதி, அறம், சிந்தை, அடக்கம், தபம் என்னும் இவைகளால் தோன்றிய தர்மத்யானம், சுக்கிலத்யானம் என்னும் அக்கினியினால், ஸம்ஸார ஜீவன்களிடத்து அனாதிஸம்பந்தமுடைய ஞானவரணீயம் முதலிய அஷ்ட கர்மங்களும், சரீரம் முதலிய நோகர்மங்களும் (ஸ்தூல புத்கலங்களும்) நீங்கிய காலத்து முக்தியை எய்தின ஜீவன், தனது சுத்த குணங்களாகிய கேவலக்ஞானம், தரிசனம் முதலிய குணங்களினால் மிகவும் சுத்தமாக என்றைக்கும் பிரகாசிக்கும் என்றவாறு.

“ மாற்றற வோட்டி வைத்த செம்பொன்னோத்—தொளிருமே ”
(மேருமந்தர புராணம்) என்றதையும் உணர்க.

## 158. எல்லையி லின்ப முணர்வு வலிகாட்சி
## புல்லும் வினைவென் றவர்க்கு.

வினை வென்றவர்க்கு - மேற்கூறியவாறு ஞானவரணீயம் முதலிய கர்மங்களை வென்றவர்களுக்கு (நீக்கியவர்களுக்கு), எல்லையில் இன்பம் - அனந்தசுகமும், உணர்வு - அநந்த ஞானமும், வலி - அனந்தவீர்யமும், காட்சி—அனந்ததரிசனமும், புல்லும் - வந்தடைவனவாகும். (எ—று).

“எல்லையில்” என்பதனை இன்பம், உணர்வு, வலி, காட்சி என்ற நான்கிடத்தும் கூட்டுக. அனந்தம்=முடிவு இல்லாதது.

ஞானவரணீயம் முதலிய எண் வினைகளை வென்ற முக்தி ஜீவன்களுக்கு (ஸித்தபரமேஷ்டிகளுக்கு) அனந்தஞானம் முதலிய எண் குணங்கள் கூடுவன என்றவாறு.

“ வெவ்வினை யெண்மையின் கேட்டி லெண்குண மெய்தி ”
(மேருமந்தர புராணம்) என்றதனாலும் அறிக.

எண் வினைகள்:— ஞானவரணீயம், தர்சனவரணீயம், மோஹனீயம், அந்தராயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், வேதனீயம்.

எண் குணங்கள்:— அனந்ததர்சனம், அனந்தஞானம், அனந்தசுகம், அனந்தவீர்யம், அவ்யபாதத்வம், அகுருலகுத்வம், அதிஸூக்ஷ்மத்வம், அவகஹனத்வம்.

வினையென்றவர்க்கு - ஞானாவரணீயம், தர்சனாவரணீயம், மோஹனீயம், அந்தராயம் என்னும் காதி கர்மங்களைக்கெடுத்த அருகத் பரமேஷ்டிகளுக்கு, எல்லையில் இன்பம், உணர்வு, வலி, காட்சி - அனந்த சுகம் முதலிய அனந்த சதுஷ்டயங்கள், புல்லும் - கூடுவனவாம், எனினும் அமையும்.

"காதி நான்மை கடந்தோய் நீ
கடையி னன்மை யடைந்தோய் நீ"
(மேருமந்தர புராணம் 807). என்றதனாலும் அறிக.

**159.** உலக மறியினு மொன்று மறியார்
நிலைய நிலைபெற் றவர்.

நிலைய - தனது ஸ்வரூபமாகிய சுத்த ஞான, தரிசனங்களை அடைந்து, நிலைபெற்றவர் - நித்யஸ்வரூபத்தைப் பெற்ற முக்த ஜீவன்கள் (ஸித்தபரமேஷ்டிகள்), உலகம் - இவ்வுலகமானது, மறியினும் - ஒருகால் கீழ்மேலாயினும், ஒன்றும் - ஒருபொழுதும் (எக்காரணத்தைக் கொண்டும்), மறியார் - திரும்ப ஸம்ஸாரத்தில் பிறவியினை அடையார். (எ—று).

உலகம் மறியாமை பற்றி "மறியினும்" என்றார். முக்த ஜீவன்கள் மீண்டும் ஸம்ஸாரத்தில் பிறவியினை ஒருகாலும் அடையார் என்ற துணிவு பற்றி "உலகம் மறியினும் ஒன்று மறியார்" என்றார்.

"அருந்தவன் றிரிந்து வாராக் கதிக் கணின்றன்"
(மேருமந்தர புராணம்) என்றதனாலும் உணர்க.

**160.** மூவுலகத் துச்சிச் சூளா மணிவிளக்குத்
தோவகையிற் சித்தி யவர்.

தோவகையில் - குற்றமில்லாத, சித்தியவர் - சித்த க்ஷேத்திரத்தையடைந்த முக்தஜீவன்கள்(ஸித்தபரமேஷ்டிகள்), மூவுலகத் துச்சி - இம்மூன்று உலகத்திற்கும் உச்சியாகிய மோக்ஷஸ்தானத்தில், சூளாமணி விளக்கு - ஓர் உன்னத ஸ்தானத்திலுள்ள இரத்தினத் தீபம் பிரகாசிக்குமாறு போலப் பிரகாசியா நின்றார்கள்.

உன்னதமான ஒரு ஸ்தானத்தில் உள்ள இரத்தினத் தீபம் தனது பிரபையினால் எங்கும் ஒளிருமாறுபோல, மூன்று உலகத்

திற்கும் உச்சியாகிய மோக்ஷஸ்தானத்தை அடைந்த ஜீவனும் தனது கேவலக்ஞானம், தரிசனம் முதலிய குணங்களினால் லோகாலோகம் முழுவதும் ஒருங்கே பிரகாசியா நிற்கும் என்றவாறு. முக்த ஜீவன்களுக்கு மூவுலகத்துச்சி ஸ்தானமாகும்.

"வினையற விட்டபோழ்தின் ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ...மூ வுல கினுச்சி
கனைகழ லரசநிற்றல் கைவலாமாதுங் கண்டாய்"

(மேருமந்தர புராணம் 106.) எனறதனாலும் அறிக.

லோகாலோகம் முற்றிலும் ஒருங்கே அறியவும், காணவும் படுதலால் பிரகாசித்தமையாயிற்று. இதனால் குணத்வாரத்தினால் முக்த ஜீவன்களுக்கு ஸர்வ வியாபித்வம் உடன்பட்டவாறு.

மூவுலகம்:— 3-ம் பக்கத்தில் பார்க்க.

இதுவரையில் அறத்தின் பயனைக்கூறினார். இனி இல்லறத்தார்களின் (ஸ்ராவகர்களின்) பதினொரு நிலையினைக் கூறுகின்றார்.

## இல்லறத்தார்களின் பதினொரு நிலைகள்

**161.** பதினோர் நிலைமையர் சாவக ரென்று
விதியி னுணரப் படும்.

சாவகர் - ஸ்ராவகர் (இல்லறத்தினர்), பதினோர் நிலைமையர் - தர்சனீகன் முதல் உத்திஷ்டபிண்ட விரதி ஈறாகப் பதினொரு நிலைமையை உடையார், என்று - என்று, விதியின் - சாஸ்திரப் பிரமாணத்தால், உணரப்படும் - அறியப்படும். (எ—று).

இல்லறத்தில் நிகழும் ஸ்ராவகர்கள் பதினொரு நிலைமையினை உடையவர்களாகின்றனர் என்று ஆகமங்களுள் கூறப்பட்டன. அவற்றை முறையே பதினொரு வெண்பாக்களினாற் கூறுகின்றார்.

## தரிசனீகன் நிலை

**162.** * காட்சியிற் றிண்ணனாய்ச் சீல விரதமிலான்
மாட்சியுறு தரிசன னும்.

*"காட்சியிற் றிண்ணென்று சீல விரத
மாட்சியினால் தரிசனன்" (என்றும் பிரதிபேதம் உண்டு).

காட்சியில் - ஸம்யக் தரிசனத்தில், திண்ணனாய் - நழுவாமல் ஸ்திரமாய் நிற்பவனாய், சீல விரதம் - அணுவிரதம், குணவிரதம், சிக்ஷாவிரதம் முதலிய விரதானுஷ்டானங்கள், இலான் - இல்லாதவன், தரிசனன் - தரிசனிகன் என்னும் முதல் நிலை ஶ்ராவகன், ஆம் - ஆவான். (எ—று).

விரதங்களை அனுஷ்டியாது ஸம்யக் தரிசனத்தை மாத்திரம் உடையவன் தரிசனிகன் என்ற முதல் நிலை ஶ்ராவகன் ஆவான். அவன் அஸம்யத ஸம்யக்த்ரஷ்டி என்றும் சொல்லப்படுவான்.

"விரத மிலரேனினும் காட்சி யுடையார்" என்று இந்நூலின் கண்ணே 47-வது வெண்பாவிற் கூறியதும் அவனையே என்க.

"காட்சியேனும் பெயர் கதிர்விளக் கேற்றிய
மாட்சியுடையார் வதமில ராயினும்."

(சூளாமணி, துறவு—178.) என்றதனாலும் அறிக.

### விரதிகன் நிலை

**163. வதமைந்துஞ் சீலமோ ரேழுந் தரித்தான்
விதியால் விரதி யெனல்.**

வதமைந்தும் - (ஸம்யக்தரிசன பூர்வகம்) அணுவிரதங்கள் ஐந்தையும், சீலம் ஓரேழும் - (குணவிரதம் மூன்றும் சிக்ஷாவிரதம் நான்கும் ஆகிய) ஏழு சீல விரதங்களையும், தரித்தான் - (ஆகிய இப்பன்னிரண்டு விரதங்களையும்) மேற்கொண்டு ஒழுகுபவன், விதியால் - சாஸ்திரத்தின்படி, விரதி எனல் - விரதிகன் என்னும் இரண்டாம் நிலை ஶ்ராவகன் என்றவாறு. (எ—று).

ஸம்மியக் தரிசனத்தை முன்னதாக உடையவனாகி அணுவிரதம், குணவிரதம், சிக்ஷாவிரதங்களைக் கொண்டு நிகழ்பவன் விரதிகன் என்ற இரண்டாம் நிலை சிராவகன் ஆவன். அணுவிரதம், குணவிரதம், சிக்ஷாவிரதங்களைப் பற்றி முன்னமே கூறப்பட்டது.

### சாமாயிகன் நிலை

**164. எல்லியுங் காலையு மேத்தி நியமங்கள்
வல்லியான் சாமா யிகன்.**

எல்லியும் காலையும் - இரவிலும் பகலிலும் குறிப்பிட்ட நேரம் வரையில், ஏத்தி - ஸாமாயிக ஸ்தோத்திரம், ஜபம் முதலியவைகளைச்செய்து, நியமங்கள் — இவ்வாறு பிரதிதினமும் நியமம்

செய்து நிகழ்வதில், வல்லியான் - வல்லமையுள்ளவன், சாமாயிகன் - ஸாமாயிகன் என்னும் மூன்றும் நிலை ஶ்ராவகன் ஆவன்.

இராப்பகலில் குறிப்பிட்ட காலம் வரையில் நாள்தோறும் ஸாமாயிகம் செய்தல் என்னும் நியமம் உடையவனாகி அவ்வாறே நிகழ்பவன் ஸாமாயிகன் என்னும் மூன்றும் நிலை ஶ்ராவகன் எனப்படுவான்.

### புரோஷதோபவாஸன் நிலை

**165.** ஒருதிங்க ணால்வகைப் பவ்வமே நோன்பு
புரிபவன் போசத னும்.

ஒரு திங்கள் - ஒரு மாதத்தில், நால்வகை பவ்வம் - பூர்வபக்ஷ அஷ்டமி, சதுர்தசி—2, அபரபக்ஷ அஷ்டமி, சதுர்தசி—2, ஆக நான்கு காலங்களில் (திதிகளில்), நோன்பு - உபவாஸத்தை, புரிபவன் - விரும்பி அனுஷ்டிக்கிறவன், போசதனும் - புரோஷதோபவாஸன் என்னும் நான்காம் நிலை ஶ்ராவகன் ஆவன். (எ—று).

அஷ்டமி, சதுர்தசிகளில் உபவாஸ விரதத்தினை உடையான் புரோஷதோபவாஸன் என்னும் நான்காவது நிலை சிராவகன் என்க.

### ஸச்சித்தவிரதி நிலை

**166.** பழமிலை காயும் பசியத் துறந்தா
னழிவகன்ற வச்சித்த னும்.

பசிய - பசுமையாகிய, பழம் - பழங்களையும், இலை - இலைகளையும், காயும் - காய்களையும், துறந்தான் - சாப்பிடுவதில்லை என்ற நியமம் உள்ளவன், அழிவகன்ற - குற்றமற்ற, அச்சித்தனும் - (அச்சித்தன்) ஸச்சித்த விரதி என்ற ஐந்தாவது நிலை ஶ்ராவகன் ஆவான். (எ—று).

பசிய பழம்:— நன்றாய்ப் (பக்குவமாய்ப்) பழுக்காத செங்காய். பச்சை வஸ்துக்களைப் புசிப்பதில்லை என்று நீக்கியவன் ஸச்சித்த விரதி என்ற ஐந்தாம் நிலை சிராவகன் என்க.

### இராத்திரி அபுக்தன் நிலை.

**167.** இருளின்க ணால்வகை யூணுந் துறந்தா
னிராத்திரிய புக்த னெனல்.

இருளின் கண் - இரவில், நால்வகை ஊணும் - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்னும் நான்குவகை ஆஹாரங்

களையும், துறந்தான் - நீக்கி நிகழ்பவன், இராத்திரி அபுக்தன் எனல் - இராத்திரியில் உண்ணுதான் என்னும் ஆருவது நிலை ப்ராவகன் ஆவன். (எ—று).

இரவில் நான்குவகை ஆஹாரங்களையும் புசிப்பதில்லை என்று விட்டவன் இராத்திரி அபுக்தன் என்ற ஆறும் நிலை சிராவகன் ஆவன்.

### பிரம்மசர்ய நிலை

**168.** உடம்பினை யுள்ளவா ரோர்ந்துணர்ந்து காம
மடங்கியான் பம்ம னெனல்.

உடம்பினை - சரீரத்தை, உள்ளவாறு - உள்ளது உள்ள படியே, ஓர்ந்து - அசுசி என்பதை அறிந்து, உணர்ந்து - அதனுல் வரும் இன்பம் சிறிதும் வாஸ்தவமான இன்பம் ஆகாதென்றறிந்து, காமம் - காம பரிணாமத்தினின்றும் (ஸ்திரீபோக வாஞ்சையின் நின்றும்), அடங்கியான் - அடங்கியவன் (அதாவது, காமத்தை அல்லது ஸ்த்ரீபோக வாஞ்சையைத் துறந்தவன்), பம்மன் எனல் - பிரம்மசாரி என்ற ஏழாவது நிலை ப்ராவகன் ஆவான். (எ—று).

உடம்பின் அசுசித்தன்மையை உணர்ந்து ஸ்திரீபோக வாஞ்சையை முற்றுந் துறந்தவன் பிரம்மசாரி என்ற ஏழாம் நிலை சிராவகன் ஆவன்.

உடம்பின்றன்மை அசுசி என்றதற்கு:—

"................................... துன்னும்
புழுப்பிண்ட மாகிப் புறஞ்செய்யுந் தூய்மை
விழுப்பொருளை வீறழிப்ப தாகி—அழுக்கொழுத
மொன்பது வாயிற்று முன்தாம்பை மற்றிதனை
யின்பமதா மென்று திழித்துவரீமின்" (திருக்கலம்பகம்—76).

"என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சி மெத்திப்
புன்புறந் தோலின் மூடி யழுக்கொடு புழுக்கள் சோரு
மொன்பது வாயிற் றுய வூன்பயில் குரம்பை தன்மே
லன்பறு மாந்தர் கண்டா யறிவிறுந் சிறிய நீரார்." (மே. ம. பு-116).

"ஒழுகிய நடையு நீரு முதலகை யிகப்ப வூறு
மழுகலிவ் வள்ளல் யாக்கை யகம் புறமாயிற்றாயிற்
கழுகொடு கவருங் காக்கை கை தடிகொண்டு காத்து
மழுதள சுழலுமன்றே வாயிராத்காதி மாதோ"

(சூளாமணி, துறவு—11.) என்பவற்ருல் உணர்க

## அநாரம்பன் நிலை

**169. கொலைவரு மாரம்பஞ் செய்தலின் மீண்டான்
அலகிலநா ரம்ப னெனல்.**

*அலகில் - மிகுதியினால் (எண்ணிக்கையின்றி), கொலைவரும் - ஹிம்ஸாதோஷம் ஸம்பவிப்பனவாகிய (ஹிம்ஸை ஏற்படுவதற்கு ஹேதுவான), ஆரம்பம் செய்தலின் - கிருஷி (உழவு), வாணிஜ்யம் (வியாபாரம்) முதலிய காரியங்களைச் செய்வதினின்றும், மீண்டான் - மீண்டவன், அதாவது, (அத்தகைய காரியங்கள் அனைத்தினையும் செய்யாதுவிட்டவன்), அநாரம்பன் எனல் - அநாரம்பன் என்னும் எட்டாம் நிலை ஸ்ராவகன் ஆவான். (எ—று).*

ஹிம்ஸைக்குக் காரணமாகிய, உழவு, வரைவு, வாள், வித்யா, வாணிஜ்யம், சில்பம் என்னும் ஆறுவகைத் தொழில்களையும் விட்டவன் அநாரம்பன் என்னும் எட்டாவது நிலை ச்ராவகன் என்க. மேற் கூறிய ஒவ்வொரு தொழிலும் சிறிதாகிலும் ஜீவஹிம்ஸையின்றிக் கூடாதாகையால் அறுவகைத் தொழிலிற்கும் பொதுவாய்க் "கொலைவரு மாரம்பம்" என்றார்.

"நஹ்யாரம்போ விஹிம்ஸந:" (க்ஷத்ரசூடாமணி).
அதாவது ஹிம்ஸையின் நீங்கிய ஆரம்பமில்லை என்றவாறு.

## அபரிக்கிரகன் நிலை

**170. இருதொடர்ப் பாட்டின்க ணூக்க மறுத்தா
னுரிய னபரிக்ர கன்.**

*இருதொடர்ப் பாட்டின் கண் - மனை முதலிய பாஹ்யப் பரிக்கிரஹங்களிடத்தும், மித்தியாத்வம் முதலிய அப்பியந்தரப் பரிக்கிரஹங்களிடத்தும், ஊக்கம் - ஏற்பட்ட முயற்சியை, அறுத்தான் - நீக்கியவன், அபரிக்கிரஹன் - அபரிக்கிரஹன் என்னும் ஒன்பதாவது நிலை ஸ்ராவகன் என, உரியன் - சொல்ல உரிமை உடையவன் ஆவன். (எ—று).*

பத்துவகையான பாஹ்யப் பரிக்கிரஹங்களிலும், பதினான்கு வகையான அப்பியந்தரப் பரிக்கிரஹங்களிலும் பரிணாமத்தைச் செல்லாமல் தடுத்து தர்மத்தில் பரிணமிக்கின்றவன் அபரிக்கிரஹன் என்ற ஒன்பதாவது நிலை ச்ராவகன் ஆவான்.

### அனனுமதன் நிலை

**171.** யாது முடன்பாடு வாழ்க்கைக்கண் ணிலவன்
மாசி லனனு மதன்.

வாழ்க்கைக் கண் - இல்வாழ்க்கையில் (லௌகிக ஸம்பந்தமான கிரஹ காரியங்களில்), யாதும் - சிறிதும், உடன்பாடு - உடன் படுதல் (அனுமோதம் செய்தல்), இலவன் - இல்லாதவன், மாசில் - குற்றமற்ற, அனனுமதன் - அனனுமதன் அல்லது அனுமத விரதி என்னும் பத்தாம் நிலை ஶ்ராவகன் ஆவன். (எ—று).

முன்னமே பரிக்கிரஹங்களில் வாஞ்சையிலனுகி பிறரால் நடத்தப் படும் கிருஷி முதலிய காரியங்களில் அனுமோதமும் (அதாவது, உடன் படுதலும்) இல்லாதவன் அனனுமதன் என்ற பத்தாவது நிலை ச்ராவகன் ஆவான்.

### உத்திஷ்ட பிண்ட விரதி நிலை

**172.** மனைதுறந்து மாதவர் தாளடைந்து நோற்று
வினையறுப்பா னுத்திட்ட னும்.

மனை - வீடு முதலிய பரிக்கிரகங்களை, துறந்து - நீக்கி, மாதவர் தாளடைந்து - மஹாதபஸினைச் செய்யும் முனிவரின் பாதத்தை அடைந்து, நோற்று - மேற்கூறிய விரதங்கள் அனைத்தினையும் கொண்டு பரிபாலித்து, வினை அறுப்பான் - கருமங்களைக்கெடுக்க முயல்கின்றவன், உத்திட்டனும் - உத்திட்ட பிண்ட விரதி என்னும் பதினோராவது நிலை ஶ்ராவகன் ஆவான், (எ—று).

'மனை துறந்து' என்றதனால் மனையின் ஸம்பந்தமாகிய புத்திரர், மித்திரர், களத்திரம், தனம், தான்யம் முதலியவைகளையும் துறந்து என்றவாறு. தன் மனை முதலிய பரிக்கிரஹங்களை எல்லாம் விட்டு நீக்கி முனிவர்பாற் சென்று மௌனமும் ஏகவஸ்திரதாரியும் ஆகி முற்கூறிய ச்ராவகர்களுக்கு உரிய சகல விரதங்களையும் மேற்கொண்டு ஒழுகுபவனுகித் தன்னைக்குறித்துச்செய்த ஆஹாரத்தைப் புசியாதவனுகி மஹாமுனிவர்களைப்போல பிக்ஷையின்மூலம் பிறர்மனையில் கிடைத்த ஆஹாரத்தை ஆகமவிதியின்படி புசிப்பவனுகி ஞான, தியானங்களில் ஸதா வர்த்திக்கின்றவன் உத்திட்ட பிண்ட விரதி என்ற பதினோராவது நிலை ச்ராவகன் ஆவான். "உக்கிட்டனும்" என்று பாடங்கொள்ளின் உத்திட்ட பிண்ட விரதி என்ற உத்கிருஷ்டமான பதினோராவது நிலை ச்ராவகன் என்று கொள்ள அமையும். இவன் ஆகமத்தில் க்ஷுல்லகன் என்று கூறப்படுவான்.

“வள்ளிய மலருஞ் சாந்து மணிபுனை கலனு மின்றாய்
வெள்ளிய துடையோன் றாகி வென்றவ நுருவ மேலார்
கொள்ளிய லமைந்த கோலக் குல்லக வேடங் கொண்ட
வள்ளலு மடந்தை தானும் வளநகர் மருளப் புக்கார்.”
(யசோதர காவியம். 1—23).

“ ஸங்காத₄ஸோபாநநிலய: விநிவ்ருத்தஸங்க₃: ।
ஸ்ரீநவக₃ணகயமோக்ஷிதவ: க்ருபாஜ்ஞ: ॥”
(ஸ்ரீத வீதராம ஸ்தவ:) என்றதாலும் அறிக.

## நிலைகளின் இயல்.

**173. முன்னைக் குணத்தொடு தந்தங் குணமுடைமை
பன்னிய தான மெனல்.**

*பன்னிய - கூறப்பட்ட, தானம் - இப்பதினோரு நிலைகளும் (ஸ்தானங்களும்), முன்னைக் குணத்தொடு - முன் நிலையில் கூறப் பட்ட குணங்களோடு, தத்தம் குணம் - அந்த அந்த நிலைக்குக் கூறப்பட்ட குணங்களையும், உடைமை - உடைத்தாயிருத்தலாம், எனல் - என்று கொள்ளவேண்டும். (எ—று).*

தானம்—நிலை, ஸ்தானம் என்ற வடமொழித் திரிபு. இப்பதினோரு நிலைகளும் ஒவ்வொன்றும் முன் நிலைக்குக் கூறப்பட்ட குணங்களுடன் கூடி, அந்த அந்த நிலைக்குக் கூறப்பட்ட குணங்களையும் உடைத்தாதல் என்க. அதாவது, இரண்டாவது நிலையில், முதல் நிலைக்குக் கூறிய குணமும் இருந்தல் வேண்டும். இவ்வாறே மற்றவைக்கும் கொள்க. முதல் நிலைக்குக் கூறிய குணம் இல்லாமல் இரண்டாவது நிலை கூடாது என்க. ஆதலின் பதினோராவது நிலையில் அதற்கு முந்திய ஒன்று முதல் பத்து நிலைகளுக்குரிய குணங்களும் அமைந்திருத்தல் வேண்டும். முன் நிலை இல்லையேல் பின் நிலையும் இல்லை என்க, உதாரணமாக, அரண் மனை, கோவில் முதலியவற்றிற்கு முதல் நிலையாகிய அஸ்திவாரம் இன்றி இரண்டாவது நிலை இல்லாதவாறு போலென்க. அதனாலேயே இவற்றையும் இங்கு “நிலை” என்று கூறியதென்று உணர்க.

## நூலினை உணரும் வகை

**174. பாவம் பகையொடு சுற்ற மிவைசுருக்கி
மோவமோ டின்றி யுணர்.**

*பாவம் - பாபகாரியங்களையும், பகையொடு - பகைமையையும், சுற்றம் - பந்துக்களின் பற்றையும், இவை - இவைகளை, சுருக்கி - கிரம*

மாய்க் குறைத்து (நீக்கி), மோவமோடின்றி - அக்ஞானத்தையும் (மயக்கத்தையும்)இல்லாமல் நீக்கி நன் ஞானத்துடன் கூடி இந் நூலில் கூறிய விஷயங்களை (ஆகமங்களை), உணர் - ஆராய்ந்து அறிவாயாக. (எ—று).

மோவம்—மோகம், மயக்கம், அக்ஞானம். பாபகாரியங்களும், பகைமையும், சுற்றமும், மோஹமும் ஆகமாப்பியாஸத்திற்கு இடையூரு வனவாகையினுல், அவையின்றி நடுநிலைமையுடன் ஒருங்குபட்ட உய ரிய அறிவினுல் அறியுமிடத்திற்றுன் உண்மை உணரப்படுமாதலால் இங் ஙனம் கூறினர்.

"ஸாஸ்த்ரம் ஸம்யக்ஸமப்யா ஸம்ஸ்க்ருதம்" என்றதனு லும் அறிக.

## நூற் சிறப்பு

**175.** அருங்கலச் செப்பினை யாற்றத் தெளிந்தா
ரொருங்கடையு மாண்பு திரு.

அருங்கலச் செப்பினை - அருங்கலச் செப்பு என்ற பெயரு டைய இந்நூலை, ஆற்ற - மிகவும், தெளிந்தார் - ஆராய்ந்து (அப் பியசித்து) தெளிந்தவர்களுக்கு, மாண்பு - மாட்சிமை உடைய, திரு - தேவ, மானவ, மோக்ஷ ஸாம்ராஜ்யம், ஒருங்கு — ஒருங்கே, அடையும் - வந்து சேரும். (எ—று).

இந்நூலை அப்பியஸித்தவர்களுக்கு, தேவ ஸாம்ராஜ்யமாகிய இந் திர பதவியும், மானவ ஸாம்ராஜ்யமாகிய சக்ரவர்த்தித்வமும், மோக்ஷ ஸாம்ராஜ்யமாகிய ஸித்தபரமேஷ்டித்வமும் முறையே அடையும் என்ற வாறு. மாண்புதிரு—பெருமையுள்ள மோக்ஷ ஐஸ்வரியம் எனவும் அமையும்.

**176.** வந்தித்தாய்ந் தோதினுஞ் சொல்லினுங் கேட்பினும்
வெந்து வினையும் விடும்.

வந்தித்து - (அருங்கலச் செப்பு என்னும் இந்நூலை) பூஜித்து, ஆய்ந்து - ஆராய்ந்து, ஓதினும் - அத்யயனம்செய்தாலும், சொல்லி னும் - பிறருக்குச் சொல்லினாலும், கேட்பினும் - பிறர் படிக்கத் தான் கேட்டாலும், வினையும் - அவர்களிடம் பந்தித்துள்ள எத் தகைய கடுமையான வினைகளும், வெந்து - எரிந்து, விடும் - விட்டு நீங்கும். (எ—று).

இந்நூலை அத்யயனம் செய்வதினாலும், சொல்லுவதினாலும், கேட்ப தினாலும் தீவினைகள் அவர்களை விட்டு நீங்குவனவாகும்.

## நூற்பயன்

**177.** தப்பினின் மீளாக் கடுந்தவ நீருற்ற
வுப்பினின் மாய்ந்து கெடும்.

*தப்பினில் - அதிசாரங்களில், மீளா - மீண்டு, கடும் - கடுமை யாகிய, தவம் - ஒருவன் தவத்தை (விரதங்களை அனுஷ்டித்து நடந்தால்) அவனுடைய தீவினைகள், நீர் - ஜலத்தில், உற்ற பொருந் திய, உப்பினில் - உப்பைப்போல, மாய்ந்து - ஒன்றுமில்லாமல் மறைந்து, கெடும் - கெட்டுப்போகும். (எ—று).*

*இதனால், இந்நூலிற்கூறிய விரதானுஷ்டானங்களை அதிசாரமின்றி அனுஷ்டித்தால் ஜலத்தினில் உப்புக் கரைந்து மறைந்து விடுவது போன்று தீவினைகள் கெடும் என்றவாறு.*

**178.** காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி
னாமங் கெடக்கெடும் நோய்.

*காமம் - ஆசை (இராகம்), வெகுளி - கோபம் (த்வேஷம்), மயக்கம் - பிரேமை (மோஹம்), இவை மூன்றின் - இவை மூன்றி னுடைய, நாமம் - பெயர், கெட - கெட்டுவிட, நோய் - துன்பத் திற்கு ஹேதுவாகிய ஸம்ஸாரம், கெடும் - கெட்டுவிடும். (எ—று).*

இராகம், துவேஷம் மோஹமே ஸம்ஸார சுழற்சிக்குக் காரணமா தலால் இந்நூலை அப்பியஸித்தவர்கள் அவற்றை அவசியம் துறத்தல் வேண்டும் என்பது கருத்து. இவ்வெண்பா திருக்குறளினும் கூறப்பட்டு உள்ளது.

**179.** முத்தி நெறிகாட்டும் முன்னறியா தார்க்கெல்லாஞ்
சித்தி யருங்கலச் செப்பு.

*சித்தி - இஷ்டகாரியங்களை எல்லாம் சித்திக்கவல்ல, அருங் கலச் செப்பு - அருங்கலச் செப்பு என்னும் இந்நூல், முன்னறியா தார்க்கு எல்லாம் - ஸம்ஸாரத்திலழுந்தி மோக்ஷமார்க்கம் இத்தன் மையது என்று உணராமல் அக்ஞானத்துடன் இருப்பவர்களுக்கு எல்லாம், முத்திநெறி - மோக்ஷமார்க்கம் இத்தகையதென்று, காட்டும் - காண்பிக்கும். (எ—று).*

இந்நூல் மோக்ஷமார்க்கம் இத்தகையது என விளக்கும் அருமை வாய்ந்தது என்க.

**180.** தீரா வினைதீர்க்குஞ் சித்திபத முண்டாக்கும்
பாரா யருங்கலச் செப்பு.

அருங்கலச் செப்பு - அருங்கலச் செப்பு என்னும் இந்நூல், தீராவினை - (அப்பியஸிப்பவரிடத்துள்ள) எளிதில் நீங்குதற்கரிய தீவினைகளை, தீர்க்கும் - கெடுக்கும், சித்திபதம் - (பின்னர்)மோக்ஷ பதத்தையும், உண்டாக்கும் - உண்டுபண்ணும், (ஆதலின்), பாராய் - இந்நூலை அவசியம் ஆராய்ந்தறிந்து அதன்படி நடப்பாயாக.

தீவினைகளைப் போக்கி முக்தியினை எய்துவிக்கவல்லதாகிய இந்நூலை கசடறக் கற்று அதன்படி நிற்றல் அவசியம் என்றவாறு.

**181.** நச்சர வணிநிழல் பச்சைமா மலைதனை
நிச்சலு நினைப்பவற் கச்ச மில்லையே.

நச்சரவு — சர்ப்பத்தினுடைய, அணிநிழல் — அழகிய பணா முடியின் நீழலில் வீற்றிருக்கும், பச்சைமாமலைதனை - பச்சை மலைபோன்ற உருவத்தையுடைய ஸ்ரீ பார்சுவ தீர்த்தங்கரரை, நிச்சலும் - நாள்தோறும், நினைப்பவர்க்கு - குணஸ்மரணம் செய்து ஸ்துதிப்பவர்களுக்கு, அச்சம் - இந்த ஸம்ஸாரத்தில் ஏற்படும் பயங்கள் (துன்பங்கள்), இல்லை - இல்லை. (எ—று).

ஸ்ரீ பார்சுவ தீர்த்தங்கரரை நாடோறும் தியானிப்பவர்கட்குத் துன்பம் நீங்கி, இன்பம் உண்டாகும் என்றவாறு.

சுபமஸ்து.

அருங்கலச் செப்பு முற்றிற்று.



அருங்கலச் செப்பு

# செய்யுள் அகராதி.

# அருங்கலச் செப்பு

## செய்யுள் அகராதி (துடர்ச்சி)




# இரண்டாம் பாகம்—அநுபந்தம்.

ஸ்ராவகாசார

# நீதிக் கதைகள்

ஸகலகீர்த்தி ஆசாரியார் அவர்களால்
இயற்றப்பட்ட
பிரஸ்நோத்தர ச்ராவகாசாரம்
என்னும் வடமொழி நூலிலிருந்து
வீடூர், ஸ்ரீ A. தர்மஸாம்ராஜ்ய நயினார் அவர்களால்
தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,

கும்பகோணம்
டவுன் ஹைஸ்கூல் உபாத்தியாயர்,
S. ஜயராமையா அவர்களால்
சுருக்கி எழுதப்பட்டு, பதிப்பிக்கப்பட்டன.

卐

1941.

# ஸ்ராவகாசார நீதிக் கதைகள்

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 30 | காமாதுரனாய் | காமாதுரனாய் |
| 11 | 17 | சுமத்திரர் | ஸௌமித்திரர் |
| 12 | 19 | புரந்தன் | புரந்தரன் |
| 24 | 5 | ஜினதத்தன் | ஜயகுமாரன் |

ஸ்ராவகாசார

# நீதிக் கதைகளின் அட்டவணை.

## I ஸம்யக் தரிசனத்தின் எட்டு அங்கங்களுக்கு உதாரணம்.



## II அஹிம்ஸை அணுவிரதங்களால் மேன்மையுற்றவர்கள்.



## III அஹிம்ஸை முதலிய விரதமில்லாது கேடடைந்தவர்கள்.



## IV தான விசேஷத்தால் மேன்மையடைந்தவர்கள்.



## V பக்தியால் சிறப்பினையடைந்தது.



——X——

# ஶ்ராவகாசார நீதிக் கதைகள்

## அரும்பொருள் விளக்க அகராதி

[எண்கள் பக்கங்களைக் குறிக்கின்றன.]

அக்கிருத்திரிமம் (2)—ஒருவராலும் செய்யப்படாதது, இயற்கையாயுள்ளது.

அணுவிரதம் (19) — இல்லறத்தார் அனுஸரிக்க வேண்டிய விரதங்களில் ஒன்று.

அண்மையில் (12) — அருகில், சமீபத்தில்.

அமரன் (23) — தேவன்.

அமர சுகம் (4) — தேவசுகம்.

அமூட திருஷ்டித்வம் (6) — அன்னிய சமயத்தாரை மேல் என்று கருதுவது.

அவதிக்ஞானி (14) — முக்காலத்திலும் நிகழ்பவைகளை அறியும் சக்தியுடையவர்.

அலகு (29)—பட்சிகளின் மூக்கு.

அஷ்ட மகாப் பிராதிஹார்யங்கள் (36)—குடை, சாமரை, சிம்மாஸனம் முதலிய சிறப்புக்கள்.

அஸ்தேயம் (20) — திருடாமை, (களவாடாமை).

அஹிம்ஸை (17)—கொல்லாமை.

ஆகமம் (37) — அருக பரமன் அருளிய சாஸ்திரம்.

ஆகாஸ காமினி (1) — ஆகாயத்தில் எடுத்துச் செல்லவல்ல ஒரு தேவதை.

ஆலிங்கனம் (23) —கட்டியணைத்தல்.

ஆஷ்டான்ஹிகம் (3) —அஷ்டமி முதல் பௌர்ணமி முடிய எட்டு நாட்கள்.

உசாவினன் (21) — விசாரித்தான், கேட்டான்.

உச்சாரணம் (2) — உச்சரித்தல்.

உத்தம போக பூமி (33) — மேருவின் வடக்கிலும் தெற்கிலுமுள்ள போக பூமிகளில் மேலானது.

உபகூஹனம் (8) — தர்மிகளின் தோஷங்களைப் பிரசம்சிக்காது மறைப்பது.

உன்மத்தன் (20) — பைத்தியம்.

ஐயமுற்று (21)— சந்தேகித்து.

கடற்காலம் (4) —பத்து கோடா கோடி பல்லங்கள் கொண்ட கால அளவு.

கமண்டலம் (6) — விரதிகள் சௌசத்திற்குத் தண்ணீர் வைத்துக் கொள்ளும் பாத்திரம் (சௌசோபகரணம்).

காயோத்ஸர்க்கம் (15) — நின்ற நிலையில் நின்று தியானித்தல்.

கால வரையறை (3)—காலத்தை நியமம் (அளவு) செய்தல்.

காலாந்தரம் (9)—முடிவு காலம்.

குமார்க்கம் (8) — கெட்ட நடவடிக்கை.

சகஸ்ரார கல்பம் (4) —ஸ்வர்க்க லோகத்தின் பகுதியான 16 கல்பங்களில் 12-வது கல்பம்.

சஞ்சலம் (2) — கலக்கம்.

சமவஸரணம் (39) — அருகபரமன் வீற்றிருக்கத் தேவ நிர்மிதமான சபா மண்டபம் (கோவில்.)

சம்ஸார சரீர விரக்தி (37) — சம்ஸாரம் (குடும்பம்), சரீரம் முதலியவற்றை வெறுப்பது.

சம்யக்த்வ யோகம் (4) –நற்காட்சியின் சேர்க்கை.

சர்வௌஷதி ரித்தி (37)—எல்லா ஔஷதிகளின் குணங்களும் பொருந்திய ரித்தி.

சாரண முனிவர் (2) — சஞ்சரிக்கின்ற—நினைத்த இடத்துக்குச் செல்லக்கூடிய ரித்தியையடைந்த தபோதனர்.

சலனம் (16) — அசைவு.

சீல மகாத்மியம் (4) — பிரம்மசர்ய விரதத்தின் மகிமை.

சீல விரதம் (23) — பிரம்மசர்ய விரதம்.

சீலாசாரம் (30) — பிரம்மசர்ய நடத்தை.

செப்பு (26)—செம்புடம், டப்பி, கரண்டகம்.

சேஷ்டை (27) — தொந்தரவு, உபஸர்க்கம்.

ஞானதிருஷ்டி (23) — முக்காலத்து நிகழ்ச்சிகளையும் அறிய வல்லவர்.

தர்மோபதேசம் (10) — தர்மத்தைப் போதித்தல்.

தளவரன் (27) — காவலாளி, படைத் தலைவன்.

தனயன் (21) — பிள்ளை.

தீக்ஷை (5) — சன்னியாசத்தை மேற்கொள்ளுதல்.

நங்கை (4) — பெண், ஸ்திரீ.

நந்தீஸ்வரம் (13)—நந்தீஸ்வரத்வீபம் என்னுமிடத்தில் பூஜை நடக்கும் காலம்.

நரமேத யாகம் (16)—மனிதனைக் கொன்று செய்யும் யாகம்.

நிச்சங்கை (1) — ஐயமின்மை, சந்தேகியாதிருத்தல்.

நிர்ணயம் (19) — நிச்சயம்.

நிர்விஸிகித்ஸை (5) — தார்மிகளின் சரீரத்தில் காணப்பட்ட ஏதேனும்குற்றங்களைக் (மாசுகளை, ரோகங்களைக்) கண்டு அருவருப்படையாதிருத்தல்.

நிஷ்காங்க்ஷை (3)—ஸ்திரீ போக வாஞ்சையில்லாதிருத்தல்.

நிஷ்டை (11) — தியானம் செய்தல்.

பஞ்ச நமஸ்கார மந்திரம் (2) — அருங்கலச் செப்பு 67-ம் பக்கம் பார்க்க.

பரபுருஷகமனம் (22)—பிற புருஷர்களை இச்சிப்பது.

பரிபார்லகன் (5) — அரசன், பிரஜைகளைக் காப்பாற்றுகிறவன்.

பரிமித பரிக்கிரஹம் (23) — க்ஷேத்ரம் முதலிய வஸ்துக்களை வேண்டாது வெறுத்தல்.

பரிவிராஜக முனிவர் (38) — அன்னிய சமயத் துறவி.

பர்ண லக்வி (3)--இலை விழுவது போல் மெல்ல விழச்செய்வதாகிய ஒரு வித்தை.

பல்லிங்காசனம் (26) — ஆஸன பேதங்களில் ஒன்று. உட்கார்ந்த நிலையில் தியானிப்பது.

பவனி (13) — ஊர்கோலம்.

பறிமுதல் செய்து (27) — பிடுங்கி.

பாகுடப் பொருள் (35) — மரியாதை செய்யப்பட்ட (இனாமாக அளிக்கப்பட்ட) பொருள்.

பாண்டாகாரம் (26) — பண்டங்கள் வைக்குமிடம், பொக்கிஷம், நிதியறை.

பிரக்ஞப்தி வித்தை (12)— 500 மகா வித்தைகளில் ஒன்று.
பிரசம்சை (5) — பலரறியக் கூறுதல்.
பிரம்மசர்யம் (20) — ஸ்திரீ சேவை செய்யாதிருத்தல்.
பிரலாபித்துக்கொண்டு (16)— தன் மனத்துள் சொல்லிக் கொண்டு.
பிரேமை (39) — பிரியம், ஆசை.
புரதேவதை (22) — நகர்த் தேவதை.
புருஷனின் உடன்பிறந்தாள் (22) — நாத்தனார்.
பூஜாபரிணமம் (40) — பூஜித்தலின் மேல் எண்ணம் உடைமை.
பூஜானுராகம் (39) — பூஜையின் மேல் ஆர்வம்.
பேற்றினையும் (4) — இலாபத்தையும்.
பொட்டையன் (29) — குருடன், கண் தெரியாதவன்.
பொய்க்காது (13) — பொய் ஆகாது.
மகர்த்திக தேவன் (38) — முக்கியமான தேவன்.
மட்டற்ற (13) — குறைவில்லாத (மிகுதியான).
மார்க்கப்பிரபாவனை (11)— தருமத்தை சகலருமறிய வெளியிடல்.
முக்குடை (8) — சந்திராதித்யம் நித்ய விநோதம், சகல பாஜனம் என்னும் மூன்று குடை.
ரதி காலம் (33) — போகஞ் செய்யும் காலம்.
வணிகன் (25) — வியாபாரி.
வனபாலகன் (39) — காட்டைக் காப்பவன்.
லாஞ்சனம் (40) — குறி, அடையாளம்.
வாத்ஸல்லியம் (14) — தர்மிகளை விருப்பத்தோடு அடைதல்.
வாளா (7) — பேசாமல், சும்மா.
விக்ரியாரித்தி (16)— சரீரத்தைச் சிறிது பெரிதாக்கும் ரித்தி.
விசிஷ்டான்னம் (33) — விசேஷமான நல்ல அன்னம்.
வித்தியாதரன் (6)—விஞ்சையன், வெள்ளிமலை வாசி.
விமானரூடன் (3) — விமானத்தில் ஏறியவன்.
விருத்தாந்தம் (7) வரலாறு.
வேசி (4) — வேசைத் தொழில் செய்பவள், தேவடியாள்.
ஸத்ஸம்ஸர்க்கம் (21) — நல்ல பெரியோர்கள், தபஸிகள் கூட்டுறவு.
ஸௌதர்ம கல்பம் (39) — ஸ்வர்க்க லோகத்துப் பகுதியான 16 கல்பங்களுள் முதல் கல்ப லோகம்.
ஸ்தம்பித்து 15)—ஆட்ட அசைக்க முடியாமல் விறைத்து.
ஸ்திதிகரணம் (9) — தருமத்தினின்றும் நழுகினவரைத் திருத்தி மறுபடியும் தருமத்தில் நிறுத்துவது.
ஸ்ரவணம் (21) — சத்விஷயங்களைக் கேட்டல்.
ஸ்ருதகேவலி (37)- கேவலக்ஞானியினால் தெரிவித்த விஷயங்களை ஸ்ருத (புராணங்கள்) ஞானத்தால் அறிந்தவர்.
ஜாதிஸ்மரணை (37) —முற்பிறப்பை அறியும் அறிவு.
ஜினபவனம், ஜினசைத்யாலயம் (22) - ஸ்ரீ அருகபரமன் கோவில்.

# ஸ்ராவகாசார நீதிக் கதைகள்.



அஞ்சனசோரன்
ஆகாசகாமினி வித்தையைச் சாதிக்கும் காட்சி.
**1-ம் கதை.**

ஓம்.




ஸ்ரீ ஜிநாய நம :|

## ஸ்ராவகாசார

# நீதிக் கதைகள்.

---

நிச்சங்கை என்னும் அங்கத்திற்கு உதாரணமான

## 1. அஞ்சன சோரன் கதை

மகத தேசத்து, இராஜக்கிரஹம் என்னும் நகரவாசியாகிய ஜினதத்த ஸ்ரேஷ்டி என்னும் ஸ்ராவகன், தபத்தினைச்செய்து, வித்யுத்பிரபன் என்ற தேவன்பால் ஆகாசகாமினி வித்தையையும், அதனைச் சாதிக்கவேண்டிய முறையினையும் கற்றுத் தினந் தோறும் மேரு முதலிய பர்வதங்களின் மேலுள்ள அக்ருத்திரிம ஜினசைத்யாலயங்களுக்குச் சென்று தரிசித்து வரலாயினன்.

அதனையறிந்து, அவ்வூரிலேயே வதிந்துவந்த சோமதத்தன் என்ற புஷ்பத்தோட்டக்காரன், ஸ்ரேஷ்டியையணுகி, தனக்கும் அவ்வித்தையினைக் கற்றுக்கொடுத்தால், தானும் புஷ்பங்களை எடுத்துக்கொண்டு அவ்விடம் தரிசிக்க வரக்கூடுமென்று மிகப்ரீதியுடன் ஸ்ரேஷ்டியை மன்றாடிக் கேட்டான். ஸ்ரேஷ்டி, சோமதத்தனுக்கும் அவ்வித்தையைச் சாதிக்கும் முறையைப் போதித்தான்.

அதனைச்சாதிக்க வெண்ணிச் சோமதத்தனும், ஒருகிருஷ்ண பக்ஷத்து சதுர்தசியன்று உபவாசமிருந்து, அன்றிரவு அவ்வூர் மயானத்திலிருந்த பெரியதொரு ஆலமரத்தின் கிழக்குப்பக்கத் துக் கிளையில், 108 கால்களையுடைய தர்ப்பையினாலான உறியினை (ஊஞ்சலை) யமைத்து, அதன் கீழ் தரையில் அனேக கூறிய ஆயு தங்களைக் கூர்ப்பக்கம் மேல் நோக்கி நிற்கும்படி நட்டுவைத்தான். தான் அவ்வுறியிலிருந்து 108 புஷ்பங்களால் ஒவ்வொரு பஞ்ச நமஸ்கார மந்திரத்தைச்சொல்லி ஒவ்வொருகாலாய் வெட்ட ஆரம்பித்தான். அவ்வளவில், கீழே ஜ்வலித்துக்கொண்டிருந்த ஆயுதங்கள் அவன் கண்ணில்படவே, அவன் பயந்து, ஸ்ரேஷ்டி யின் வார்த்தையில் சந்தேகம் கொண்டவனாய், ஒருகால் அது பொய்யாயின் நாம் கீழே ஆயுதங்களின் மேல் விழுந்து இறக்க நேரிடுமே யென்ற எண்ணங்கொண்டு, உறியின்மேல் ஏறுவதும் இறங்குவதுமாய்ச் சஞ்சலத்துடனிருந்தான்.

அது சமயம் அரசன் காவலாளிகளால் துரத்தப்பட்டு, பயந்து, அங்கு ஓடிவந்த அஞ்சன சோரன் என்ற திருடன், அங்கு நடந்தவற்றைச் சோமதத்தன்பால் கேட்டறிந்தான். உடனே அவன் ஸ்ரேஷ்டியின் வார்த்தையில் நிச்சங்கிதனாகி (நம்பிக்கைவைத்து), நிர்ப்பயனாய் உறியின் மேலேறி, கிரமப்படி, மந்திரோச்சாரண பூர்வகம் ஒவ்வொருகாலாய் எல்லாக்கால்களை யும் வெட்டியெறிந்தான். அவன் கீழே ஆயுதங்களின் மேல் விழப்போகும் சமயம் ஆகாசகாமினி தோன்றி, அவனைக்காப் பாற்றி, அப்போது ஜினதத்த ஸ்ரேஷ்டி இருந்த சுதர்சன மேருவின் மேலுள்ள அக்ருத்திரிம ஜினசைத்தியாலயத்தில், கொண்டுபோய்ச் சேர்த்தது. அங்கே அவன் ஜினபிம்ப தரிசன மகிமையால் சம்யக்தரிசனத்தையுமடைந்தான். பின்னர் அங்கு வந்த சாரண முனிவரிடம் தர்மத்தைக்கேட்டு, ஜினதீக்ஷையை யேற்று, உக்கிர தபசினைச்செய்து, அவன் மோக்ஷத்தையடைந் தான்.

இதனால் நிச்சங்கிதனாகிய காரணத்தினால் அஞ்சனசோரன் முக்தியையடைந்ததும், சந்தேகங்கொண்ட காரணத்தினால் சோம தத்தன் ஒரு பேற்றினையும் பெறாது போயினன் என்பதும் விளங்குகின்றன.

# ஶ்ராவகாசார நீதிக் கதைகள்.



குமாரி அனந்தமதியை வித்தியாதரன் தூக்கிச் செல்லுதல்.

**2**-வது கதை.

நிஷ்காங்க்ஷை என்னும் அங்கத்திற்கு உதாரணமான

# 2. அனந்தமதி கதை

அங்கதேசத்துச் சம்பாபுர வாசியாகிய பிரியதத்தன் என்னும் ஸ்ராவகன், ஸ்ரீதர்மகீர்த்தி ஆச்சாரியார் என்ற முனிவரிடம், ஓர் ஆஷ்டான்ஹிக சமயம் எட்டுநாளைக்கும் பிரம்மசரிய விரதத்தினைக் கைக்கொண்டான். அப்போது விளையாட்டாகக் கன்னிகையாகிய தன்குமாரி அனந்தமதிக்கும், அவ்விரதத்தினை நல்கும்படி அம்முனிவரை வேண்டினன். முனிவரும் அதற்கிசைந்து, அவளுக்கு விரதத்தினைக் கொடுக்குங்கால், வினைவசத்தால் அதற்கு ஓர் காலவரையறையைக் கூறாதுவிடுத்தார். பின், அனந்தமதி தக்க வயதினையடைந்ததும், அவளுக்கு மணவினை முடிக்கப் பிரியதத்தன் யோஜித்தான். அப்போது அவள், முன் பிரம்மசரிய விரதத்தைக் கைக்கொண்ட காரணத்தினால், தான் மணஞ்செய்துகொள்ள இயலாது என்றுகூறி, கன்னிகையாகவே இருந்து விட்டனள்.

ஒருநாள் அவள் உத்தியானவனத்தில் விளையாடிக்கொண்டிருந்தபோது, அவ்வழியே ஆகாயத்தில் தன் மனைவியுடன் விமானரூடனாய்ச் சென்றுக்கொண்டிருந்த குண்டிலமண்டிதன் என்ற வித்யாதரன், அனந்தமதியைக்கண்டு அவளழகில் ஈடுபட்டு, அவளைத் தான் அடைய நிச்சயித்தான். உடனே அவன் தன் மனைவியைக் கொண்டுபோய்த் தன்வீட்டில்விட்டுத் திரும்பிவந்து, அனந்தமதியைத் தன் விமானத்தில் பலாத்காரமாய் ஏற்றிச்சென்றான். அவ்வளவில் அவன் செய்கையில் சந்தேகங்கொண்ட அவன் மனைவி, அவனைத்தேடிக்கொண்டு எதிரில் வந்துகொண்டிருந்தாள். அவளைக் கண்டதும் வித்யாதரன் பர்ணலக்வி என்னும் வித்தையினால் அனந்தமதியை மெல்லக் கீழே விழும்படி விட்டுவிட்டுத் தன்மனைவியை அழைத்துக்கொண்டுத் தனதிருப்பிடம் சென்றான்.

அனந்தமதி அங்கே ஒருகாட்டில் இறங்கிப் பீமன் என்னும் ஒரு வேடராஜன் கையில் சிக்கினாள். அவன் காமாதுரனாய்

அவளையடைய விரும்பிப் பலாத்காரம் செய்தான். அனந்தமதி யினுடைய சீலமகாத்மியத்தால் அங்கு வனதேவதை தோன்றி அவனைப்பலவாறு இம்சித்தது. அனந்தமதி அவனிடமிருந்து தப்பிப் புஷ்கரன் என்ற ஒரு வியாபாரியிடம் அகப்பட்டாள். அவனும் இவளைத்தன் மனைவியாகும்படி பலவாறு இம்சித்தான். இவள் தன்னுடைய நிஷ்காங்க்ஷா குணத்தினால் அவனை வெறுத்துத் தள்ளினாள். அதனால் அவன், அயோத்தியில் காமஸேனை என்னும் வேசிபால் அனந்தமதியை ஒப்புவித்தான். அவ்வேசி அவளைத் தன் வேசித்தொழிலை மேற்கொள்ளுமாறு பலவாறு துன்புறுத்தினாள். ஒரு நாளிரவு அவ்வூர் அரசன் சிம்மசேனன் பாலும் அனுப்பினாள். அவன் காமவிகாரம் கொண்டு அவளைப் பலாத்காரஞ் செய்யுமளவில், அவளுடைய சீலப்பிரபாவத்தால் அவ்வூர்ப் புரதேவதை அங்குத் தோன்றி, பல கோரரூபங் கொண்டு அரசனைப்பலவாறு துன்புறுத்தியது. அதனால் அவன் அனந்தமதியை நகர்ப்புறத்து வெளியே துரத்திவிட்டான். அவள் பலவிடங்களிலும் அலைந்து கஷ்டப்பட்டுக் கடைசியில், கமலஸ்ரீ என்னும் ஒரு ஸ்ராவகியால் காப்பாற்றப்பட்டாள்.

அவ்வளவில், பிரியதத்தன் தன்குமாரி அனந்தமதியின் பிரிவாற்றாமையால் வருந்தி, அவளை எங்கும் தேடிக் காணாது தீர்த்த யாத்திரை செய்துவருபவன் கடைசியில் அவ்வீட்டினுக்கே வந்து சேர்ந்தான். மறுநாள் காலை ஸ்ரீகோவிலுக்குச்சென்று, பூஜைமுடித்துத் திரும்புகையில் அவ்வீட்டு வாசலில் அனந்தமதியா லிடப்பட்டிருந்த கோலத்தினழகைக்கண்டு துக்கித்தவனாய், அக் கோலத்தினையிட்ட நங்கையைத் தான் காணவேண்டினன். அனந்தமதியும் அவனெதிரில் அழைக்கப்பட, தந்தையும் குமாரத்தியும் ஒருவரை ஒருவர் கண்டு ஆலிங்கனஞ் செய்து ஆனந்த பரவசமடைந்தார்கள். பின்னர் அவளடைந்த துன்பங்களை அவளாற் கூறக்கேட்டு, அங்கிருந்த எல்லோரும் துக்கப்படலானார்கள்.

சிலநாட் சென்றதும் அனந்தமதி தன் தகப்பன் உத்தரவு பெற்று, ஜினதீக்ஷையை மேற்கொண்டு, தவத்தினைச்செய்து ஸ்திரீ ஜன்மத்தை விட்டுச் சகஸ்ராரகல்பத்தில் தேவனாயினள். அங்குப் பதினெட்டு கடற்காலம் அமரசுகமனுபவித்தபின், கிரமத்தில் சம்மியக்த்வ யோகத்தினால் மோக்ஷபதவியினை அடைந்தாள்.

இதனால் நிஷ்காங்க்ஷை அல்லது சரீரசுகபோக வாஞ்சையில்லாமை என்னும் ஸம்மியக்த்வ குணத்தின் மகிமை விளங்குகின்றது.

---

## நிர்விசிகித்ஸை என்னும் அங்கத்திற்கு உதாரணமான
## 3. ஓத்தாயண மகாராஜன் கதை.

ஒரு சமயம் ஸௌதர்மேந்திரன் சபையில் ஸம்மியக்த்வத்தைப் பற்றிப் பிரசம்சை நடந்தது. அப்போது அங்கதேசத்து ரௌரக்புரி என்ற நகரத்தின் பரிபாலகனாகிய ஓத்தாயண மகாராஜனும் அவன் இராணி பிரபாவதி தேவியும் நிர்விசிகித்ஸை என்னும் சம்யக்த்வ குணத்திற்கு உதாரணமாகக் கூறப்பட்டார்கள். அதனைப் பரீக்ஷிக்கவெண்ணி, அங்கிருந்த வாசவன் (வசுதேவன்) என்ற ஒரு தேவன், மிக்க துர்க்கந்தமுள்ளதும், குஷ்டரோகத்தினால் பீடிக்கப்பட்டதுமான கோர ரூபமுள்ள ஒரு முனிவனைப்போல் தன் உருவை மாற்றிக்கொண்டு அவ்வரசன் அரண்மனைக்கெதிரில் சென்றுகொண்டிருந்தான். முனிவரைக் கண்டதும் அரசன் எதிர்கொண்டழைத்து, பக்தி வினயத்துடன் உபசரித்து, விதிப்படி ஆகாரதானத்தைச் செய்தான். முனிவன் அதை உண்டதும், தன் மாயாசக்தியினால் மிக்கத் துர்க்கந்தத்தோடு கூடிய கோரமான வாந்தியைச் செய்தான். அந்த துர்க்கந்தத்தைச் சகிக்கமாட்டாமல் அங்கிருந்த பரிஜனங்களெல்லாம் அவ்விடத்தை விட்டு ஓடிப்போனார்கள். அரசனும் இராணியும் மட்டும் அங்கிருந்து அம்முனிவன் உடம்பிற்றெறிந்த வாந்தியினைத் தாங்கள் கையினாலேயே அலம்பிச் சுத்தஞ் செய்தார்கள். பின்னும் அவர்கள் "அந்தோ! ரோக பீடிதமாகிய சரீரத்திற்குத் தகாத ஆகாரத்தினைக் கொடுத்து விட்டோமோ" என்றுப் பரிதவித்துத் தங்களைத் தாங்களே நிந்தித்துக்கொள்ளலானார்கள். அதனைக்கண்ட முனிவன் தன் சுயரூபத்தில் தோன்றித் தன் வரலாற்றினைத் தெரிவித்தும், அரச தம்பதிகளைப் பூஜித்துப் போற்றியும் போயினன். பின்னர் ஓத்தாயண மகாராஜன் ஸ்ரீ வர்த்தமான ஸ்வாமியின் பக்கல் தீக்ஷையைக் கைக்கொண்டு கோரமான தபசைச்செய்து கிரமத்தில் முக்தியினையடைந்தான்.

பிரபாவதி தேவியும் தபோ விசேஷத்தால் ஸ்திரீ ஜன்மத்தை விடுத்துத் தேவனுயினள். இதனுல் நிர்விசிகித்ஸை என்னும் ஸம்மியக்த்வ குணத்தின் மகிமை விளங்குகிறது.

---

அமூடதிருஷ்டித்வம் என்னும் அங்கத்திற்கு உதாரணமான

## 4. இரேவதி இராணியார் கதை.

விஜயார்த்தகிரியின் சரிவிலுள்ள, மேககூட நகராதிபதி சந்திரப்பிரபன் என்ற வித்தியாதரன், தன் மகன் சந்திரசேகரனிடம் இராஜ்யத்தைவிட்டுத் தான் ஸ்ராவக விரதத்தினை மேற்கொண்டு, தென்மதுரையில் முனிகுப்தாசாரியார் என்பவரிடம் ஆகமாதி நூல்களைக் கற்றுவரலாயினன். ஒரு சமயம் அவன் உத்தர மதுரைக்குச்செல்ல உத்தேசித்துக் குருவை வணங்கி, அவ்விடம் யாருக்கேனும் ஏதேனும் சேதியுளதாவெனக் கேட்கலானுன். குரு அவ்விடத்திலுள்ள சுவ்ரதாசாரியாருக்குத் தன் நமஸ்காரத்தையும், அவ்விடம் அரசன் வருணசேனனுக்கும், அவன் மனைவி இரேவதி தேவிக்கும் தன் ஆசிர்வாதத்தையும் கூறச் சொன்னுரேயொழிய, பன்முறை கேட்டும் அவ்விடத்திலுள்ள பதினேரு அங்கங்களையுமறிந்த பவ்யசேனமுனிவருக்கு ஒன்றும் கூறவில்லை. இது ஏனே? அதனை அறியவேண்டும் என்று யோஜித்தவனுய் வித்தியாதரன், தன் வித்தையினுல் உத்தர மதுரையை விரைவிலடைந்து, சுவ்ரதாசாரியாருக்குக் குருவின் நமஸ்காரத்தைக் கூறிவிட்டுப்பின் பவ்யசேனரிடம் வந்து வணங்கினன். அம்முனிவர் கர்வித்து மௌனமாயிருந்தார். பின்னர் அவர் சௌசத்திற்குச் செல்லுங்கால், வித்தியாதரனுகிய சீடன் கமண்டலத்தை எடுத்துக்கொண்டு பின் சென்றுன். கமண்டலத்திலுள்ள நீரைக் கீழே கொட்டிவிட்டு வித்தியாதரன், தன் வித்தையினுல் அங்கு ஒரு புல் தரையையும், ஒரு குளத்தினையுந் தோன்றச் செய்தான். முனிவர் துறவிகளின் விதிகளை யோஜியாது அப்புல்தரையிலேயே வெளிக்குப் போய்விட்டுப் பக்கத்தி

லுள்ள குளத்தில் சுத்தி செய்துகொண்டார். இதனைக்கண்டதும் வித்தியாதரன், தன் குரு இம்முனிவர் பெயரைக்கூடச் சொல்லாததற்கு இதுவே காரணமென்று அறிந்தவனாய், இம்முனிவருடைய காரியங்களைப் பிரசம்சைசெய்து, அபவ்யசேனன் என்ற பெயரே இவனுக்குத்தகும் என்று கூறினன். அதுமுதல் அப்பெயரே அவருக்கு எங்கும் விளங்கலாயிற்று.

மற்றொருநாள் வித்தியாதரன், தன் வித்தையால் பிரம்மா, விஷ்ணு, சிவன், தீர்த்தங்கரர் முதலியவர்களின் உருவங்களை ஆகாயத்தே தோற்றுவித்தான். அவற்றை எல்லோரும் சென்று வணங்கலானார்கள். இரேவதி இராணியார் மட்டும், பலபேர் பன்முறை சொல்லியும் போகாமல், "அவர்களெல்லாம் முற்காலத்திலிருந்தவர்களாகையால் இங்குவரக்காரணமில்லை" என்று கூறி வாளாவிருந்தனள். பின்னர் வித்தியாதரன், குஷ்டரோகமுள்ள சரீரத்தையுடைய முனிவனைப்போல் வேடந்தரித்து, அரண்மனை வாசலில் வந்து மூர்ச்சையாகி விழுந்தான். இதனையறிந்து, இரேவதையார் ஓடோடியும் வந்து, முனிவனைப் பரிவுடனெடுத்து, சுவஸ்தப்படுத்தி, பக்தியுடன் விதிப்படி ஆகாரதானத்தைச் செய்தனள். அதனையுண்டு அம்மாயாவி துர்க்கந்தமுள்ள வாந்தியினைச் செய்தான். அதனை இராணியார் சுத்தப்படுத்தி, "அந்தோ! நான் என்ன குற்றம் செய்துவிட்டேனோ?" என்று மனமுருகித் தன்னைத்தானே நிந்தித்துக் கொண்டனள். உடனே மாயா வித்தியாதரன் தன் சுயவுருவத்தை வெளிக்காட்டித் தன் விருத்தாந்தங்களையும், தன் குருவின் ஆசீர்வசனத்தையுங் கூறி இராணியாரைப் போற்றிப் பூஜித்துப்போயினன். பின்னர் வருணராஜன் தவத்தினைச் செய்து மோக்ஷமடைந்தனன். இரேவதை இராணியாரும் தவவிசேஷத்தால் ஸ்திரீ ஜன்மத்தைவிட்டுத் தேவபதவியை எய்தினள்.

எனவே இரேவதி இராணியார், அமூடதிரிஷ்டித்வம் என்ற ஸம்யக்த்வ குணத்திற்கு உதாரணமாகக் கொள்ளப்பட்டாள்.

---

## உபகூஹனம் என்னும் அங்கத்திற்கு உதாரணமான

# 5. ஜிநேந்திர பக்த ஸ்ரேஷ்டி கதை.

சௌராஷ்டிர தேசத்துப் பாடலீபுர நகராதிபதி யசோதரனுக்கும் அவன் மனைவி ஸுஸீமா என்பவளுக்கும் புத்திரனான சுவீரன் என்பான் குமார்க்களுகித் தன்னையொத்த குமார்க்கர்களுடன் சேர்ந்து திரியலுற்றான். நிற்க, கௌடதேசத்து தாம்ரலிப்த நகரில் வசித்த மிக்க தனிகனான ஜிநேந்திர பக்த ஸ்ரேஷ்டி என்பவன், தன் ஏழடுக்கு மாளிகையின் மேல்தளத்தில் ஸ்ரீ பார்சுவ தீர்த்தங்கர பரமதேவரின் பிம்பத்தை ஸ்தாபித்து அதன் முக்குடையின் உச்சியில், விலை மதிப்பிடமுடியாத வைடூரிய இரத்தினமொன்றைப் பதிப்பித்து வைத்திருந்தான். இதனைக் கேள்வியுற்ற சுவீரன், தான் அந்த இரத்தினத்தையடைய விரும்பித் தன் தோழர்களில் தந்திரத்திலும் களவாடுந் தொழிலிலும் மிகத் தேர்ச்சிபெற்றவனான சூர்பன் என்பவனை, அக்காரியத்தை முடிக்க ஏவினன். சூர்பன், பதினோராவதுநிலை ஸ்ராவகனைப்போல் வேடந்தரித்து தாம்ரலிப்த நகரமடைந்து, ஜனங்கள் தன்னைப் பெரிய காயக்கிலேசத்திற்றீர்ந்த தவசிரேஷ்டனெனப் புகழுமாறு ஒரு குழப்பத்தினை யுண்டாக்கி ஜிநேந்திரபக்தன் கவனத்தைக் கவர்ந்தான். அவனும், இச்சூதினை யறியாது, அவனை உண்மைத் தவஸ்ரேஷ்டனென்றே நினைத்து, அவனைச்சென்று வணங்கித் தன் மாளிகைக்கழைத்து வந்து, ஜினபிம்ப தரிசனம் செய்து வைத்து, அவ்விடத்திலேயே காவலாகவும் இருக்கச்செய்தான். பின்பு ஒரு நாள் ஸ்ரேஷ்டி வியாபார நிமித்தம் கடல்யாத்திரை செல்ல வீட்டைவிட்டுப் புறப்பட்டு நகர்ப்புறத்தில் இருந்த ஒரு மாளிகையில் தங்கினான். இவ்வளவில் ஸ்ரேஷ்டி கப்பலேறிச் சென்றிருப்பானென நினைந்த சூர்பன் நடுஇரவில் இரத்தினத்தைக் கையிலெடுத்துக்கொண்டு ஓட யத்தனித்தான். அதன் ஜோதிப் பிரகாசத்தால் மற்றக் காவலர்கள் கண்டு அவனைப்பிடித்து, இரத்தினத்துடன் ஸ்ரேஷ்டியின் முன் கொண்டுவந்து நிறுத்தி நடந்தவற்றைக்கூறினார்கள். தப்ப வழியறியாத சூர்பன் தன்னைக்காப்பாற்றும்படி ஸ்ரேஷ்டியின் பாதங்களில் விழுந்து வேண்டினன். ஸ்ரேஷ்டியும் இதனை வெளியிடுவது ஜினதர்மத்துக்கு நிந்தை

யாகுமெனவெண்ணி, "இவ்விரத்தினத்தை நானே எடுத்துவரச் சொன்னேன். இம்மகானைத் திருடனென்பது பிசகு" எனக்கூறி அவனை விடுத்துக் காவலாளிகளைப் போகச்செய்து பின் பல புத்திகளைக்கூறிச் சூர்பனையும் தப்பிப்போகச் செய்தான். காலாந்தரத்தில் ஸ்ரேஷ்டியும் தவத்தினைச் செய்து மோக்ஷ மெய்தினன்.

இவ்விதமே அக்ஞானிகளால் செய்யப்படும் குற்றங்களை மன்னித்துப் பிரசம்சை செய்யாமலிருப்பது ஸம்யக்திரஷ்டிகளின் கடமையாகும்.

---

## ஸ்திதிகரணம் என்னும் அங்கத்திற்கு உதாரணமான

# 6. பாரிஷேணன் கதை.

**ம**கததேசத்து இராஜக்கிரக நகராதிபதி ஸ்ரேணிகமகாராஜனுக்கும் அவன் தேவி சேலினிமாதேவிக்கும் மகனாகிய பாரிஷேணன் என்பான் சம்யக்திருஷ்டியாகி, ஒரு சதுர்தசியன்று உபவாசமிருந்து, அன்றிரவு மயானத்தில் காயோத்ஸர்க்கனாய்த் தியானத்திலிருந்தான். அப்போது, நகரில் ஒரு முத்துமாலையைத் திருடி, நகர்க்காவலர்களால் துரத்தப்பட்டு ஓடிவந்த வித்யுத்சோரன் என்ற திருடன், அம்முத்துமாலையைத் தியானத்திலிருந்த பாரிஷேணர் முன் எறிந்துவிட்டு ஓடிப்போய் தப்பித்தான். காவலர்கள் நகையினைக்கண்டு பாரிஷேணரைக் கள்வனென்று பிடித்துப் போய் அரசன்முன் நிறுத்தினார்கள். அரசன் தீர விசாரியாது குமாரனைக் கொன்றுவிட உத்தரவளித்தான். கொலையாளிகள் அவ்வாறு கொலைசெய்ய யத்தனிக்கையில் கத்தி மாலையாக விழக் கண்டு, அதனைஅரசனிடம் தெரிவித்தார்கள். அரசன் குமாரனை வணங்கித் தான்செய்த தவறை மன்னிக்கும்படி கேட்டான். அப்போது வித்யுத்சோரனாகிய திருடன், அங்குவந்து நடந்தவற்றைக் கூறித் தன்னை மன்னிக்குமாறு அரசனை வேண்டினான். அரசன் முதலியோர் அதனைக்கேட்டு ஆச்சரியமுற்று, பாரிஷேணனை அரண்மனைக்கு அழைத்தார்கள். அவன் அதற்கிணங்

காது, தகப்பன் உத்தரவுபெற்று, தீக்ஷையைக் கைக்கொண்டு தபசியாயினன்.

பின்னொரு நாள், பாரிஷேணன் பலாசகூடம் என்னும் கிராமத்துக்குச் சரியாமார்க்கமாகச் செல்ல, அவருடைய பால்ய சிநேகிதனும், மந்திரி குமாரனுமாகிய புஷ்படாலன் என்பவன், முனிவரை வரவேற்று விதிப்படி ஆகாரதானஞ் செய்துவைத்துப் பின் வழியனுப்ப அவருடன் சென்றான். அப்போது முனிவர் தன் சிநேகிதனுக்குத் தர்மோபதேசஞ் செய்து தன்னுடன் தீக்ஷையைக்கைக்கொள்ளுமாறு கூறினார். அவனும் அவரிடமுள்ள பிரீதியினால் ஒப்புக்கொண்டானே யொழிய, அவன் தன் மனைவி ஸோமிலை ஞாபகமாகவே இருந்தனன். இவ்வாறு பன்னிரண்டு வருஷங்கள் கழித்து, ஒருசமயம் இருவரும் ஸ்ரீவர்த்தமான ஸ்வாமியின் சமவஸரணத்துக்குச் சென்று துதிக்குங்கால் புஷ்படாலன் தன் மனைவி நினைவாகவே துதித்தான். அதனைக் குறிப்பாலறிந்த பாரிஷேணர் அவனைத் தம் மனைக்கழைத்துவந்து தேவஸ்திரீகளுக்கொப்பான தம் முப்பத்திருவர் மனைவிகளையும் காண்பித்துப் பின் அவன்மனைக்கு ஏக அவனையழைத்தார். அப்போது அவன் லஜ்ஜையினையடைந்து இப்பேர்பட்ட இராஜ்யாதி ஸ்திரீபோகங்களை இவர் விட்டிருக்க, நாம் நம்மனைவியை நினைத்தது மூடத்தனமாகும் என்று எண்ணியவனாய், வைராக்ய சித்தத்தை யடைந்து, தீவிர தபசைச் செய்து ஸ்வர்க்கமடைந்தனன். பாரிஷேணரும் அவ்வாறே தவத்தினைச்செய்து ஸ்வர்க்க மெய்தினர். பின்னர் இவர்கள் முக்தியினையுமடைவர்.

இது விரதங்களை யனுஷ்டித்துத் தவறினவர்களைத் திருத்தி மறுபடியும் அவ்விரதங்களை அனுஷ்டிக்குமாறு செய்யும் ஸ்திதிகரணமாகிய ஸம்யக்த்வ குணம் ஆகும்.



## மார்க்கப்பிரபாவனை என்னும் அங்கத்திற்கு உதாரணமான
# 7. வஜ்ரகுமாரன் கதை.

அஸ்திஞபுரத்தில் சோமதத்தன் என்ற ஒரு புரோகித குமாரன் பல கலைகளையுங் கற்றுத்தேர்ந்து மிக்க சாமார்த்திய முள்ளவனுயிருந்தான். அவன் ஒருகால் தன் மாமனுகிய சுபூதி என்பவன் வசித்த அஹிசந்திரபுரம் என்ற நகருக்குச் சென்றிருந் தான். அப்போது அவன் தன் வித்யாசாமர்த்தியத்தினுல் அந் நகரத்தரசனை அகமகிழச் செய்து அவனிடம் மந்திரியாயினன். மாமனுகிய சுபூதியும், தன் மகள் யக்ஞதத்தையை விதிப்படி அவனுக்கு மணஞ்செய்துவைத்தான். சிறிது காலஞ் சென்று கருப்பமுற்ற யக்ஞதத்தை, கொம்பில் பழுத்த ஒரு மாங்கனியை உண்ண விரும்பினள். சோமதத்தன் பல ஆட்களையனுப்பி அதனைத் தேடச் செய்தும் பயன்பெருமற் போயினன். அதனுல் அவன் தானே அதனைத் தேடிச்சென்று,ஒரு மரத்தில் அங்ஙனம் பழம் இருக்கக் கண்டு, அதனைப் பறித்து ஆள்கள் வசம் தன் மனைவிக்கனுப்பினன். பின்னர், அவன் அம்மரத்தடியில் தங்கி யிருந்த சுமத்திரர் என்ற முனிவர்பால் ஜினதீக்ஷையைப் பெற்று நாபிகிரி என்னுமிடத்திற்றங்கித் தவஞ் செய்யலானுன். சின்ஞளில் ஓர் ஆண்மகவைப் பெற்ற யக்ஞதத்தை, தன் புருஷன் இவ்வாருனதைக் கேள்வியுற்றுக் கடுங்கோபங் கொண்டு, தான் பெற்ற அக்குழந்தையினை யெடுத்துப் போய்ச் சோமதத்த முனிவர் பாதத்தில் போட்டு, அவரைப் பலவாறு நிந்தித்து, வீடு திரும்பினுள்.

இது நிற்க, விஜயார்த்த பர்வதத்து அமராவதி என்னும் நகரத்தில், திவாகரதேவன் என்னும் ஒரு வித்தியாதரன் அரசு செலுத்தி வந்தான். அவனுக்குப் புரந்தரன் என்ருேர் இளைய சகோதரனிருந்தான். அவன் தமயன் அரசினைக் கவர்ந்து, அவனையும் நாட்டைவிட்டு ஓட்டினன். அதனுல் திவாகரதேவன், தன் விதியை நொந்து, தன் மனைவி ஜயஸ்ரீ என்பாளுடன் பல விடங்களிற் சுற்றிப் பல முனிவர்களைத் தரிசித்து வரலானுன். அக்கால் அவன், நிஷ்டையிலிருந்த ஸோமதத்த முனிவரைக் கண்டு வணங்கி, அவர் நிஷ்டையைக் கலைக்காது, அவர் பாதத்

தில் கிடந்த குழந்தையினை மட்டும் தான் எடுத்துக்கொண்டான். பிறகு, அவன் அண்மையிலிருந்த கனகபுரம் என்ற ஊரினிற் சென்றுவதிந்து, அக்குழந்தைக்கு வஜ்ரகுமாரன் எனப் பெயரிட்டு, அதனைத் தானுந் தன் மனைவியுமாக வளர்த்து வரலானார்கள். குமாரனும் வளர்ந்து கண்டோர் காமுறுங் காளையாயினன்.

அப்போது, கருடவேகன் என்னும் வித்யாதரனுக்கும் காங்கவதி என்னும் அவன் மனைவிக்கும் புத்திரியான மதனவேகை என்பவள், பிரக்ஞப்தி என்னும் வித்தையைச் சாதிக்கவெண்ணிப் பக்கத்திருந்த ஹேமந்தகிரி என்னும் மலைச்சாரலில் கடுந் தவமியற்றினாள். அப்போது காற்றினலலைக்கப்பட்ட இலந்தை முள் அவள் கண்ணில் குத்தி உபத்திரவமுண்டாக்கியதால் அவள் வித்தையைச் சாதிக்க இயலாது, நிலை தடுமாறி நின்றாள். அது சமயம் அங்குத் தற்செயலாய் வந்த வஜ்ரகுமாரன் அதனைக் கண்டு, முள்ளை மெல்ல விலக்கிவிட, அவள் துன்பந் தீர்ந்து இஷ்டசித்தியை யடைந்தனள். பின், அவள் தனக்குதவிய அவனையே நாயகனாக வேண்டி, விதிப்படி மணந்து, அவனுடைய மனைவியாயினள்.

இப்பால், வஜ்ரகுமாரன் தன் மனைவி சாதித்த வித்தையின் உதவியால் அமராவதி சென்று, புரந்தரனைப் போரில் வென்று, அந்நாட்டை ஜயித்துத் தன் வளர்ப்புத் தாய்தந்தையர்களை அதில் சேர்த்து, முடிசூட்டி வைத்தான். அவ்வாறானபின், ஒரு நாள் ஜயஸ்ரீயாகிய வளர்ப்புத்தாய் வஜ்ரகுமாரனை "அன்னியன் பிள்ளை" யெனத் தூற்ற, அவன் வருந்தித் திவாகரதேவன்பால் சென்று தன் பிறப்பினைப்பற்றி உசாவினான். அவன் தானறிந்தவற்றைமட்டுங்கூறி, மற்றையவற்றினையறியக் குமாரனுந் தானுமாக மதுரையின் பக்கலிலிருந்த க்ஷத்திரியக்குகையில் தவஞ்செய்திருந்த சோமதத்தமுனிவர்பால் வந்துகேட்டான். சோமதத்தனும் அவற்றைக்கூறிப்பின் குமாரனைத் தீக்ஷையைக்கைக்கொள்ளுமாறு போதிக்க, அவனும் தவத்தினையேற்று அங்கேயே தங்கலானான்.

அந்நாள் மதுரையில், பூதிகாந்தன் என்னும் அரசனும் அவன் தேவி ஊர்விளா என்பவளும் அரசாண்டிருந்தார்கள். அந்நகரிலேயே சாகரதத்தன், சமுத்திரதத்தை என்னும் ஒரு ஏழைச் சதிபதிகளுக்குத் தரித்திரை என்பவள் புத்திரியாகப்

பிறந்து, பால்யத்திலேயே தாய் தகப்பனையிழந்து, காப்பாரற்று, உடுக்க உடையுமின்றி, யாசகமெடுத்துத் திரிந்து வரலானாள். அப்போது அங்கு வந்த சாரண முனிவர்கள் இருவர் அவளைக் காண, அதிலொருவர் "இவள் பூர்வஜன்ம வினைப்பயனை யனுபவிக்கின்றாள்" எனவும், மற்றவர் "சீக்கிரம் இவள் இவ்வூர் இராஜ பத்தினியாவாள்" எனவும், ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளலானார்கள். அதனைக் கேட்டிருந்த புத்தஸந்நியாசினி யொருத்தி 'ஜினமுனிகள் வார்த்தை பொய்க்காது பலிக்கும்" என்றெண்ணி, அப்பெண்மணியைத் தான் அழைத்துச்சென்று, புத்த மடத்திற் சேர்த்து, ஊணும் உடையும் உதவிக் காப்பாற்றி வரலானாள். தரித்திரையும் வளர்ந்து, பால்யம் நீங்கி, மட்டற்ற அழகினை யுடைய மங்கையாயினள். அவள் ஒரு நாள் புத்தமடத்தின் உப்பரிகையில் உலவியிருக்கும்போது, வீதியில் பவனி வந்த பூதிகாந்த அரசன் அவளைக்கண்டு மோகமுற்றவனாகி, அவளைத் தனக்கு மணஞ் செய்து தருமாறு அப்புத்தஸந்நியாசினியை வேண்டினன். அவளும் "நீ புத்த மதத்தில் சேருவாயானால் அவளை மணக்கலாம்" என்று கூற, அரசனும் அம்மதத்தில் சேர்ந்து அவளை விதிப்படி மணந்து தன் பட்டமகிஷியாக்கினன்.

இவ்வாறாக, ஊர்விளாதேவி, ஒவ்வொரு பங்குனி மாதமும் நந்தீஸ்வர ஆஷ்டான்ஹிக சமயம் ஜினபகவானுக்கு இரதோத்ஸவம் செய்யும் தன் வழக்கப்படி, அவ்வருஷமும் அரசன் உத்தரவு பெற்று, அதனை நடத்த முற்பட்டாள். அப்போது தரித்திரை தானும் தன் புத்தபகவானுக்கு அவ்வித உத்ஸவம் செய்யக் கருதித் தன்னிடம் அதிகப் பிரியமுள்ள அரசனிடம் உத்தரவு பெற்று, ஜினபகவான் இரதத்தை நிறுத்தித், தன் இரதத்தை அதற்குமுன் செலுத்தலானாள். இதனைக் கண்ட ஊர்விளாதேவி "என் இரதம் முன் செல்லாதவரையில் நான் உணவு அருந்துவதில்லை" என்று நியமஞ் செய்துகொண்டு, அதனை அந்த க்ஷத்திரியக் குகையில் தவஞ் செய்திருந்த சோமதத்தன்பால் வந்து கூறினாள். அதனைக் கேட்டிருந்த வஜ்ரகுமாரன், அப்போது அங்குத் தன்னைப் பார்க்க வந்த, தன்னை வளர்த்தவனும் வித்தியாதரனுமாகிய திவாகர தேவனிடம் கூறி, "மார்க்கப் பிரபாவனையின் நிமித்தம்" ஊர்விளாதேவிக்கு உதவிசெய்யும்படி வேண்டினன். வித்தியாதரன் தன் வித்தையினால் உடனே அந்த புத்த இரதத்தை ஒடித்து நாசப்

படுத்தி, ஊர்விளாவின் ஜினபகவான் இரதத்தை ஆகாய வழியே வீதி வலம் வரச் செய்தனன். இதனைக் கண்ட அரசன் முதலிய யாவரும் ஆச்சரியமுற்று, புத்தமதத்தினை விட்டு ஜினமதத்தில் ஈடுபட்டு அதனைப் பிரசம்ஸிக்கலானார்கள். பின், வஜ்ரகுமாரன் தவத்தினைச்செய்து மோக்ஷமெய்தினன்.

மார்க்கப் பிரபாவனை ஸம்யக்தரிசனத்தின் ஓர் அங்கமாகும் என்பது இக்கதையால் வெளியாகின்றது.

---

## வாத்ஸல்யம் என்னும் அங்கத்திற்கு உதாரணமான
## 8. விஷ்ணு முனிவர் கதை.

அவந்தி தேசத்து உஜ்ஜயினி நகரத்தில் ஸ்ரீவர்மா என்ற அரசன் ஆண்டிருந்தான். அவனுக்குப் பலி, பிரஹஸ்பதி, பிரஹ்லாதன், நமுச்சி என்ற நால்வர் மந்திரிகளிருந்தனர். ஒரு நாள், சகல சாஸ்திரங்களையுங் கற்றறிந்த அவதிஞானியாகிய அகம்பனாசாரியார் என்பவர், எழுநூறு சிஷ்யமுனிவர்களுடன் அந்நகரத்து உபவனத்தில் வந்துத் தங்கினார். அப்போது ஆச்சாரியார் சீடர்களிடம் "அரசரே வந்த போதிலும் ஒருவரும் ஒன்றும் பேசலாகாது. பேசினால் நம் சங்கத்துக்கே அனர்த்தம் நேரிடும்" என முன்கூட்டி எச்சரித்தார். நிற்க, ஸ்ரீவர்மா வரசன், முனிவர்கள் எழுந்தருளியிருக்கும் சேதியறிந்து, தன் மந்திரிகள் நால்வருடன் சென்று, அவர்கள் பாதங்களில் விழுந்து வணங்கினர். முனிவர்கள் முன்னெச்சரிக்கையின்படி அவர்களுக்கு ஆசிகூடக்கூறாது வாளாவிருந்தார்கள். அரசர், 'முனிவர்கள் தியானத்திலிருப்பதால் பேசாதிருந்தனர்' என்று நினைத்தாரே யொழிய வேறு வித்தியாசமாக எண்ணவில்லை. ஆனால் நால்வர் மந்திரிகளும் கோபமடைந்து, "என்னே! இவர்கள் ஒன்றுந்தெரியாத கடாமாடுகள். தின்று கொழுத்துத் தியானிகள்போல் வேஷம் போடுகிறார்கள்." என்று நிந்தித்துச் சென்றார்கள். அப்படிச் செல்லும் வழியில், நகருக்குள் சென்று திரும்பி வரும் ஸ்ரீஸ்ருதஸாகர முனிவரைக் கண்டு அம்மந்திரிகள், "இதோ ஒரு கடாமாடு, நகரிற் சென்று வயிறு நிறையப் பொறுக்கித் தின்றுவிட்டுத், திரும்பி வருகிறது

## ஸ்ராவகாசார நீதிக் கதைகள்.



ஸ்ருதஸாகர முனிவரை
நான்கு மந்திரிகள் வெட்ட எத்தனிக்கும் காட்சி.

**8**-வது கதை.

பாருங்கள்'' என்று பரிகசித்தார்கள். இதனைக் கேட்ட முனிவர் அரசனிடம் சென்று தெரிவித்து, அம்மந்திரிகளை வாதுக்கிழுத்து ஸ்யாத்வாதமுறையினால், அவர்களை ஜயித்துத் திரும்பினர். சங்கத்துக்கு வந்து, குருவாகிய அகம்பனாசாரியாரிடம் நடந்தவற்றைக் கூறினர். அவர் ''அந்தோ! உமது செய்கையால் முனிகள் சங்கம் அழியக்கூடிய நிலைமைக்கு வந்துவிட்டதே. நீர், முன் அவர்களைக் கண்ட அதே இடத்திலேயே, இன்றிரவு காயோத்ஸர்க்கமாய்த் தியானத்திலிருப்பீரானால்தான், நம் சங்கம் உயிருடனிருக்கமுடியும்'' என்று கூறினர். முனிவரும் அவ்வாறு அங்குச் சென்று தியானத்திலிருந்தார். வாதில் தோற்ற மந்திரிகள், அம்முனிவர்களை ஒழிக்க, அன்றிரவு தங்கள் கத்திகளுடன் புறப்பட்டு வரும் வழியில், தியானத்திலிருந்த முனிவரைக் கண்டு, அவரைக் கொல்ல, நால்வரும் கத்தியை ஓங்கினார்கள். அவ்வளவில் ஓங்கிய கைகள், முனிவருடைய தபோ மகிமையினால், ஓங்கியவாறே ஸ்தம்பித்து நின்று விட்டன. மறுநாட் காலையில் இதனை ஜனங்களால் கேள்வியுற்ற அரசன், அங்கு வந்து முனிவரைச் சரணமடைந்து, மந்திரிகளை விடுவித்து நாட்டினின்றும் துரத்தி விட்டான்.

இஃதிவ்வாறாக, குருஜாங்கல தேசத்து அஸ்தினாபுரம் என்ற நகரில் மகாபத்மன் என்ற அரசன் அரசு செலுத்தி வந்தான். அவன் தன் மனைவி லக்ஷ்மீமதியால் உண்டான பத்மன், விஷ்ணு என்ற குமாரர்களிருவரில் பத்மனுக்கு இராஜ்யத்தை ஈந்து, தானும் விஷ்ணு குமாரனுமாகத் தவத்தை மேற்கொண்டார்கள். அப்போது முற் கூறப்பட்ட பலிமுதலிய மந்திரிகள் பத்மராஜனிடம் வந்து வேலையிலமர்ந்தனர். அக்கால் பலியானவன், பத்ரமாஜனின் நெடுங்கால விரோதியான கும்பபுரமென்னும் தூர்க்கத்துக்கு அரசனான சிம்மபலன் என்பவனை ஜயித்து, அவனையும் சிறைப்படுத்தி வந்தான். அதனால் மகிழ்ச்சியுற்ற பத்மன், பலியினிடம் ''ஒரு வரத்தினைக் கேள், தருகிறேன்?'' என்றான். அதற்குப் பலியும், அதனைத் தான் வேண்டும்போது பெற்றுக் கொள்வதாகக்கூறி வாளாவிருந்தனன்.

அங்ஙனமிருக்குங்கால், அகம்பனாசாரியார் முதலிய எழுநூறு முனிவர்களும் கிரமத்தில் அந்நகர் வந்தடைந்தார்கள்.

அதனைக்கண்ட பலி, பழய துவேஷங் காரணமாக அவர்களைக் கொல்ல நினைத்துப் பத்மராஜனிடம் சென்று தனக்கு ஏழு நாளைக்கு இராஜ்ய பதவியினையேற்று நடத்த வரம் கொடுக்குமாறு வேண்டினன். அவனும் அப்படியே செய்து, தான் அந்தப் புரத்தினையடைந்திருந்தான். அவ்வளவில் பலி, அவ்வரசையேற்று அம்முனிவர்களைக் கொல்ல, நரமேதயாகம் என்னும் யாகத்தினைச் செய்ய முற்பட்டான். இதனையறிந்த முனிவர்கள் சலனமின்றித் தைர்யமாய்த் தியானத்திலேயே நின்றிருந்தார்கள்.

இதே சமயம், மிதிலாபுரிக்குச் சமீபம் உள்ள பர்வதக் குகையில் தவஞ்செய்திருந்த ஸ்ரீ சாகரசந்திராசாரியார் என்னும் முனிவர், தம் குகையை விட்டு வெளியில் வந்து ஆகாயத்தை நோக்க, ச்ரவண (திருவோணம்) நக்ஷத்திரம் சலித்ததைக் கண்டு, தன் அவதிக்ஞானத்தால் அறிந்து, முற்கூறிய முனிவர்களுக்கு ஏற்படப்போகும் துன்பத்தினை எண்ணிப் பிரலாபித்துக் கொண்டிருந்தார். அதனை முனிவர்பால் கேட்டறிந்த ஸ்ராவக விரதத்தினைக் கைக்கொண்ட சிஷ்யனாகிய புஷ்பதந்தன் என்னும் வித்யாதரன், "முனிவர்களைத் தப்புவிக்க மார்க்கம் ஏதேனுமுண்டா?" வென்று ஆச்சாரியரைக் கேட்டான். அதற்கு அவர், "தரணி பூஷணம் என்னும் கிரியில் தவஞ் செய்து, விக்ரியாரித்தியை யடைந்திருக்கும், விஷ்ணு முனிவரால்தான் நிவர்த்திக்க முடியு மெனக் கூறினார். அதனைக் கேட்ட வித்யாதரன், உடனே தன் வித்தையினால் விஷ்ணு முனிவரையடைந்து வணங்கி, விஷயத்தினை விளம்பினான். விஷ்ணு முனிவரும் தம் கையை நீட்டிப் பார்க்க, அது நெடுந்தூரம் நீண்டதைக் கண்டு தனக்கு அவ்வித இருத்தி இருப்பதையறிந்து, உடனே ஆகாயமார்க்கமாய்த் தம் தமயனாகிய பத்மராஜனிடம் சென்று "முனிவர்களுக்குத் துன்ப முண்டாக்கக் காரணமென்ன?" என்று விசாரித்தார். அதனை யறிந்த பத்மன், இதெல்லாம் தான் பலிக்கு இராஜ்ய பதவியைக் கொடுத்ததால் ஏற்பட்டதென்றுகூறித் துக்கப்படலானான்.

இதனை யறிந்த விஷ்ணு முனிவர், வாமன ரூபத்தையுடைய (குள்ளன்) ஒரு பிராமணனாக உருமாறிப் பலி அரசனிடம் சென்று தம் காலால் மூன்று அடி மண் யாசித்தார். அவனும் அதனைக் கொடுக்கச்சம்மதித்துத் தாரைவார்த்துக் கொடுத்தான்.

அதனையேற்ற விஷ்ணு முனிவர், தம் விக்ரியாசக்தியால் மேருவின் சிகரத்தில் ஒரு அடியையும், மானுஷோத்தர பர்வதத்தின் மிசை ஒரு பாதத்தினையும் வைத்து, மற்றொரு அடி மண் எங்குத் தருகின்றாயெனப் பலியைக் கேட்டனர். அதனைக் கண்ட பலி முதலிய எல்லோரும் பயந்து அவர் பாதத்தையே சரணமடைந்தார்கள். பலி முதலிய நால்வர்களும் முனிவர்களைத் துன்பத்தினின்றும் விடுவித்து, அவர்களை நமஸ்கரித்துப் பின் தாங்களும் ஜினதர்மத்தில் சேர்ந்து ஸ்ராவகதர்மத்தினைக் கைக்கொண்டார்கள்.

விஷ்ணு முனிவர் இவ்வாறு வாத்ஸல்லிய குணத்தினால் முனிவர்களின் துன்பத்தை நீக்கினது அறியத்தக்கது.

---

அஹிம்ஸை விரதத்தினால் சிறப்படைந்த

## 9. சட்டிப்புலையன் (யமபாலன்) கதை.

ஸுரம்ய தேசத்துப் பௌதனபுரத்தில் மகாபலன் என்பவன் அரசனாயிருந்தான். அப்போது ஒரு நந்தீஸ்வர ஆஷ்டான்ஹிகம் எட்டு நாளைக்கும் (அஷ்டமி முதல் பௌர்ணமி முடிய) தன் நாட்டில் யாரும் உயிர்க்கொலை செய்தல் கூடாது என்று பறைபறைவித்திருந்தான். ஆனால், அவ்வரசன் மகன் பலகுமாரன் என்பவன் மாம்சம் புசிக்கும் இச்சை உள்ளவனாகையால், ஒரு வண்ணானுடைய ஆடு ஒன்றை யாருமறியாமல் உத்யான வனத்தில் கொன்று தின்பானானன். அதனை ஒரு மரத்தின்மேல் ஒளிந்திருந்த தோட்டக்காரன் கண்டு அன்றிரவு தன் மனைவியிடம் அதைப்பற்றிப் பிரஸ்தாபித்துக்கொண்டிருந்தான். அதனை அங்கு ஒற்றுக்கேட்டிருந்த அரசனுடைய சேவகர்கள் அவனைக் கொண்டுபோய் அரசன் முன்னிலையில் நிறுத்தினார்கள். அப்போது அவன் நடந்தவற்றைக் கூறினன். அரசன் கேட்டுத் தன் ஆக்ஞையை மீறி இவ்விதம் செய்த குமாரன் இருந்தென்ன பிரயோஜனம் என்று அவனைக் கொலை செய்துவிடும்படி உத்தரவிட்டான். சேவகர்கள் பலகுமாரனைக் கொலைக்களத்தில் கொண்டுபோய் நிறுத்தி அரசாங்கக் கொலையாளியாகிய யம

பாலனை அழைக்கச் சென்றார்கள். அவர்கள் வருவதைக்கண்ட யமபாலன் வீட்டினுள் ஒளிந்துகொண்டு தான் வெளியூருக்குப் போயிருப்பதாகக் கூறும்படித் தன் மனைவியிடம் தெரிவித்தான். அவர்கள் வந்து கேட்டபோது அவளும் அப்படியே கூறினள். சேவகர்கள் "அந்தோ! இன்றுதானா அவன் போகவேண்டும். இன்று அரசகுமாரனைக் கொன்றால் அவன் மேலுள்ள விலை உயர்ந்த ஆடையாபரணங்கள் கிடைக்குமே" என்று கூறினார்கள். அதனைக் கேட்ட பொருளாசை பிடித்த யமபாலன் மனைவி "என் புருஷன் வெளியூருக்குத்தான் சென்றிருக்கிறார். என்ன செய்வது" என்று வெளிப்படையாக வாயாலும், "வீட்டினுள் அதோ பதுங்கியிருக்கிறான்" என்று கைஜாடையாலும் காட்டினள். சேவகர்கள் உள்ளே நுழைந்து யமபாலனைப் பிடித்துக் கொண்டுபோய் அரசன் முன்னிலையில் நிறுத்தினார்கள். அப்போது யமபாலன் அரசனிடம், "நான் ஒருசமயம் பாம்பு கடித்து மூர்ச்சையானேன். என் சுற்றத்தார்கள் நான் இறந்துவிட்டேன் என்று நினைத்து மயானத்தில் கொண்டுபோய் என்னைப் போட்டுவந்தார்கள். அப்போது சர்வௌஷதி ரித்தியைப் பெற்றிருந்த ஒரு முனிவர்மேல் பட்ட காற்று என்மேல் படவே நான் உயிர்பெற்றெழுந்து, அவரைச் சரணமடைந்து அவரிடம் சில தர்மங்களைக் கேட்டேன். அதனால் "சதுர்தசியன்று உயிர்க் கொலை செய்வதில்லை" என்ற விரதத்தைக் கைக்கொண்டேன். இன்று சதுர்தசி தினமாகையால் நான் உயிர்க்கொலை செய்ய உடன்படேன்," எனக் கூறினன். அதனைக் கேட்ட அரசன் இச்சண்டாளனுக்கு விரதமாவது என்று கோபமுற்றுத் தன் குமாரனையும் இவனையும் சேர்த்துக்கட்டி முதலைகள் நிறைந்த ஆழமான ஒரு மடுவில் தள்ளும்படி சண்டகருமன் என்னும் வேறொரு சேவகனுக்குக் கட்டளையிட்டான். "யமபாலனோ மரணமடைவதே மேல்; கொண்ட விரதத்தினை மட்டும் கைவிடலாகாது" என்று நினைத்து நிர்ப்பயனாய் ஒரு சிம்மத்தைப்போல் அசைவற்றிருந்தான். சண்டகருமனும் அரசனுத்தரவுப்படியே இருவரையுங் கட்டி ஆழமான மடுவில் தள்ளினன். அவ்வளவில் யமபாலனுடைய விரத மகிமையால் அங்கு ஜலதேவதை தோன்றி அம்மடுவின் நடுவில் ஒரு மண்டபமும், அதனுள் ஓர் இரத்தின மயமான சிம்மாசனமும் அமைத்து யமபாலனை அதிலிருத்திக்

குடை, சாமரை முதலிய அஷ்ட மகா பிராதிஹார்யங்களினால் பூஜித்தது. அதனைக் கேள்வியுற்ற அரசன் பயந்து தன்னையே நிந்தித்துக்கொண்டு, அங்கு வந்து யமபாலனை நமஸ்கரித்துத் தன்னை மன்னிக்கும்படி வேண்டினன். பின் அவனையழைத்து வந்து தன் சிம்மாசனத்திலிருத்தி நமஸ்கரித்து வஸ்திராபரணங்களால் பூஜித்தான்.

இவ்வாறு யமபாலன் அஹிம்ஸா விரதத்தினைக் கைக்கொண்டு அதனைக் காப்பாற்றியதால் இந்த ஜன்மத்தில் தேவதையாலும், அரசனாலும் பூஜிக்கப்பட்டு, மறு ஜன்மத்தில் மோக்ஷத்தையும் அடைந்தான்.

---

## சத்யம் என்னும் அணுவிரதத்தால் சிறப்படைந்த
## 10. தனதேவ ஸ்ரேஷ்டி கதை.

ஜம்பூத்வீப பூர்வவிதேஹ புஷ்கலாவதி விஷய புண்டரீகினி என்னும் நகரில் தனதேவன், ஜினதேவன் என்ற இரு வியாபாரிகள் இருந்தார்கள். தனதேவன் ஸத்ய வசனத்தையுடைய ஸத்யசந்தன். ஜினதேவனோ மிகக் கெட்ட எண்ணமுள்ளவன். ஒரு சமயம் இருவரும், "கிடைக்கும் லாபத்தைச் சம பங்கிட்டுக் கொள்வது" எனத் தமக்குள் நிர்ணயஞ் செய்துகொண்டு, வியாபாரஞ்செய்யத் தேசாந்திரம் சென்றார்கள். நல்வினைப்பயனால் அங்கு ஏராளமான லாபத்தைச் சம்பாதித்து, க்ஷேமமாகத் தங்கள் நகருக்குத் திரும்பி வந்துசேர்ந்தார்கள். பின் தனதேவன் லாபத்தில் பாதியைத் தனக்குக் கொடுக்கும்படி ஜினதேவனைக் கேட்டான். அவன் அதனைக் கொடுக்க மறுத்ததால், இருவருக்கும் சண்டையுண்டாயிற்று. "அயோக்கியர்கள் பொருளின் நிமித்தம், எந்தப் பாபகாரியத்தைத்தான் செய்யத் துணியமாட்டார்கள்?" அதனால், தனதேவன் மிக்க துக்கத்தையடைந்து பல பெரியோர்களிடத்திலும், அரச சபையிலும் தன் வியவகாரத்தைச் சொல்லிக்கொள்ளலானான். அரசன் ஜினதேவனையழைத்து விசாரிக்குமளவில், முன்னால் சாட்சிகளில்லை என்ற

காரணத்தினால் ஜினதேவன், "எனக்கு யுக்தமான ஒரு பாகத்தைக் கொடுப்பதாகக் கூறினேனே யல்லாது, ப்ராதி கொடுப்பதாகக் கூறவில்லை," என்றான். அரசன் இதனைப் பரிக்ஷிக்க வெண்ணி, இருவர் கையிலும் அக்கினியை இடும்படித் தன் சேவகர்களுக்கு உத்தரவிட்டான். ஸத்யவிரத மகாத்மியத்தால் அக்கினி தனதேவனைச் சுடவில்லை. ஜினதேவனோ அதனைத் தாங்கமுடியாமல் கைநழுவ விட்டுவிட்டான். இதனால், அரசன் உண்மையையறிந்து, ஜினதேவனுடைய சொத்துக்கள் பூராவையும் தனதேவனுக்குக் கொடுக்குமாறு கட்டளையிட்டதுடன், ஜினதேவனுக்குக் கடுமையான தண்டனைகளையும் விதித்தான்.

தனதேவன் ஸத்ய விரதமகிமையால் அரசன் முதலியோரால் நன்கு புகழ்ந்து பூஜிக்கப்பட்டான்.

---

அஸ்தேயம் (களவாடாமை) என்னும் அணுவிரதத்தினால் சிறப்படைந்த

## 11. பாரிஷேண குமாரன் கதை.

முன் 9-வது பக்கம் 6-வது ஸ்திதிகரண அங்கத்திற்கு உதாரணமாகச் சொல்லப்பட்டக் கதையை நோக்குக.

---

பிரம்மசர்ய அணுவிரதத்தால் சிறப்படைந்த

## 12. நீலி நங்கை கதை.

லாட தேசத்தில், பிரகுகச்சம் என்னும் நகரில், வசுபாலன் என்னும் ஓர் அரசன் அரசு செலுத்தியிருந்தான். அந்நகரில் ஜினதத்தன் என்னும் வைசியனுக்கும், அவன் மனைவி ஜினதத்தை என்பவளுக்கும் நீலி என்ற ஒரு புத்திரி இருந்தாள். இவள் மிக்க ரூபலாவண்ணியத்தையும், நற்குணத்தையும் பெற்றிருந்தாள். அதே நகரில் சமுத்திரதத்தன் என்ற ஸ்ரேஷ்டிக்கும்,

சாகரதத்தை என்ற அவன் மனைவிக்கும் சாகரதத்தன் என்ற ஒரு மைந்தன் இருந்தான்.

ஒரு நாள் நீலிநங்கை சர்வாபரண பூஷிதையாகி மிக்க அலங்காரத்துடன் ஸ்ரீ ஜினசைத்யாலயத்தை யடைந்து, பூஜையினைச் செய்து பின் காயோத்ஸர்க்கமாய் அங்கேயே தியானத்திலிருந்தாள். அப்போது அங்கு மித்திரர்களுடன் வந்த சாகர தத்தன் அவளைக் கண்டு, அவளழகிலீடுபட்டு, "இவள் ஓர் தேவ கன்னிகையோ அல்லது மானிட ஸ்திரீதானோ" என்று ஐயமுற்றுத் தன் மித்திரர்களை உசாவினான். அதற்கவர்கள், "இவள் தேவகன்னிகையல்லள். இவள் இந்நகரிலுள்ள ஜினதத்த ஸ்ரேஷ்டியின் புதல்வியாவாள்," எனக் கூறினார்கள். அதனைக் கேட்டதும் அவன் அவளையே மணப்பது என்னும் இச்சையினை உடையவனாகித், தன் இருப்பிடம் ஏகித், தன் தகப்பனிடம் அதனைக் கூறினான். தகப்பன், "நாம் புத்த மதஸ்தர்கள். ஜின தத்தனோ ஜினமதஸ்தன். அவன் நம்மை இழிவாகக் கருதியுளன். அவ்வாறாக அவன் நமக்கு எப்படிப் பெண் கொடுப்பன்? கொடான்" என்றான். பிறகு தந்தையும் தநயனுமாக ஒருவாறு யோஜித்துத் தாங்கள் ஜின மதத்தில் சேர்ந்து ஜின மதஸ்தர்களாகிவிட்டதாகப் புரட்டுகள் செய்து, ஜினதத்தனை ஏமாற்றினார்கள். ஜினதத்தனும் அதனை வாஸ்தவமென்று நம்பித் தன் பெண்ணை சாகரதத்தனுக்கு ஒரு நல்ல சுப முகூர்த்தத்தில் விதிப்படி மணம் செய்துகொடுத்தான்.

பிறகு நீலி தன் புருஷன் வீடு சென்றதும், சாகரதத்தனும் சமுத்திரதத்தனுமாகச் சேர்ந்து, அவளைத் தன் தகப்பன் வீட்டுக்குச் செல்லாதவாறு தடை செய்து, தாங்கள் முன்போல் புத்த மதானுஷ்டானங்களை அனுஷ்டிக்கலானார்கள். நீலியோ புருஷன் வீட்டிலிருந்தபடியே தான் மட்டும் ஜினமத அனுஷ்டானங்களை விடாது நடத்தி வரலானாள். இங்ஙனம் நிகழுங்கால், புத்தமத ஸ்ரவணத்தினாலும், தானத்தினாலும், ஸத் ஸம்ஸர்க்கத்தினாலும் நாளடைவில் அவள் புத்த மதத்தில் ஈடுபடுவாள் எனக் கருதித் தந்தையும் தநயனும் அவளைத் தினந்தோறும் புத்தமதத் துறவிகளை வரவேற்று உபசரிக்கும்படிக் கட்டளையிட்டார்கள். அதனால் அவள் ஒரு நாள் புத்தமத ஸந்நியாசிகள் இருவரை அழைத்து

வந்து தன் இல்லத்திலிருத்தி, அவர்களுக்குத் தெரியாமல் அவர்கள் செருப்புக்களில் ஒவ்வொன்றை எடுத்துத் துண்டுதுண்டுகளாக நறுக்கிச் சமையல்செய்து முனிவர்களுக்கு ஆகாரதானத்தைச்செய்துவைத்தாள். ஆகாரமுண்டபின் அவர்கள் வெளியில் போகத் தங்கள் செருப்புக்களைப்பார்க்க ஒவ்வொன்றைக்காணாது, திகைத்துத் தேடலுற்றார்கள். அப்போது நீலிநங்கை அவர்களைப் பார்த்துத் தங்கள் ஞானதிருஷ்டியினால் அவை எங்குள்ளன என்று தேடலாகாதா? என்றனள். அத்தகைய ஞானம் எங்களுக்கு இன்னும் ஏற்படவில்லை என்று அவர்கள் கூறினார்கள். அதன்மேல் நீலி, "அப்படியானால் தேவரீருடைய வயிற்றில்தான் இருக்கவேண்டும். அப்படி என் வசனத்தில் நம்பிக்கை இல்லையாயின் வாந்தி செய்து பாருங்கள்" என்றாள். உடனே அவர்கள் தங்கள் கைகளைத் தொண்டையில்விட்டுப் பலாத்காரத்தினால் வாந்தியினைச்செய்ய அதில் செருப்புத்துண்டுகளைக் கண்டு அத்துறவிகளும் அவ்வீட்டிலுள்ளோரும் மிக்க துக்கத்தினையும் மானபங்கத்தையுமடைந்து, நீலிநங்கையின்மேல் துவேஷமுங் கொண்டார்கள்.

பிறகு நீலியினுடைய புருஷனின் உடன்பிறந்தாள் நீலிக்குப் பரபுருஷ கமனமுண்டென்று ஓர் பொய்ப்பெயர் புனையலுற்றாள். இதையறிந்த நீலி, ஜினபவனமடைந்து, "எனக்கிந்தப் பழி நீங்கினாலல்லது நான் ஆகாரம் கொள்ளேன்," எனப் பிரதிக்ஞை செய்திருந்தாள். அவ்வாறாக அங்குப் புரதேவதை தோன்றி அவளுக்கு, "சீக்கிரமே நான் உன் பழியைப் போக்குவேன்" எனக் கூறிப் போனதுடன், அரசன் கனவிலும் "நாளைக் காலை உன் நகர்ப்புரத்துக் கதவுகள் மூடப்பட்டிருக்கும். அவை ஓர் சில மகாத்மியத்தையுடைய ஸ்திரீயின் இடது கால் பட்டால் மாத்திரந்தான் திறக்கும்" எனக் கூறிச் சென்றது. அதன்படியே மறுநாட் காலையில் அக்கதவுகள் திறக்கக்கூடாமற் போக, அதனைக் காவலாளிகளால் அறிந்த அரசன், அந்நகரத்துள்ள எல்லா ஸ்திரிகளையும் வரவழைத்து அவர்கள் கால் படும்படிச் செய்தான். ஒருவராலும் அவை திறக்கப்படாமற் போகக் கடைசியில் நீலிநங்கையின் இடது கால் பட்டமாத்திரத்தில் திறக்கப்பட்டன. அதனைக் கண்ட அரசன் முதலிய யாவரும் சந்தோஷமடைந்து, நீலிநங்கையைப் புகழ்ந்து பூஜித்தார்கள்.

இதனால் சீலவிரத மகிமையினால் நீலிநங்கை தேவதையாலும், அரசன் முதலிய ஜனங்களாலும் போற்றிப் பூஜிக்கப்பட்டது அறியத்தக்கது.

---

பரிமித பரிக்கிரஹம் என்னும் அணுவிரதத்தினால் சிறப்படைந்த

## 13. ஜயகுமாரன் கதை.

குருஜாங்கல தேசத்து அஸ்தினபுரத்தரசன் குருவம்சத்து சோமப்பிரபன் என்பவனுக்கு ஜயகுமாரன் என்ற ஓர் புத்திரன் இருந்தான். அவனுக்கு சுலோசனை என்ற மனைவி இருந்தாள். அவ்விருவரும் ஒருகால் பூர்வபவ ஞானமுடையவர்களாகிப் பல வித்தைகளின் உதவியால், பூர்வஜன்மத்தில் தாங்களிருந்த ஹிரண்யவர்மாவும், பிரபாவதியுமாகிய ரூபத்தை யடைந்து, மேரு முதலிய பர்வத சிகரங்களிலுள்ள அக்கிருத்திரிம ஜினசைத்யாலயங்களைத் தரிசித்து வரலானார்கள். அப்போது அவர்கள் கைலாச கிரியில் ஸ்ரீ பரதேஸ்வர சக்கரவர்த்தியால் பிரதிஷ்டை செய்யப் பட்டிருந்த இருபத்துநான்கு ஜின தீர்த்தங்கரர்களின் பிம்பங்களைப் பூஜித்தார்கள். அது சமயம் சௌதர்மேந்திரன் என்ற இந்திரன் சபையில் "பரிக்கிரஹபரிமாண விரதத்தில் ஜயகுமாரனே மிக்கான் எனப் பேசப்பட்டது. அதனைப் பரிக்ஷிக்கவெண்ணிய இரவிப்பிரபன் என்ற அமரன், மிக்க ரூபலாவண்ணிய யௌவன ஸ்திரீ ரூபங்கொண்டு விலாஸினி முதலிய இதர ஸ்திரீகளுடன் அங்கு ஜயகுமாரன் முன் தோன்றி, "நான், நின் மனைவி சுலோசனையின் ஸ்வயம்வர சமயத்தில் உம்மோடு சண்டையிட்ட நமி என்ற வித்யாதரனுடைய மனைவியாவேன். என் பெயர் சுரூபை என்பதாகும். என்னைத் தாங்களடையும் பக்ஷத்தில் அநேக வித்தைகளை யடைவதுடன் இராஜ்யமும் கிடைக்கும்" எனக் கூறினள். அதற்கு ஜயகுமாரன், "ஏ, ஸ்திரீயே! சுலோசனையைத் தவிர வேறு ஸ்திரீகள் எனக்குத் தாய்க்குச் சமானமானவர்கள்" என்று கூறினன். உடனே அமரன் ஸ்திரீ ரூபத்தினால் அவனை ஆலிங்கனஞ் செய்தல் முதலிய பல சேஷ்டைகளைச் செய்தும்

அவன் தன் நிலையில் தளராது நின்றான். அதனைக் கண்ட தேவன் தன் ஸ்வயரூபத்தைக் காட்டித் தன் வரலாற்றினையுங் கூறி, வஸ்திராபரணங்களால் அவனைப் பூஜித்துத் தன்னிருப்பிட மடைந்தான்.

இதனால் ஜினதத்தன், பரிக்கிரஹ பரிமாண விரதத்திற்கு உதாரணமாகக் கூறப்பட்டான்.

---

## கொலையினால் கேடடைந்த
# 14. தனஸ்ரீ கதை.

லாட தேசத்தில் குருகச்சமென்னும் நகரில் லோகபாலன் என்பவன் அரசு செலுத்தி வந்தான். அப்போது அந்நகரில் தனபாலன் என்ற வைசியனும், தனஸ்ரீ என்னும் அவன் மனைவியு மிருந்தார்கள். இவர்களுக்குச் சுந்தரி என்னும் ஒரு குமாரியும், குணபாலன் என்ற குமாரனும் இருந்தார்கள். இவ்விரு குழந் தைகளும் பிறப்பதற்குமுந்தியே தனபாலனால் எடுத்து வளர்க் கப்பட்ட குண்டலன் என்ற ஒரு வாலிபனும் இருந்தான். கொஞ்சநாளில் தனபாலஸ்ரேஷ்டி இறந்துபோகத் தனஸ்ரீயாகிய அவன் மனைவி தன் வளர்ப்புப் பிள்ளையான குண்டலனுடன் இஷ்ட விஷய காமபோகங்களில் பிரவர்த்திக்கலானாள். இது விஷயம் குணபாலனுக்கும் தெரியவந்தது. இவ்வளவில் தனஸ்ரீ குண்டலனையழைத்து, "குணபாலன் நம் நடத்தையில் சந்தேகங் கொண்டு வெறுப்புற்றிருக்கிறான். சிறிது காலத்தில் அவனால் நமக்கு இடையூறுகள் ஏற்படக்கூடும். ஆகையால் அவனை நாளைக்காலை விடிவதற்குள் நம் மாடுகளை அடுத்தக் காட்டுக்கு ஓட்டிவரச் செய்கிறேன். அங்குச்சென்று நீ அவனைக் கொன்று வருவாயானால் நாம் சௌக்கியமாய் வாழலாம்" என்று இரகசிய மாய்க் கூறினள். இதனை ஒற்றுக்கேட்டிருந்த சுந்தரி, குணபால னிடம் தெரிவித்து ஜாக்கிரதையாயிருக்குமாறு எச்சரித்தாள். மறுநாள் அவ்வாறே தனஸ்ரீயால் அனுப்பப்பட்ட குணபாலன் மாடுகளை ஓட்டிப் போய்க் காட்டில் மேயவிட்டு அங்குக் கிடந்த

ஒரு கட்டையின்மேல் தன் வேஷ்டியை மூடித் தான் ஓரிடத்தில் பதுங்கியிருந்தான். உடனே அங்கு வந்த குண்டலன், குண பாலன் படுத்திருக்கிறான் என்றெண்ணி, அக்கட்டையைத் தன் கைவாளால் வெட்டினான். திடீரெனக் குணபாலன் பாய்ந்து அவன் கத்தியைப் பிடுங்கி அவனை வெட்டிவிட்டு அக்கத்தியுடன் வீடு திரும்பினான். அவனைக் கண்டதும் தனஸ்ரீ, "குண்டலன் எங்கே?" என்று வினவினள். அதற்கு அவன் "இக்கத்தியைக் கேள். அது கூறும்" என்றான். இரத்தம் தோய்ந்த அக்கத்தி யைக் கண்டதும், குண்டலனை இவன் வெட்டிவிட்டான் என யோஜித்துச் சரேலென்று அக்கத்தியைப் பிடுங்கிக் குணபாலனை வெட்டித் தீர்த்தாள். உடனே சுந்தரி அங்கிருந்த உலக்கையை எடுத்து ஓங்கித் தன் தாயின் மண்டையிலடித்தாள். இக்கலக் கத்தில் அரசாங்கச் சேவகர்கள் அங்கே வந்து அவர்களை இழுத் துப்போய் அரசன் முன் நிறுத்தி, நடந்ததைக் கூறினார்கள். அரசனும் நன்கு விசாரித்துத் தனஸ்ரீக்குச் சகித்தற்கரிய கடுந் தண்டனைகளை விதித்தான். அத்துடன் தனஸ்ரீ பலராலும் இகழப்பட்டும், பல துன்பங்களை யனுபவித்தும் துர்க்கதியை யடைந்தாள்.

---

## பொய்யினால் கேடடைந்த
## 15. சத்தியகோஷன் கதை.

ஜம்பூத்வீபத்துப் பரத க்ஷேத்திரத்தில் சிம்மபுரமென்ற நகரத்தரசன் சிம்மசேனன்பால் ஸ்ரீபூதி என்னும் பிராமணன் மந்திரியாயிருந்தான். அவன் சத்திய வசனத்தையே யுடையவ னகையால் அவனுக்குச் சத்தியகோஷன் என்னும் பெயர் வழங்க லாயிற்று. இவ்வாறிருக்கும் நாளில், பத்மஷண்டபுரம் என்ற நகரினின்றும் பத்ரமித்திரன் என்ற வணிகன் இரத்தினத்வீபம் முதலிய தீபாந்தரங்களிற் சென்று மிக்க திரவியத்தைச் சம்பா தித்துத் திரும்பி வரும் வழியில் இச் சிம்மபுரத்தை வந்தடைந் தான். அவ்வளவில் அவன் அங்கேயே வசிக்க எண்ணித் தன் உற்றார் உறவினர்களை அங்கு அழைத்து வந்துவிட உத்தேசித்

தான். அப்போது தன்னிடமுள்ள ஒரு விலையுயர்ந்த இரத்தினச் செப்பை அங்குச் சத்தியசந்தனாய் விளங்கிய சத்தியகோஷனிடம் இரகசியமாய்க் கொடுத்துப் பத்திரப்படுத்திவிட்டுத் தன் ஊருக்குச்சென்றான். அங்கிருந்து தன் உற்றார்களையழைத்து வந்ததும் வணிகன் சத்தியகோஷனிடம் சென்று தன் செப்பைக் கொடுக்குமாறு கேட்டான். சத்தியகோஷனோ அதனைத் தான் அடைய எண்ணி அவ்வணிகனிடம் "நீ என்ன பைத்தியக்காரனா? உன்னை யாவது உன் இரத்தினச் செப்பையாவது கண்டது யார்?" என்று மிரட்டி விரட்டிவிட்டான். பின் பத்ரமித்திரன் அதனை அரசனிடமும் கூறினன். அரசன் சத்தியகோஷனை விசாரிக்க, அவனும் தான் அதனைக் கண்டதேயில்லை. இவனோர் பைத்தியம்போலும் என்று அரசன் நம்பும்படிக் கூறினன். அதனைக் கேட்டு அரசன் அதற்குமேல் ஒன்றுஞ் செய்யாது விட்டான். அதனால், அவ் வணிகன் நாள்தோறும் கண்ட இடங்களிலும் இதைப்பற்றிக் கூறிப் பின் அரண்மனையின் எதிரிலுள்ள ஒரு மரத்தின்மேல் நின்று எல்லோரும் கேட்கும்படி சத்தியகோஷனின் செய்கையை உரத்துக் கூவிக்கொண்டே இருந்தான். அதனைக் கேட்ட இராஜ பத்னியாகிய இராமதத்தாதேவி, "இவன் உன்மத்தனாயின் கண்ட விஷயங்களைக் கண்டபடி உளறுவன். ஆயின், இவன் ஒரே விஷயத்தினை முன் பின் மாறாது ஒரே விதமாய்க் கூறுகின்றானையால் உன்மத்தனாயிரான்" எனக் கருதி அவனைத் தன் எதிரில் வரவழைத்து விசாரித்து உண்மையையறிந்து பின் அதனைக் கண்டுபிடிக்க உத்தேசித்தனள். அதனால் அவள் அரசனிடம் உத்தரவு பெற்று, மந்திரி சத்தியகோஷனுடன் சூதாடி அவனைத் தோற்கடித்து அவன் மோதிரம், யக்ஞோபவீதம் முதலியவற்றை ஜயித்தாள். அவைகளை மந்திரியறியாமல் அப்போதே தன் தோழி நிபுணமதி என்பவளிடம் கொடுத்து, மந்திரியினுடைய பாண்டாகாரியினிடமனுப்பி, அவைகளைக் காண்பித்து, பத்ரமித்திரனுடைய இரத்தினச்செப்பை வாங்கி வரும்படி மந்திரி கூறினதாகக் கூறச்சொன்னாள். அவளுமப்படியே சென்று தன் சுய சாமர்த்தியத்தினால் பாண்டாகாரியை ஏமாற்றி அச்செப்பை வாங்கிவந்து அரசியிடம் கொடுத்தாள். அரசியும் அதனை அரசனிடம் சேர்த்தாள். அதனைக்கண்டு அரசன் மிக்க கோபத்தையடைந்து மந்திரிக்குக் கடுமையான தண்டனைகளை

விதித்து, அவன் சொத்துக்களையும் பறிமுதல் செய்து அவனையும் நாட்டைவிட்டு ஓட்டினன். பின் அரசன் பல இரத்தினச் செப்புகளுடன் சேர்த்து அந்த இரத்தினச் செப்பையும் வைத்து பத்ரமித்திரனையழைத்து அவன் செப்பை எடுத்துக்கொள்ளும் படிக் கூறினன். வணிகனும் அவற்றுள் தன்னுடையதையே தேடி எடுத்தான். அதனைக்கண்ட அரசன் சந்தோஷங்கொண்டு அவனுக்குப் பல பரிசுகளையும், ஸ்ரேஷ்டி முக்கிய பட்டத்தையு மளித்தான். சத்தியகோஷனே சத்தியமின்மையால் பல துன் பங்களை யனுபவித்துப் பின் காலாந்தரத்தில் மரித்து அரசன் பாண்டாகாரத்தில் அகந்தன் என்னும் சர்ப்பமாகப் பிறந்தனன். இக்கதை மேருமந்தரபுராணம் மூன்றுவது பத்ரமித்திரன் சருக்கத் தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

---

## களவினுல் கேடடைந்த
# 16. உறித்தாபஸன் கதை.

**வ**த்ஸ தேசத்தில் கௌசம்பி என்னும் நகரில் சிம்மரதன் என்னும் அரசன் அரசுபுரிந்து வந்தான். அந்நகரின் புரத்தில் ஒரு திருடன் அன்னியருடைய பூமியைக்கூட மிதிப்பதில்லை என்று தோன்றும்படி, ஓர் ஆலமரத்தில் உறியொன்றைக் கட்டி, அதிலிருந்துத் தவம் செய்வதுபோல் பகல் முழுதும் நடித்து, இரவு நடுயாமம் ஆனதும் அதன் நின்றும் நீங்கி நகரினுள் சென்று, பல பொருள்களைத் திருடி வந்து ஓரிடத்தில் புதைத்து வைத்துக்கொண்டிருப்பானுன்.

நகரில் திருட்டு அதிகமானதைக் கேள்வியுற்ற அரசன், காவலர் தலைவனைக் கூவி, "இன்று முதல் ஏழு நாளைக்குள், அத்தகைய மாயத்திருடனை நீ கண்டுபிடிக்காவிடில் சிரச்சேதம் செய்யப்படுவாய்" என்று உத்தரவிட்டான். அப்படியே அவன் இரண்டு நாள் முயற்சித்தும் பயன்படாதுபோக, மூன்றும் நாள் மிகக் கவலையுற்றுத் தன் வீட்டில் தங்கினன். அப்போது ஒரு பிராம்மணன் அங்குவந்து அவனை அன்னம் இடுமாறு யாசித் தான். அப்போது தளவரன், "என் உயிருக்கு ஆபத்து நேரிட

இருக்கும் இச்சமயத்தில் நீ போஜனம் யாசிக்கின்றாய். என்ன சொல்வதென்று எனக்கொன்றும் விளங்கவில்லை," என்று கூறினன். அதைக் கேட்ட பிராம்மணன் நிகழ்ந்த வரலாறுகளை அவன்பால் கேட்டு உணர்ந்தான். பின்பு அப்பிராமணன் "சரி, அவ்வுறித்தாபசனே கள்வன் என்று நான் நிச்சயமாய் நம்பு கிறேன். சற்று என் கதையைக் கேட்பாயாக," என்றுக் கூற லுற்றான்.

i "என் மனைவி, பிற புருஷர்கள் தன்மேல் படக்கூடாது என்ற கொள்கையினால், தன் பிள்ளைக்குப் பால்கொடுக்கும்போது கூட, பிள்ளையின் சரீரம் தன் மேல் படாதபடிச் சேலையால் தன்னுடம்பை மூடிக்கொள்வாள். இவ்வித மாயச் செய்கையைக் கண்ட நான், இவள் மிக்க பதிவிரதை என்றே நம்பியிருந்தேன். ஆனால் அவள் என்னை ஏமாற்றி, ஒரு நாள் இரவில், ஒரு மாட்டிடையனுடன் சம்மந்தப்பட்டிருந்ததை நான் நேரில் கண்டு வெறுப்படைந்து சந்நியாசியானேன்.

ii அப்போது என்னிடமிருந்த திரவியத்தை ஒரு பொன் கம்பியாகச் செய்து அதை ஒரு கைத்தடியில் அடக்கஞ் செய்து ஊன்றுகோலாக உபயோகித்து வந்தேன். சிறிது நாளில் என்னுடன் வந்துசேர்ந்த வாலிபன் ஒருவன், நான் தூங்கும் போது அக்கழியை என் வயிற்றின்கீழ் வைத்துக்கொள்வதைக் குறிப்பாய் அறிந்துகொண்டான். அன்று முதல் அவன், தான் பிறர் பொருளைத் துரும்புகூட இச்சியாதவன் என்று நான் நம்பும் படி, நடந்துகொண்டு வரலானான். இவ்வளவில் ஒரு நாள் இரவு, ஒரு நகருக்குச் சமீபம் செல்லும்போது அவன், "இருள் அதிக மாயிருக்கிறது. தாங்கள் இங்கேயே தங்கியிருங்கள். நான் சென்று நகரில் பிக்ஷை வாங்கிவருகிறேன்" என்று சொல்லிச் சற்று தூரம் சென்றதும், திரும்பிவந்து, "நகரில் நாய்கள் உபத் திரவம் அதிகமாயிருப்பதால், சற்றுத் தடியைக் கொடுங்கள்," என்று கேட்டான். இதை மாயமென்று அறியாமல் நான் கழியைக் கொடுத்துவிட, அதை எடுத்துப்போனவன் நாளது வரையில் திரும்பவேயில்லை.

iii பிறகு நான் ஒரு காட்டின் வழியே செல்லும்போது, சில பக்ஷிகள் ஒன்றுசேர்ந்து ஒரு கிழப் பக்ஷி சொல்லைக்கேட்டு,

அதன் அலகைக் கட்டிவிட்டுத் தங்கள் குஞ்சுகளுக்குக் காவலாய் அதை வைத்துவிட்டு, அவைகள் இரைதேடச் சென்றன. அப் பக்ஷிகள் அப்பால் சென்றதும் கிழப் பக்ஷி அக்கட்டைத் தன் கால்களால் கழற்றி வைத்துவிட்டு, அக்குஞ்சுகளில் வேண்டிய மட்டும் புசித்துவிட்டுப் பின் பக்ஷிகள் வருவதற்குள், கட்டை முன்போல் மாட்டிக்கொண்டு, மிக யோக்கியமுள்ளதைப்போல் நடித்ததைக் கண்டு ஆச்சரியமுற்றேன்.

iv அப்பால் நான் செல்லுங்கால் வழியில், அபஸரன் என்ற கள்வனொருவன் தன் தலையில் பெரிய கல் ஒன்றை வைத்துக்கொண்டு பகல் முழுதும் தவஞ்செய்வதாக நடித்து, இரவு வந்ததும் அவ்வழியே செல்லும் பிரயாணிகளின் தலையில் அக் கல்லைப் போட்டுக் கொன்றுவிட்டு, அவர்களிடமுள்ள பொருள் களை யபகரித்துவருவதை, நேரில் கண்டு நான் ஆச்சரியமடைந் தேன்.

இவற்றால் இவ்வுறித்தாபஸனே ஒருக்கால் கள்வனாகயிருத்தல் கூடும். அதனை நானே கண்டுபிடிக்கிறேன் என்றான். அப்படியே அப்பிராமணன் அவ்வுறித்தாபஸன் இருக்குமிடஞ் சென்று, தான் ஒரு பொட்டைபனாக நடித்து அங்கேயே தங்கினான். அதனைக்கண்ட உறித்தாபஸன், அவனெதிரில் வந்து, அவனை வெட்டுவதுபோலும், குத்துவதுபோலும் கைஜாடைகள் காட்டிச் சோதிக்க, அவன் ஒன்றுந் தெரியாதுபோல் நடித்தான். அதனை உண்மையென்று நம்பிய உறித்தாபஸன், அவனை விட்டுத் தன் வழக்கம்போல் அன்றிரவு உறியைவிட்டிறங்கித், தன் பொருள் களையெல்லாம் ஒளித்துவைத்திருக்கும் இடத்தில் போய்ப் பார்த்து அவைகளைப் பத்திரப்படுத்திவிட்டு, மறுபடியும் உறியின் மேல் ஏறிக்கொண்டான். இதையெல்லாம் அறிந்துகொண்ட பிராமணன், மறுநாள் தளவானிடம்வந்து கூற, அவனும் பல ஆட்களுடன் சென்று அவ்வுறித்தாபஸனைப் பிடித்து, அவனால் களவாடிச் சேர்த்துவைக்கப்பட்ட பொருள்களுடன் அரசன் முன் கொண்டுவந்து நிறுத்தினான். அவனுக்கு அரசன் பல கடுமையான தண்டனைகளை விதிக்க, அதனால் அவன் துக்க மடைந்து மரித்து, மறு ஜன்மத்தில் துர்க்கதியை யடைந்தான்.

---

காமத்தினுல் கேடடைந்த

## 17. யமதண்டன் கதை.

அஹீர தேசத்தில் நாசிக்ய நகரத்தில், கனகரதன் என்ற அரசனும், கனகமாலே என்ற அவன் மனைவியும் அரசுசெலுத்தியிருந்தபோது, அந்நாட்டில் யமதண்டன் என்ற ஒரு தளவரன் இருந்தான். அவன் சீலாசாரம் கொஞ்சமேனும் இல்லாதவன். அவனுடைய தாயாராகிய வஸுந்தரி என்பவளும் வியபசாரித்வமுள்ளவளாய் இருந்தாள். அவள் ஒருநாளிரவு, தன் மருமகள் இடத்தில் சில ஆபரணங்களை வாங்கித் தன்னை யலங்கரித்துக்கொண்டு, பரபுருஷ சேவை செய்யும்பொருட்டுக் குறிப்பிட்ட ஓர் இடத்துக்குச் சென்றுள். யமதண்டனும் முந்தியே அவ்விடத்துக்குத் தன்பாட்டில் சென்றிருந்தான். அங்கு இருட்டில் அவர்கள் ஒருவரையொருவர் அறியாமல், காமசேவை செய்தனர். பின் அவள் அவனுடைய அன்பைப் பெறவேண்டித் தான் அணிந்திருந்த நகைகளில் ஒன்றை அவனுக்குக் கொடுத்தாள். அவன் அதை வாங்கிப்போய்த் தன் மனைவி கையில் கொடுத்தான். அதைக்கண்ட அவன் மனைவி, "இது என்னுடைய நகையாயிற்றே. நேற்று சாயங்காலம் என் மாமியார் கேட்டதனுல் கொடுத்தேன்" என்றுள். அதைக்கேட்ட தளவரன் முந்தினநாள் தான் சேர்ந்திருந்த ஸ்திரீ, தன் தாய்தான் என்று அறிந்தான். இருந்தாலும், மகா பாபியாகிய அவன் அதே காரியத்தை மறுநாள் முதற்கொண்டும் செய்துவரத் தலைப்பட்டான். இது விஷயம் அவன் மனைவிக்கும் தெரியவந்தது. அவள் ஒரு நாள் புருஷன்மேல் கோபமாயிருந்த சமயம், அங்கு வந்த வண்ணுத்தியிடம் அதுவிஷயத்தைக் கூறிவிட்டாள். வண்ணுத்தி பூக்காரியிடம் அதைத் தெரிவித்தாள். பூக்காரி பூக்கட்டிக்கொண்டு அரண்மனைக்குச் சென்றபோது கனகமாலை அரசியார் அப்பூக்காரியை, "ஊரில் ஏதேனும் விசேஷமுண்டா?" என்று கேட்டாள். அப்போது அப்பூக்காரி இத்தளவரன் விஷயத்தை அரசியிடம் கூறினள். அரசி ஆச்சரியமுற்று அரசனிடம் அதைத் தெரிவித்தாள். அரசன், உடனே அதன் உண்மையைத் தன் ஒற்றர்களைக்கொண்டு கண்டுபிடித்து, அவ்விருவர்களுக்கும் பல துன்பங்களும், மானக்கேடும் உண்டாகத் தக்க

தண்டனைகளை விதித்தான். தலைவரனும், அவன் தாயும் அத் தண்டனைகளை யனுபவித்துக் கஷ்டப்பட்டுப் பின் மரித்துத் துர்க்கதியை அடைந்தார்கள்.

---

பரிமித பரிக்கிரஹமின்மையால் (பேராசையால்) கேடடைந்த

## 18. தாடி வெண்ணெய்க்காரன் கதை.

இப் பரதகண்டத்து அயோத்திமா நகரில் பவதத்தன் என்ற ஒரு வர்த்தகனுக்கும், தனதத்தை என்ற அவன் மனைவிக்கும், உலுப்ததத்தன் என்ற ஒரு குமாரன் இருந்தான். அவன் பல தீவாந்தரங்களைச் சுற்றி, வேண்டிய திரவியங்களைச் சம்பாதித்துக் கொண்டு திரும்பி வரும்போது, வழியில் திருடர்கள் அவனை மறித்து அவன் பொருள்களைக் கவர்ந்து சென்றார்கள். உலுப்தன் கைச்செலவுக்கும் பொருளின்றி அலைந்து திரியலானான். அவ் வளவில், அங்கோர் இடைச்சியினிடம் கொஞ்சம் மோர் வாங்கிக் குடித்தான். அப்போது அவன் தாடியில் கொஞ்சம் வெண்ணெய் ஒட்டிக்கொள்ள அதனை எடுத்துப்பார்த்து, இவ்விதமே தினமும் செய்து வெண்ணெயைச் சேகரிக்கத் தீர்மானித்தான். அவன், அங்கோர் குடிசையையமைத்து அதிலிருந்துகொண்டு, அவ் வழியே செல்லும் மோர்க்குடங்களில் பல உபாயங்களால் தன் தாடியை நனைத்து, வெண்ணெய் எடுக்கலானான். அதனால் அவனுக்குத் தாடி வெண்ணெய்க்காரன் என்ற பெயரும் உண்டா யிற்று. இவ்வாறாக, அவன் நாளடைவில் ஒரு சேர் வெண் ணெயைச் சேர்த்து ஓர் கலயத்திலிட்டு, அதனைக் குடிசையில் ஓர் இடத்தில் உறி ஒன்றைக் கட்டி, அதில் வைத்துக் காப்பாற்றி வரலானான். அப்போது குளிர்காலமானதால் அவ்வுறியின் அடியில் தன் காலுக்கு நேராக, ஓர் அக்னிச்சட்டியை வைத்துத் தான் படுத்துக்கொண்டு யோசிக்கலுற்றான். அதாவது:— இவ் வெண்ணெயை விற்றுக் கிடைக்கும் பணத்தைக்கொண்டு, நான் ஜவுளி முதலிய வியாபாரங்களைச்செய்து, ஏராளமாகப் பொருளைச் சேர்த்துப் பெரிய கப்பல் வியாபாரியாகலாம். பின் கிரமத்தில் தீவாந்தரங்களிற்சென்று பெருந்தனத்தைச் சேர்த்து நான்

அரசனுகவும், சக்கரவர்த்தியாகவும் ஆகலாம். அப்போது ஏழடுக்கு உப்பரிகையின்மேல் நான் பஞ்சணைமெத்தையில் படுத்திருக்குங்கால், சுபலக்ஷணமுள்ள ஸ்திரீ இரத்தினம் எனக்கு மனைவியாகவமைந்து கால் பிடிப்பாள். அக்கால், விளையாட்டாக அவளுக்குக் கால் பிடிக்கத் தெரியவில்லை என்று இப்படி உதைப்பேன் என்று ஓர் உதை உதைத்தான். அவ்வளவில், அவ்வுதை உறியின்மேல் பட்டு, வெண்ணெய் அக்னிச்சட்டியில் விழுந்தது. தீ, குடிசையின் முன்னும் பின்னும் பிடித்து எறிந்தது. அதனின்றும் வெளிவர இயலாது உலுப்தன் உள்ளேயே அகப்பட்டுத் தீவாய்ப்பட்டு இறந்தான். அவனுடைய துர் எண்ணத்தின் பலனுக நரககதியை அடைந்தான்.

---

### ஆஹார தானத்தால் சிறப்படைந்த

## 19. ஸ்ரீஷேண மகாராஜன் கதை.

மலைய தேசத்தில், இரத்தினசஞ்சயபுரம் என்ற நகரில் ஸ்ரீஷேண மகாராஜன் அரசனுயிருந்தான். அவனுக்கு ஸிம்ம நந்திதை, அநிந்திதை என்ற இரு மனைவியரும், இந்திரன், உபேந்திரன் என்ற இரு குமாரர்களும் இருந்தார்கள். அந்நகரில் ஸாத்யகி என்ற பிராமணன் தன் மனைவி ஜம்பு, புத்திரி ஸத்யபாமை இவர்களுடன் வசித்திருந்தான்.

பாடலிபுத்திர நகரத்தில், ருத்திரபட்டன் என்ற ஒரு பிராமணன், சில பிள்ளைகளுக்கு வேதபாடம் கற்றுவைத்துக்கொண்டிருந்தான். அவனுடைய தாசியின் வயிற்றில் பிறந்த கபிலன் என்பவன், வேத பாடங்கள் சொல்லிக்கொடுக்கும்போது அதைக் கேட்டிருந்து அதில் மிக்க தேர்ச்சியுற்றுன். அதைக் கண்ட ருத்ரபட்டன், அவன் வேதசாஸ்திரம் கற்பது தகுதியில்லை என்று நினைத்து, அவனைப் பட்டணத்தினின்றும் துரத்திவிட்டான். ஆயினும், அவன் யக்ஞோபவீதமணிந்து பிராமண கோலத்துடன் இரத்தினசஞ்சயபுரம் அடைந்தான். அங்கே இவனுடைய வித்வத்தையும், தேகவனப்பையுங்கண்ட ஸாத்யகி, இவனைப் பிராமணனென்றே நினைத்துத் தன் வீட்டிற்கு அழைத்

துப்போய்த், தன் பெண் சத்யபாமையைக் கல்லியாணம் செய்து கொடுத்துத் தன் வீட்டிலேயே வைத்துக்கொண்டான். பின் சத்யபாமை, ரதிகாலத்தில் கபிலனுடைய அசுப சேஷ்டைகளைக் கண்டு இவன் ஒரு பிராமணனாயிரான் என்று தீர்மானித்து, வருத்தப்பட்டிருந்தாள்.

இவ்வாருக, ருத்திரபட்டன் தீர்த்த யாத்திரையில் கிளம்பிப் பல க்ஷேத்திரங்களைத் தரிசித்துப் பின் இந்த நகருக்கு வந்து சேர்ந்தான். அவனைக்கண்ட கபிலன் நமஸ்கரித்துத் தன் வீட்டிற்கு அழைத்துப்போய்த், தன் தகப்பனென்று ஸத்யபாமைக்கு அறிமுகப்படுத்தி, அவனுக்கு அமுதளிக்குமாறு கூறினன். பின் சிலநாள்அவனை அங்கேயே தங்கவும் வைத்திருந்தான். அப்படித் தங்கியிருக்கையில், ஒருநாள் ஸத்யபாமை அவனுக்கு விசிஷ்டான்னங்களைச் செய்துபோட்டுச் சில திரவியங்களையுங் கொடுத்தாள். பிறகு அவள், அவன் காலைப் பிடித்துக்கொண்டு "ஐயா, என் பர்த்தாவாகிய கபிலனுக்கு உம்முடைய பழக்கங்கள் ஒன்றும் இல்லையே; இவன் பிராமணனல்லனே?" என்று உருக்கமாகக் கேட்டாள். ருத்திரபட்டன் அவள்மேல் இரக்கங்கொண்டு, கபிலன் தன் தாஸியினுடைய புத்திரன் என்பதை வெளிப்படுத்தினன். இதன்மேல் ஸத்யபாமை, ஓர் ஈனக்குலத்தானுடன் சேர்ந்து வாழ்வதைக்காட்டிலும் விஷத்தைத்தின்று இறப்பதே மேலென்று நினைத்தாள். ஆயினும், தனக்குச் சீலபங்கம் நேரிடாதிருக்க, அந்நகரத்து அரசியான சிம்மநந்திதை என்பவளிடம் அடைக்கலமாகச் சரணமடைந்தாள். அரசியும் அவளைத் தன் புத்திரிபோல் பாவித்துக் காப்பாற்றி வரலானள்.

அவ்வாறிருக்க, ஒருநாள் அங்குவந்த அர்க்ககீர்த்தி, அமிதகதி என்ற இரு சாரணமுனிவர்களுக்கு அரசனும் அரசியும் பக்தியுடன் விதிப்படி ஆகாரதானம் செய்தார்கள். அதனல் அவர்களும், அவ்வாகார தானத்துக்கு உடந்தையாயிருந்த காரணத்தினல் ஸத்யபாமையும் உத்தம போகபூமியில் போய்த் தேவர்களாய் பிறந்தார்கள்.

ஸ்ரீஷேண மகாராஜன் தேவசுகங்களை யனுபவித்துப் பின் கிரமத்தில் ஸ்ரீ சாந்திநாதர் என்ற 16-வது தீர்த்தங்கரராக ஆனர்.

## ஔஷத தானத்தால் சிறப்படைந்த

# 20. விரஷபஸேனை கதை.

ஜனபதம் என்ற தேசத்தில் காவேரி என்னும் நகரில் ராஜா உக்ரஸேனன் என்பவன் நாடாண்டிருந்தான். அப்போது அந்நகரில் தனபதி என்ற ஸ்ரேஷ்டி, தன் மனைவி தனஸ்ரீ, புத்திரி விரஷபஸேனை, அவள் தோழி ரூபவதி என்ற இவர்களுடன் வாழ்ந்திருந்தான்.

ஒருநாள் விரஷபஸேனை ஸ்நானம் செய்த ஜலத்தில் வியாதியுள்ள ஒரு நாய் விழுந்துபுரள, அதன் நோய் நீங்கிற்று. இதனைக் கண்ட தோழி ரூபவதி, அதைப் பரிக்ஷிக்கவெண்ணி, அந்த ஜலத்தைப் பன்னிரண்டு வருஷங்களாகக் கண் தெரியாமலிருந்த தன் தாயாருடைய கண்களில் தடவ அவளும் கண் பெற்றுச் சௌக்கியமடைந்தாள். இவ்வாறாக, அவள் அன்றுமுதல் அந்த ஜலத்தைக் கொண்டு பல நோய்களைத் தீர்க்கத் தலைப்பட்டாள். அதனால் அவள் பெயர் அந்நகர் எங்கும் பரவிற்று.

இஃதிவ்வாறாக, உக்ரஸேனராஜன் தன் விரோதியான மேகபிங்களன் என்பவனை ஜயித்துவரத், தன் மந்திரி பிங்களன் என்பவனை அனுப்பினான். அவன் சத்துருவின் தேசத்துக்குச் சென்றதும் விஷஜுரம் கண்டு, சண்டையிடாமல் திரும்பிவரவேண்டியதாயிற்று. அவனும் ரூபவதி கொடுத்த ஜலத்தினால் சௌக்கியமடைந்தான். பின் உக்ரஸேனன், மந்திரியைக் கோபித்துத் தானே சண்டைக்குச் செல்ல, அவனும் நோய்வாய்ப்பட்டுத் திரும்பவேண்டியதாயிற்று. அப்போது அரசன், ரூபவதி ஜலத்தைக்கொண்டு நோய்தீர்க்கும் விஷயத்தையறிந்து, அவளை அந்த ஜலம் கொண்டுவரும்படி ஆக்ஞாபித்தான். "புத்ரி ஸ்நானஞ்செய்த ஜலத்தை அரசன் தலையில் தெளிப்பது தகுமா?" என்று, ரூபவதி ஸ்ரேஷ்டியுடனும் அவன் மனைவியுடனும் யோஜிக்கலுற்றாள். அப்போது ஸ்ரேஷ்டி, "அதனால் பாதகமில்லை. பின்னால் அரசன் கேட்டால் உண்மையைத் தெரிவித்துவிடலாம்" என்று கூறவே, ஜலத்தைக் கொண்டுபோய்த்தெளிக்க அரசனும் சௌஸ்தமடைந்தான். பின்னர், அரசன் ரூபவதியை அழைத்துக்கேட்க, அவ

ளும் விரஷபஸேனையின் விசேஷத்தைக் கூறினள். அதனைத் தெரிந்து அரசன், ஸ்ரேஷ்டியை அழைத்துப் பல மரியாதைகள் செய்து, விரஷபஸேனையைத் தனக்கு விவாஹம் செய்துகொடுக்கும்படிக் கேட்டான். அதற்கு ஸ்ரேஷ்டி, ஒரு ஆஷ்டான்ஹிக சமயம் ஸ்ரீ கோவிலுக்கு ஆராதனுபிஷேகங்களைச் செய்து, கூட்டிலடைக்கப்பட்ட பக்ஷிகளையும், சிறையிலடைக்கப்பட்டக் கைதிகளையும் விடுவிப்பதானுல் தன் பெண்ணைக் கொடுப்பதாகச் சொல்ல, அரசனும் அவ்வாறே செய்தனன். ஸ்ரேஷ்டியும் விரஷபஸேனையை விதிப்படி விவாஹம் செய்துகொடுக்க, அரசன் அவளைப் பட்டமகிஷியாக்கினுன்.

அரசன், சிறைக்கூடத்திலிருந்து கைதிகளை விட்ட காலத்தில் தவறுதலால், வாரணுசி நகரத்தரசன் பிரத்விசந்திரன் மட்டும் விடப்படாமலிருந்தான். அதனுல் வருத்தமுற்றிருந்த அவன் மனைவி நாராயணதத்தை என்பவள் தன் மந்திரிகளுடன், தன் பர்த்தாவை விடுவிக்க உபாயங்களை யோஜித்துத் தன் நகரில் விரஷபஸேனை பெயரால் ஓர் அன்னசத்திரம் ஏற்படுத்திப் பல ஜனங்களுக்கும் அன்னமிட்டுவந்தாள். அங்கிருந்துவந்த சிலரால் அதனைக் கேள்வியுற்ற ரூபவதி அரசியிடஞ் சென்று, "எனக்குத் தெரிவிக்காமல் எப்போது அவ்வித அன்னசத்திரம் கட்டினுய்?" என்று கேட்டாள். அரசி, "தனக்கு ஒன்றுந்தெரியாது; வேறு யாராவது என் பெயரால் செய்திருக்கலாம்" என்று சொல்லி, அதை விசாரிக்கும்படி அரசனிடமும் கூறினள். உடனே அரசன் ஒற்றர்களைக் கொண்டு ஆராய்ந்து உண்மையையறிந்து உடனே பிரத்விசந்திரனை விடுதலை செய்தான். விடுதலையடைந்த பிரத்விசந்திரன் அந்த அரசனையும் அரசியையும் தான் வணங்குவதுபோல் ஒரு படத்தையெழுதி அரசனிடம் காட்டி, அவனை வணங்கினுன். அதைக்கண்ட அரசன் வெகு சந்தோஷமடைந்து பிரத்விசந்திரனுக்கு அநேக பரிசுகளைக்கொடுத்து, இங்கு நடந்த விசேஷங்களை மேகபிங்களனிடம்போய்ச் சொல்லிவிட்டுப் பின் அவன் நகரம் செல்லும்படி உத்தரவிட்டான். அவனும் அவ்வாறே செய்ய, மேகபிங்களன் பயந்து தானுகவே வந்து, உக்ரசேனராஜனை வணங்கினன். அரசன் சந்தோஷமடைந்து அன்று முதல் தனக்குக் கிடைக்கும் பாகுடப் பொருள்களில் பாதியை அவனும், மற்றொரு பாதியை விரஷபஸேனையும்

அடையும்படிச் செய்வதாகக் கூறினன். அதன்படியே ஒரு நாள் தனக்குக்கிடைத்த இரு இரத்தினக் கம்பளங்களில் ஒன்றில் மேகபிங்களன் பெயரை எழுதி மேகபிங்களனிடமும், மற்றொன்றை விரஷபஸேனை பெயரை எழுதி விரஷபஸேனையிடமும் கொடுத்தான்.

பின்பு ஒரு நாள் மேகபிங்களன் போர்வையை, அவன் மனைவி போர்த்திக்கொண்டு ரூபவதி வீட்டுக்குவந்துவிட்டுத் திரும்பிப் போகும்போது, அங்கிருந்த விரஷபஸேனையினுடைய போர்வையைக் கவனியாது மாற்றி எடுத்துப்போய்விட்டாள். அதனை மேகபிங்களன் கவனியாது அணிந்து மற்றொருநாள் அரசன்முன்வர, அரசன் அதிலிருந்த விரஷபஸேனைப் பெயரைக் கண்டு அவள்பேரில் சந்தேகங்கொண்டு, கோபமடைந்து அவளைக் கடலில் தள்ளிவிடும்படிக் கட்டளையிட்டான். அவளை அரசன் ஆட்கள் அவ்வாறே தள்ளினார்கள். அப்போது அவள், "இவ் வுபத்திரவம் நீங்கினால் நான் தவத்தை மேற்கொள்வேன்" என்று பிரதிக்ஞையைச் செய்தாள். அவ்வளவில், அங்கு ஜலதேவதை தோன்றி அவளை ஒரு சிம்மாசனத்தில் அமர்த்தி அஷ்டமகா பிராதிஹார்யங்களினால் பூஜித்தது. அதைக்கேட்ட அரசன், அங்குச்சென்று அவளை வணங்கித் தன்னை மன்னிக்கும் படி வேண்டினன்.

பின், அவளை அழைத்துவரும்போது அவள் வழியில் ஒரு தோட்டத்திலிருந்த குணதரர் என்னும் ஓர் அவதிக்ஞானியைக் கண்டு வணங்கித் தன் பூர்வஜன்ம விஷயங்களைக் கூறும்படிக் கேட்டாள். அப்போது அவர் யோஜித்து "நீ முன் பவத்தில் ஒரு பார்ப்பினிப் பெண்ணாய்ப் பிறந்து, ஒரு சத்திரத்தில் கூட்டும் தொழிலையுடையவளாயிருந்தாய். அப்போது அச்சத்திரத்தின் பிராகாரத்தில் பல்லிங்காசனமாய் உட்கார்ந்து தியானத்திலிருந்த முனிதத்தர் என்ற முனிபுங்கவரை, அவர் மகிமை யறியாது, விலகி அப்பால் போகும்படிக் கூறினாய். அவர் தியானத்திலிருந்ததால் அதைக் கவனிக்கவில்லை. அதனால் கோபமுற்ற நீ, குப்பைகளைக் கூட்டி அவர் தலையில் கொட்டி விட்டுப் போய்விட்டாய். மறுநாள் காலையில் அங்குவந்த அரசன் அதனைக்கண்டு பயந்து, குப்பைகளை விலக்கி, முனிபுங்கவரை

உச்சஸ்தானத்தில் வைத்துப் பூஜித்தான். அதைக்கண்டு நீ மிகவும்பயந்து அவரைப் பன்முறை நமஸ்கரித்துப் பின், பச்சாத்தாபமடைந்து அவருக்கு ஔஷதம் முதலியன கொடுத்து அவர் உபத்திரவங்களைப் போக்கினாய். அதன் பலனால் இச்சன்மத்தில் நீ ஸர்வௌஷதி ரித்தியையுடைய சரீரத்தையடைந்தாய். முன் ஜன்மத்தில், அறியாமல் நீ முனிவருக்குச் செய்த உபத்திரவத்தின் பலனாக, இச்சன்மத்தில் வீண்பழிக்காளாகி உபத்திரவப்பட்டாய்'' என்று கூறினார். அதனைக்கேட்டு விருஷபஸேனை சம்சார சரீர விரக்தியடைந்து, ஜினதீக்ஷையையேற்றுத் தவத்தைச்செய்து, தேவனாகப் பிறந்தாள்.

---

### சாஸ்திர தானத்தால் சிறப்படைந்த

## 21. கௌண்டேஸர் (குந்த குந்தாசாரியார்) கதை.

குருமரை என்ற கிராமத்தில் ஒரு மரத்தின்மேல் இருந்த ஆகமத்தைக்கண்ட கோவிந்தன் என்ற இடையன், அதனை எடுத்துச் சிலகாலம் பூஜித்துப் பின் அங்குவந்த பத்மநந்தி என்ற முனிவரிடம் அதனைச் சேர்ப்பித்தான். அவர் அதை வனத்தில் எடுத்துப்போய், மற்றும் சில முனிவர்களுடன் வாசித்துவிட்டு, அதை அம்மரத்தின் மேலேயே வைத்துவிட்டுச் சென்றார். அதைக் கோவிந்தன் மறுபடியுங் காண, அன்றுமுதல் அதை அங்கேயே மிக்க பக்தியுடன் பூஜித்துவந்தான். பின் கிரமத்தில் அவன் மரணமடைந்து கிராமகூடம் என்ற ஊரினில், வைசிய குலத்தில், கௌண்டேசன் என்ற ஒரு வைசியனாய்ப் பிறந்தான். அப்போது அங்கு வந்த பத்மநந்தி முனிவரைக் கண்டு ஜாதிஸ்மரணையடைந்து, தீக்ஷையை யேற்று, மகாதவத்தினைச் செய்து, சகல ஸ்ருதங்களிலும் (சாஸ்திரங்களிலும்) ஸம்பூர்ண ஞானத்தை அடைந்தவன் ஆனான். அவரே, அனேக ஜைன கிரந்தங்களுக்குக் கர்த்தாவான குந்த குந்தாசாரியார் என்ற ஸ்ருதகேவலி ஆவார்.

---

ஆவாஸதானத்தால் (இருக்க இடமளித்ததால்) சிறப்படைந்த

## 22. ஒரு பன்றியின் கதை.

மாளவ தேசத்தில் கடக் என்ற கிராமத்தில் நற்குண முள்ள தேவிலன் என்ற குயவனும், துஷ்டனுகிய தர்மிலன் என்றநாவிதனும்சேர்ந்து ஒரு தர்மசத்திரத்தைக் கட்டினார்கள். ஒருநாள் தேவிலன் ஒரு ஜைனமுனிவரை அழைத்துவந்து அதில் இருக்கச்செய்தான். துஷ்டனான நாவிதன் ஒரு பரிவ்ராஜக முனியை அழைத்துவந்து வைத்து, அங்கிருந்த ஜைன முனி வரைத் துரத்திவிட்டான். அவர் வெளியில் சென்று ஒரு மரத் தின் மேல் உட்கார்ந்து இரவு முழுதும் குளிரினாலும், கொசுக் கடியினாலும் மிக்க துன்பத்தையடைந்திருந்தார். மறுநாட் காலை அதைக் கண்ட தேவிலன் கோபமுற்று, அந்த நாவிதனோடு சண்டையிட்டு, இருவரும் மடிந்து, குயவன் ஒரு பன்றியாகவும் நாவிதன் ஒரு புலியாகவும் பிறந்தார்கள். அப்போது புலியின் குகையில் வந்து தங்கிய குப்தர், திரிகுப்தர் என்ற இரு முனி வர்களைக் கண்டு, பன்றி ஜாதிஸ்மரணையடைந்து அம்முனிவர்களை வணங்கி, வழிப்பட்டு இருந்தது. புலி தன் குகையில் மனிதர் களிருப்பதை மோப்பத்தினால் அறிந்து, அவர்களைப் பக்ஷிக்க, அவர்கள்மேல் பாய்ந்தது. அவ்வளவில், பன்றி அதனை எதிர்த்து அதனுடன் சண்டையிட்டு, இரண்டும் மரித்துப், பன்றி தேவ லோகத்தில் போய் மகர்த்திகத் தேவனாய்ப் பிறந்தது. புலி மகா துக்கத்திற்கிடமான நரகத்தை அடைந்தது.

---



# ஶ்ராவகாசார நீதிக் கதைகள்.



பக்தியினால் பூஜைக்குப் பூக்கொண்டு செல்லும் தவளை யானைக்காலினால் மிதிபட்டு தேவலோகம் அடைதல்.

**23**-வது கதை.

பக்தியினுல் சிறப்படைந்த

# 23. ஒரு தவளைக் கதை

மகத தேசத்து, இராஜக்கிரகம் என்னும் நகரில் ஸ்ரேணிக மகாராஜன் அரசு நடாத்தியிருந்தபோது அந்நகரில், நாகதத்தன் என்ற ஸ்ரேஷ்டி பவதத்தை என்ற தன் மனைவியுடன் வசித்திருந்தான். அவன் சதா மாயாசாரத்தில் வர்த்தித்து, ஆர்த்தத்தியானங்கொண்டு மரணமடைந்து, அதன் பலனுக அவன் வீட்டின் பக்கலிலுள்ள குளத்தில், ஒரு தவளையாகப் பிறந்தான். அவன் மனைவி குளத்துக்கு வரும்போதெல்லாம் அத்தவளை ஜாதிஸ்மரணையடைந்து, பூர்வஸ்நேகத்தால் அவள்மேல் தாவிக் குதித்து விளையாடியது. அதை எத்தனை தடவை தள்ளிவிட்டாலும், அவளை அது விடுவதில்லை. இதைக்கண்டு அவள், தனக்கும் அதற்கும் ஏதாவது சம்பந்தமிருக்கவேண்டும். அதனுல்தான் அது அப்படி விளையாடுகிறது என்று நினைத்து, அங்கு வந்த ஸுவ்ரதமுனிவர் என்ற அவதிக்ஞானியிடம் அதைப்பற்றிக் கேட்டனள். அவரும், பூர்வம் அது அவளுடைய பர்த்தாவாக விருந்ததைக் குறிப்பிட்டார். அதனையறிந்த பவதத்தை, அதை எடுத்துவந்து தன் வீட்டில் வைத்து மிகப் பிரேமையுடன் காப்பாற்றி வரலானுள்.

இஃதிவ்வாருக, ஒருநாள் அந்நகர்ப்புறத்து வைபார பர்வதத்தின்மிசை ஸ்ரீ வர்த்தமானஸ்வாமி எழுந்தருளியதை, வனபாலகனுலறிந்த அரசன், அதனை ஆனந்தமுரசமறைவித்துத் தன் நகர்ச்சனங்களுக்கு அறிவித்துத் தான் பூஜாத் திரவியங்களுடன் சமவசரணத்துக்குச் சென்ருன். பவதத்தையும் மற்ற ஜனங்களுடன் சுவாமி தரிசனத்துக்குச் சென்ருள். அப்போது அந்தத் தவளையும், பக்தியால் ஒரு தாமரையிதழை வாயில் கௌவிக்கொண்டு சமவஸரணத்துக்குப் புறப்பட்டது. ஆனுல், அது போகும் வழியில் ஒரு யானையின் காலால் மிதிபட்டு இறந்து, பூஜானுராகத்தினுல் ஏற்பட்ட புண்ணியத்தினுல், அப்பொழுதே சௌதர்ம கல்பத்தில்போய், மகர்த்திக தேவனுய்ப் பிறந்தது. அவ்வளவில், அவன் அவதிக்ஞானத்தால் தன் பூர்வ

பவத்தையறிந்து, ஒரு தவளை லாஞ்சனத்தையுடைய முடியை அணிந்து, உடனே ஸ்ரீ வர்த்தமானஸ்வாமி சமவஸரணமடைந்து, சுவாமியைப் பூஜித்தான். அதனைக்கண்ட ஸ்ரேணிகன் "இத்தேவன் தவளை லாஞ்சனத்தையுடைய முடியையணியக் காரணம் என்ன?" என்று ஸ்ரீ கௌதமஸ்வாமியை வணங்கிக் கேட்டான். அவரும் மேல்கண்ட அதன் விபரங்களைக்கூற, அரசனும் அங்குள்ள மற்றவர்களும் பூஜா பரிணாமத்தை அடையலானார்கள்.

சுபம். சுபம். சுபம்.

ஸ்ராவகாசார நீதிக் கதைகள் முற்றிற்று.





ஸ்ரீ வெங்கடேஸ்வர் பவர் பிரிண்டிங் ஒர்க்ஸ், கும்பகோணம்.